413

தாயுமானவர் இயற்றிய

# சுகவாரி

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின்
விரிவுரையுடன்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை–639 115 எலமனூர் ஸ்டேஷன்
திருச்சி ஜில்லா
1978

தாயுமானவர் இயற்றிய

# சுகவாரி

விரிவுரையுடன்

இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
எனருசித் திடவலியவந்(து)
இன்பங் கொடுத்தநினை எந்நேர நின்னன்பர்
இடையரு துருகிநாடி
உன்னிய கருத்தவிழ உரைகுளறி உடலெங்கும்
ஓய்ந்தயர்ந் தவசமாகி
உணர்வரிய பேரின்ப அனுபூதி உணர்விலே
உணர்வார்கள் உள்ளபடிகாண்
கன்னிகை யொருத்திசிற் றின்பம்வேம் பென்னினுங்
கைக்கொள்வள் பக்குவத்தில்
கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்
கருதிநகை யாவளதுபோல் [னெனக்
சொன்னபடி கேட்குமிப் பேதைக்கு நின்கருணை
தோற்றிற் சுகாரம்பமாஞ்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

எது போகம், எது யோகம் என்று பாகுபடுத்த வேண்டும். இவ்விரண்டுக்கும் குறிக்கோள் ஆனந்தம் எனினும் எடுத்துக்கொள்ளும் முறையோ ஒன்றுக்கொன்று ஒவ்வாததாய் இருக்கிறது. ஐம்பொறிகளைப் பயன்படுத்திப் பெறும்முறை போகம்; ஐம்பொறிகளை ஒதுக்கிவைக்கும் முறை யோகம். போகத்தில் பெறுகிற ஆனந்தம் நிலைத்

திருப்பதில்லை. ஏனென்றால் போகம் என்னும் முறையே அழிவுக் கேதுவானது. ஆதலால் அது இன்பமாகத் துவங்கி துன்பமாக முடிகிறது. ஆனால் யோகமோ இன்பமாகத் துவங்கி இன்பமாகத் தொடர்ந்துபோய் இன்பமாகவே முற்றுப்பெறுகிறது. அப்படியிருந்தும் யோகத்தை நாடுபவர் மிகச்சிலரே. ஏனென்றால் ஐம்பொறிகளை ஒதுக்கி வைப்பது எளிதன்று. ஐம்பொறிகளைப் புறக்கணிப்பது வாழ்க்கையையே புறக்கணிப்பதற்கு ஒப்பாகிறது. ஆயினும், ஐம்பொறிகளைப் பயன்படுத்திக்கொண்டிருப்பதற்கிடையிலேயே போகத்தை யோகமாக மாற்றமுடியும். உணவு உண்பது போகத்தின் கூறு. உயிர்களோ உணவு உண்ணாது உயிர்வாழமாட்டா. யோகியும் உணவு உண்கிறான். ஆனால் அவன் உணவு உண்கிற முறைக்கும் போகி உணவு உண்கிற முறைக்கும் வேற்றுமை உண்டு. தான் போற்றும் பரம்பொருளுக்கு அமுது படைக்கும் முறையில் யோகி உணவு உண்கிறான். தனது சொந்த சுகஜீவனத்துக்காக போகி உணவு உண்கின்றான். நாவுக்கினியதையெல்லாம் போகி உணவாக எடுத்துக்கொள்கிறான். நாவுக்கு இனியதாயிருப்பதோடு கூட நல்லவைகளாயிருப்பவைகளை யோகி உணவாக எடுத்துக்கொள்கிறான். அத்தகைய நல்ல உணவை வழிபடு தெய்வத்துக்கு நைவேத்தியமாகப் படைப்பதில் ஆனந்தம் ஒன்று ஊறுகிறது. அந்த ஆனந்தத்தை முன்மாதிரியாக வைத்துக்கொண்டு இந்திரியங்களுக்கெல்லாம் அப்பாலிருக்கும் பேரானந்தத்தின்கண் யோகி தனது கருத்தைச் செலுத்துகிறான். யோக சாதனத்துக்கும் தூய வாழ்வுக்கும் பொருத்தமாயுள்ள நல்லுணவு வகைகள் சிலவற்றைத் தாயுமானவர் எடுத்துரைக்கின்றார். அவைகள் போகி யோகி ஆகிய இருவருக்கும் ஆனந்தத்தையூட்டு

கின்ற தெனினும் யோகியானவன் அந்த ஆனந்தத்தை இறைவனோடு இணைத்துவைக்கிறான். கருத்துக்கு எட்டாத பேரானந்தத்தைக் கருத்துக்கு எட்டுகிற போஜன ஆனந்தத் தோடு ஒப்பிடுகிறான் யோகி. அப்படி அவன் ஒப்பிடுவதைத் தாயுமானவர் வாக்கின் மூலமாக எடுத்துக்கொள்வோம். **இன் அமுது, கனி, பாகு, கற்கண்டு, சீனி, தேன் என ருசித்திட** என்று இந்திரிய அனுபவத்துக்கு எட்டுகிற இன்பத்தை முன்மாதிரியாக வைத்துக்கொள்கிறார். இப்படி அவர் குறிப்பிடுகிற உணவு வகைகளெல்லாம் ஆத்மசாதக னுக்கு ஏற்புடைய நல்லுணவுகளேயாம். அவைகளை அள வெடுத்து உண்ணுங்கால் ஆனந்தம் உண்டாகிறது. அது போகானந்தம் அல்ல; யோகானந்தமே. ஏனென்றால் அப் படி உண்பதின் எதிர்ச்செயலாக ஆத்மசாதகனுக்குத் துன்பம் வருவதில்லை. துன்பமாக மாறாத இன்பங்களெல் லாம் பரம்பொருளிடத்திலிருந்து வருகிற பேரானந்தத்துக்கு ஒப்பானவைகளாம்.

போகப் பொருள்களை நுகரும் பொழுது இன்பம் பிறக் கிறது; நுகரநுகர இன்பம் தேய்கிறது. பின்பு அது துன்ப மாகவே முடிகிறது. இந்த போகத்தை ஒதுக்கி வைப்ப வனுக்கோ பேரானந்தம் இயல்பாக அமைந்திருக்கிறது என் னும் கோட்பாட்டை **வலியவந்து இன்பங்கொடுத்த நினை** என்று பரம்பொருளைத் தாயுமானவர் சுட்டிக் காட்டுகிறார். பரம்பொருளிடத்திலிருந்து வருகிற இன்பம் போக்கற்றது, வரவற்றது, புணர்வற்றது. யாண்டும் அது தன்மயமாய் நிலைத்துள்ளது.

போகத்தில் வருகிற ஆனந்தம் நிலையற்றது. ஆதலால் சிறிது காலத்துக்கு போகி ஒருவன் போகத்தினின்று விலகி யிருக்கிறான். பின்பு மீண்டும் அதே போகத்தின் மூலம்

ஆனந்தத்தைப் பெற முயலுகிறான். ஆனந்தம் கிட்டுவது போன்று தோன்றி பின்பு அது கைநழுவிப் போய்விடுகிறது. ஒரு விதத்தில் போகத்தில் அருவருப்பும் சிறிது நேரத்துக்கு வருகிறது. பின்பு அந்த அருவருப்பு போக நாட்டமாக மீண்டும் வடிவெடுக்கிறது. எனவே போகானந்தத்தை நாடவும் புறக்கணிக்கவும் செய்து வருகிறான் போகியானவன். ஆனால் யோகியின் நிலையோ அதற்கு நேர்மாறானது. யோகானந்தத்தை நாடுதலில் ஆனந்தம்; அந்த நாட்டத்தைத் தொடர்ந்து கொண்டுசெலுத்துதலில் ஆனந்தம்; எவ்வளவு காலத்துக்கு அந்த நாட்டமானது உள்ளத்தை வாட்டிக் கொண்டிருக்கிறதோ அவ்வளவு காலத்துக்கு அதைப்பற்றிய ஆனந்தமும் உள்ளத்தில் ஊற்றெடுத்துக் கொண்டேயிருக்கிறது. போகத்தை நாடி உள்ளம் உருகுமிடத்து அவ்வுள்ளம் உறுதியற்றதாகிறது; அது விவேகத்தை இழக்கிறது. ஆனால் இறைவனோடு யோகம் பண்ண முயன்று மனது உருகுமளவு அந்த மனது உறுதிபெறுகிறது. விவேகம் அதனிடத்துத் தெளிவடைகிறது. இதுவே இறைவனிடத்து அன்பு வைத்துள்ள யோகியர்களுக்கும் போகப் பொருள்களில் அன்பு வைத்துள்ள போகியர்களுக்கும் இடையில் உள்ள வித்தியாசமாம். இக்கோட்பாட்டை எந்நேரம் நின் அன்பர் இடையறாது உருகி நாடி என்று தாயுமானவர் பகர்கிறார்.

தீயில் வெண்ணெய் உருகுகிறது. அதே முறையில் போகத்திலும் யோகத்திலும் மனது உருகுகிறது. வெளித் தோற்றத்துக்கு அவ்விரண்டின் விளைவும் ஒன்று போல் தென்படலாம். ஆனால் யோகத்தில் உருகுகிற உருக்கமும் போகத்தில் உருகுகிற உருக்கமும் வடதுருவம் தென்துருவம் போன்று ஒன்றுக்கொன்று வெகு தூரமானவைகளாம்.

ஒன்று யோகியை இறைவனுடைய சந்நிதிசேர்த்து அவனை மேல்நிலைக்கு எடுக்கிறது. மற்றது போகியை பிரபஞ்ச வாழ்வில் தள்ளிக்கெடுக்கிறது. இனி, விளைவுகளை ஒன்றன் பின் ஒன்றாக ஆராய்ந்து பார்ப்போம். **உன்னிய கருத்து அவிழ** என்பது முதல் விளைவு. மனதில் உண்டாகின்ற நினைவுகளும் எண்ணங்களும் நெகிழ்ந்து போய்விடுகின்றன என்பது இதன் கருத்து. பேரானந்தத்தில் மனம் அடங்கி யிருப்பது வேறு; துன்பமாகப் பரிணமிக்கும் சிற்றின்பத் தில் மனம் அடங்கியிருப்பது வேறு. துன்பம் சிற்றின்பத் தின் விளைவு. ஆனந்த மடைதலும் ஆனந்தத்துக்கு அதீதத் தில் போவதும் யோக முயற்சியின் விளைவு. **உரைகுளறி** என்பது அடுத்த விளைவு. சான்றோர் இணக்கத்தில் வரு கிற பேரானந்தத்தை முன்னிட்டு சொல் தடுமாற்றம் வருவ துண்டு. கெட்டவர்களுடைய கூடாத சகவாசத்தை முன் னிட்டு சொல் தடுமாற்றம் வருவதுண்டு. சொல் தடுமாற்றம் பொது எனினும் முந்தையது மனிதனை மேன்மைப்படுத்து கிறது; பிந்தையது சிறுமைப்படுத்துகிறது. **உடலெங் கும் ஓய்ந்து** என்பது மூன்றாவது விளைவு. நல்லார்க்குப் பணிவிடை செய்து உடல் மெலிந்து போய்விடுவதுண்டு. துன்மார்க்கத்தில் உழன்று உடல் மெலிந்து போவதுண்டு. முந்தைய மெலிவு மனிதனை மேலோன் ஆக்குகிறது. பிந்தைய மெலிவு அவனைக் கீழோன் ஆக்குகிறது. **அயர்ந்து** என்பது நான்காவது விளைவு. தளர்வடைந்து என்பது அதன் பொருள். தீர்த்த யாத்திரை போய் ஒருவன் தளர்வடைகின்றான். திருடுதல் போன்ற துன்மார்க்கத்தில் போய் மற்றொருவன் தளர்வடைகிறான். முந்தையவ னது உடல் அழிந்து போவதாயிருந்தாலும் யாத்திரிக னுக்கு ஆனந்தமும் திருப்தியும் உண்டு. மற்றவனுக்கோ

தோல்வியும் துன்பமும் உருவெடுக்கின்றன. அவசமாகி என்பது ஐந்தாவது விளைவு. சுவாதீனத்தை இழந்துவிட்டுப் பராதீனமாதல் என்பது அதன் பொருள். யோகி கடவுளுக்கு உரியவனாகிறான். போகி இந்திரிய சுகத்துக்கு உரியவனாகிறான். முந்தையது சூரியப் பிரகாசம் போன்று நித்தியமானது; பிந்தையது மின்னல் போன்று அநித்தியமானது.

இனி, பெருவாழ்வுக்கும் சிறுவாழ்வுக்கும் உள்ள வேற்றுமை அததுக்குரிய விளைவின் மூலமாக நன்குவிளக்கப்படுகிறது. **உணர்வரிய பேரின்ப அனுபூதி உணர்விலே உணர்வார்கள்** என்று மெய்யன்பர்களையும் யோகியர்களையும் பற்றித் தாயுமானவர் பகர்கிறார். இதற்கு நேர்மாறாக போகியர்களோ நிலைகுலைந்து தங்கள் சொரூபத்தையே இழந்துவிடுகின்றனர். கடலை நாடுகிற மழைத்துளி கடல் ஆகிறது. காய்ந்த நிலத்தை நாடுகிற மழைத்துளி இருக்குமிடம் தெரியாது ஆவியாய்ப் போய்விடுகிறது. இதுவே யோக நாட்டத்துக்கும் போக நாட்டத்துக்கும் இடையில் உள்ள வித்தியாசம்.

யோகத்திலே போகிறவர்கள் பரம்பொருளுக்கு உரியவர்கள் ஆகிறார்கள். அதைக் குறித்து **உள்ளபடிகாண்** என்கிறார் தாயுமானவர். பெருநெறி செல்லுகிறவர்கள் பெறுகிற பேறே உண்மையானது. மற்றதெல்லாம் வீண் என்பது அதன் கருத்து.

உலக மக்களுள் பெரும்பான்மையோர் ஏன் யோகத்தை நாடுவதில்லையென்றால் அதன் பெருமையும் பேரானந்தமும் எல்லார்க்கும் விளங்குவதில்லை. உலகத்தவர் இயல்பு ஒன்றை அதற்கு நல்ல சான்றாகத் தாயுமானவர் எடுத்துக் கொள்கிறார். **கன்னிகை ஒருத்தி சிற்றின்பம் வேம்பு என்னினும் கைக்கொள்வள் பக்குவத்தில். கணவன்**

அருள் பெறின்முனே சொன்னவாறு என்னெனக் கருதி நகையாவள். சிறுமி ஒருத்திக்கு கணவனோடு கூடி வாழ்ந் திருப்பதைப்பற்றி ஒன்றும் தெரியாது. வேப்பங்காய் உண் பதை உலகத்தவர் வெறுப்பது போன்று சிறுமி ஒருத்தி சிற்றின்ப வாழ்வை வெறுக்கின்றாள். ஆனால் பக்குவ மடைந்து கணவனைச் சேர்ந்து அவனுடன் வாழ்ந்திருக்கிற பொழுது தன் கருத்தை மாற்றிக்கொள்கிறாள். தான் முன்பு கொண்டிருந்த கருத்தை மீண்டும் அவள் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்வதில்லை. புதிய வாழ்விலேயே அவள் கண்ணுங்கருத்துமாய் இருந்துவிடுகிறாள்.

பக்குவமடைந்த வனிதை யொருத்தி தனது நாயக னுடைய இணக்கத்தைப் பெறுதற்கு ஒப்பானது ஆத்ம சாத கன் ஒருவன் இறைவனுடைய அருளைப் பெறுவது. அவ் அரு ளைத் தொடர்ந்து யோகம் என்னும் பெருவாழ்வும் பேரானந்த மும் தாமாகவே உண்டாகின்றன. இக்கோட்பாட்டை அது போல் சொன்னபடி கேட்கும் இப்பேதைக்கு நின்கருணை தோற்றிற் சுகாரம்பமாம் என்று அண்ணல் இயம்புகிறார். இக்கருத்துக்கள் யாவும் இப்பாடலில் அடங்கியுள.

## 2. சுகவாரி

அன்பின்வழி யறியாத என்னைத் தொடர்ந்தென்னை
அறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்துநான்
அற்றேன் அலந்தேன்என
என்புலன் மயங்கவே பித்தேற்றி விட்டாய்
இரங்கியொரு வழியாயினும்
இன்பவெள மாகவந் துள்ளங் களிக்கவே
எனைநீ கலந்ததுண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்குமுண்டோ
தமியனேற் கிவ்வணந் திருவுள மிரங்காத
தன்மையால் தனியிருந்து
துன்பமுறி னெங்ஙனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்கும்உரையாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

சாதகபட்சி என்பது ஒன்று உண்டு. அது எப்பொழுதும் வானத்திலேயே வசித்திருக்கிறது. மழை நீரை அருந்தி அது உயிர் வாழ்ந்திருக்கிறது. சாவதாயிருந்தாலும் பூமியில் படிந்த நீரை அது தொடுவதில்லை. வானத்திலேயே அது முட்டையிடுகிறதாம். பூமியை நோக்கி விழுந்துகொண்டிருக்கிற அம்முட்டை பூமியில் படுவதற்கு முன்பே பொரித்துக்கொள்கிறது. பொரித்த குஞ்சுப் பறவை தன்னுடைய யதாஸ்தானம் வானவெளியே யொழிய பூமியல்ல என்று உணர்ந்து அது மேல் நோக்கிப் பறக்கிறது. இங்ஙனம்

சாதக பட்சி யாண்டும் உயர்நிலையிலேயே இருந்து வருகிறது. மண்ணுலக வாழ்வு என்னும் கீழ்நிலைக்கு அது இறங்குவதில்லை. உலகில் பிறக்கிற சில சுத்த ஆத்மாக்கள் இந்த சாதகபட்சியுடன் ஒப்பிடப்படுகிறார்கள். சுகப்பிரமத்தையும் ஞானசம்பந்தரையும் அந்தக்கூட்டத்தில் சேர்க்கலாம். அவர்கள் உலகில் பிறக்கிறார்கள் எனினும் உலக வாழ்வில் கட்டுப்படுவதில்லை. சின்னஞ்சிறு வயதிலிருந்தே அவர்களுடைய அன்பு தெய்வத்திடத்து வைக்கப்பட்டதாகிறது. ஊசியானது காந்தத்தினிடம் கவரப்படுவதுபோன்று அவர்களுடைய தூய உள்ளம் பரம்பொருளாலேயே கவரப்படுகிறது. வயது ஏற ஏற இறைவனிடத்து வைக்கவேண்டிய பேரன்பே அவர்களுடைய உள்ளத்தில் ஓங்குகிறது. அப்பேரன்புக்கேற்ற பெருவாழ்வு அவர்களுக்குச் சொந்தமாகிறது. ஆனால் அப்பெரு வாய்ப்பு மக்கள் எல்லார்க்கும் அமைவதில்லை. இறைவனிடத்து வைக்க வேண்டிய பேரன்பை உலகத்தவர்கள் உலக ஆசையாக உள்ளத்தில் மாற்றியமைத்துவிடுகின்றனர். கண்ணைக் கவரக்கூடிய பொம்மைகளையும் ஏனைய பொருள்களையும் குழந்தைகளுக்குக் காட்டி அப்பொம்மைகளிடத்துப் பற்று வரும்படி அவர்கள் செய்கின்றனர். உணவு உண்பதில் ஊக்கம் கொண்டுள்ள சிறு குழந்தைகளுக்குப் பலவிதமான தின்பண்டங்களைக் கொடுத்து அவைகளிடத்துப் பற்று வரும்படி செய்துவிடுகின்றனர். உற்றார் உறவினரைப்பற்றிக் காதில் ஓதி ஓதி குழந்தைகளுக்கு உறவினர்களிடத்துப் பந்த பாசத்தை வளர்க்கின்றனர்.

இயற்கையிலுள்ள சக்திகளுள் ஒரு சக்தியை இன்னொரு சக்தியாக மாற்றியமைக்கலாம். உதாரணமாக மின் சக்தியை வெளிச்சம் என்கிற சக்தியாகவும் வெப்பம் என்கிற சக்தி

யாகவும் ஓசை என்கிற சக்தியாகவும் மாற்றமுடியும். காந்த சக்தியை மின்சக்தியாக மாற்றலாம். மின் சக்தியை காந்த சக்தியாக்கலாம். ஜடசக்தியைப் பற்றிய இவ்வுண்மை சித்சக்திக்கும் பொருந்துகிறது. உயிர்களிடத்து இயல்பாக அமைந்துள்ள அன்பு சித்சக்தி எனப்படுகிறது. இவ் அன்பை தெய்வத்திடத்துத் திருப்பிவிட்டால் இது பக்தி என்னும் பெயர்பெறுகிறது. இதே அன்பை உலக ஆசை யாக மாற்றிவிட்டால் உலகில் பந்தப்பட்டவனாக ஜீவன் மாறிவிடுகிறான். மனிதன் படுகிற துயரங்கள் அனைத்துக் கும் ஆசை மூலகாரணமாகிறது. ஆசையானது பரம்பொருள் ஆசையாய்விடுமிடத்து துயரங்களெல்லாம் அகன்று போய் விடுகின்றன. அது உலகுக்குரிய ஆசையாக வடிவெடுக்கு மிடத்துத் துயரங்கள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. அனாவசியமாக வருவிக்கப்பட்டுள்ள உலக ஆசையின் காரணமாக உயிர்கள் ஓயாது வேதனைப்பட்டுக் கொண்டி ருக்கின்றன. பிறவிகளையும் ஆசையின் மூலமாகவே உயிர் கள் வளர்த்துக்கொண்டிருக்கின்றன.

இனி, பொறிகளைப்பற்றிய உண்மை ஒன்று உண்டு. தெய்வ நாட்டத்தில் ஐம்பொறிகளைப் பயன்படுத்தினால் அவைகள் தூயவைகளாகத் திருந்தியமைகின்றன. பொருள் களையெல்லாம் உள்ளபடி பொருள் படுத்துதற்கும் அப் பொழுது அப் பொறிகள் பயன்படுகின்றன. மற்று, அதே பொறிகளை உலக ஆசைகளை நிறைவேற்றுதற் பொருட்டுப் பயன்படுத்துமளவு அப்பொறிகள் பாழ்பட்டுவிடுகின்றன. பொருள்களைத் திரிவுபடுத்திக் காட்டும் சீர்கேடு அப்பொறி களுக்கு வந்துவிடுகிறது. திரிவுபட்ட காட்சி மனிதனை மேலும் மேலும் கீழ்மையில் ஆழ்த்துகிறது. மனிதனை எடுப்ப தற்குப் பதிலாக அவனைக் கெடுக்கிறது. மனிதன் பேரா

னந்தத்தில் மலர்ந்திருப்பதற்கு மாறுக பிரபஞ்ச அல்லலுக்கு உட்பட்டு வாடுகின்ருன். இக்கருத்துக்களையெல்லாம் அடக்கித் தாயுமானவர் **அன்பின் வழியறியாத என்னைத் தொடர்ந்து என்னை அறியாத பக்குவத்தே ஆசைப் பெருக்கைப் பெருக்கிக் கொடுத்து நான் அற்றேன் அலந்தேன் என என்புலன் மயங்கவே பித்தேற்றி விட்டாய்** என்று இயம்புகிருர். ஜீவன் தெய்வத்துக்குரியவன் என்பதை அறிந்துகொள்ளுதற்கு முன்பு உலகத்துக்குரியவன் என அவனுக்கு மையல் ஊட்டப்படுகிறது. அருளாசையானது பிரபஞ்சப் பொருளாசையாக மாற்றியமைக்கப்படுகிறது. இறைவனுடைய சாந்நித்தியத்தில் தெளிவடைந்திருப்பதற்கு மாறுகப் பிரபஞ்ச ஊழலில் மனிதன் மயங்கிப் போய்விடுகிருன். மனிதனை எடுக்கிற தெய்வீகப் பித்தம் மனிதனைக் கெடுக்கிற பிரபஞ்சப் பித்தமாய் மாற்றியமைக்கப் படுகிறது.

ஜீவர்களைப்பற்றிய மற்ருேர் உண்மை ஆராய்ச்சிக்குரியது. பழக்கத்தால் உயிர் வகைகள் அற்பப் பொருள்களில் சுகம் கண்டு வருகின்றன. தங்களுக்கு நல்ல சுகத்தைத் தரக்கூடிய மேலாம் பொருள்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன என்பதே உயிர்களுக்குத் தெரியாது. இதை ஒரு உபமானக் கதையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளக்குகிருர். விறகு வெட்டி ஒருவன் காட்டில் விறகு வெட்டி விற்று உயிர் வாழ்ந்து வந்தான். வனத்தினின்று வெளியே வந்துகொண்டிருந்த அவனைப் பார்த்த வழிப்போந்த முனிவர் ஒருவர் 'மேலும் உள் நோக்கிச் செல்' என்று சொல்லிவிட்டுப் போனுர். அடுத்த நாள் விறகு வெட்டி வனத்தினுள் மேலும் உள்நோக்கிச் சென்ருன். சந்தனக் கட்டைகள் அகப்பட்டன. அதற்கேற்ற வருவாய் கிடைத்தது. மேலும் உள்

நோக்கிச் சென்ருன். அதற்கேற்ற வருவாய் தாமிரதாதுவிட மிருந்து கிடைத்தது. மேலும் உள்நோக்கிச் சென்ருன். வெள்ளி தாது கிடைத்தது. வருவாய் அதிகரித்தது. மேலும் உள்நோக்கிச் சென்ருன். பொன் கிடைத்தது; ரத்ன வகைகள் கிடைத்தன. மேலும் மேலும் உள்நோக்கிச் சென்றதின் விளைவு அது. அது போன்று ஆத்ம சாதகன் ஒருவன் ஆனந்தத்தை நாடி புற உலகில் அலைந்து திரிவதற்குப் பதிலாக அகவுலகில் உள்நோக்கிச் செல்லவேண்டும். உள் நோக்கிச் செல்லுமளவு ஆனந்தம் பேரானந்தமாகிறது. இறுதியில் பேரானந்த சொருபமாகிய பரம்பொருளே அடையப் பெறுபவர் ஆகிருர். உலக வியவகார நிலையில் வைத்து இக்கோட்பாட்டை விளக்குமிடத்து தேனின் சுவையை அறிகிறவன் பிறகு பாகை நாடமாட்டான். அமிர்தத்தின் இனிமையை அறிகிறவன் மதுபானத்தை நாடமாட்டான். இறைவனிடத்திருந்து வருகிற ஆனந்தத்தை ஒரு தடவையாவது ரசித்துப்பார்க்கிறவன் பிறகு பிரபஞ்ச இன்பத்தை நாடமாட்டான். இறைவனிடத்திருந்து வருகிற பேரானந்தத்தை சாதகன் சுவைக்கும்படி ஏதேனும் ஒரு விதத்தில் சான்ருேர்கள் செய்துவிடுவார்களாகில், அல்லது தெய்வானுக்கிரகம் செய்துவிடுமாகில் பிறகு அந்த சாதகனுக்கு நாட்டமெல்லாம் பேரானந்த நாட்டமாய்விடுகிறது. பிரபஞ்ச நாட்டம் தானே குறைந்துபட்டுப் போகிறது. இக்கோட்பாட்டை தெய்வத் திடத்து முறையிடுகிற விதத்தில் தாயுமானவர் வெளியிடுகிருர். இரங்கி யொருவழியாயினும் இன்பவெள்ளமாக வந்து உள்ளங்களிக்கவே எனை நீ கலந்ததுண்டோ? ஒருவழியாயினும் என்னும் சொல்லுக்குப் பொருள் ஒரு தடவையாவது என்பதாம்.

மலர்களைப்பற்றிய நியதி ஒன்று உண்டு. தக்க பருவம் வரும்பொழுது அவைகள் தாமாகவே மலர்ந்துவிடுகின்றன.

அப்படி மலர்ந்ததும் அவைகளை நாடி வண்டுகளும் தேனீக் களும் தாமாகவே வந்துவிடுகின்றன. வண்டுகளை யாராவது சென்று, வாவென்று அழைப்பதில்லை. அவைகள் மலர்க ளிடத்து வருவதற்கு மூன்று காரணங்கள் இருக்கின்றன. மலரானது மலர்ந்தவுடனே தனது அழகிய நிறத்தையும், இனிய மணத்தையும் வெளிப்படுத்தி வண்டுகளிடத்துக் கவர்ச்சியை உண்டுபண்ணிவிடுகின்றன. கண்ணைக் கவர் வது நிறம். மோப்பும் திறமையைக் கவர்வது மணம். நாவைக் கவர்வது தேன். இப்படி மூவித மகிமைகள் மலருக்கு வரு வதற்குத் தக்க பருவமே காரணமாகிறது. மலர்தற்கு முன்பு மலரானது முகைகள் அல்லது அரும்புகளாக இருக்கின்றன. இந்த அரும்புகளிடத்து மலர்களிடத்திருப்பதைவிட் அதிக மான தணுப்பு இருக்கிறது. அதை முன்னிட்டு அரும்புகள் தண்முகை எனச் சொல்லப்படுகின்றன. கோடையிலே மேனியின்மீது பட்டுக் குளிர்ச்சியையும் இனிமையையும் ஊட்ட வல்லவைகளாக தண்முகைகள் இருக்கின்றன வெனி னும் அவைகளிடத்து வண்டுகள் ஒருபொழுதும் வருவதில்லை. தண்முகைகளுக்கு ஒப்ப மனிதன் ஒருவனிடத்து இன்னியல்பு ஏராளமாக அமைந்துவிடலாம். அப்படி அவன் இனிமை வாய்க்கப் பெற்றவன் எனினும் இறைவனிடத்திருந்து வரு கிற பேரானந்தத்தில் திளைத்திருப்பவன் ஆகான். இனிமை நிறைந்த ஆத்மசாதகன் ஒருவனுக்குப் பேரானந்தம் எப் பொழுது வருகிறது என்னும் கேள்வி எழலாம். தண்முகை யானது இத்தனை நாட்களில் பூக்களாக மலர்ந்துவிடும் என்று காலத்தைக் கணக்குப் போட்டுச் சொல்லிவிடலாம். ஆத்மசாதகன் ஒருவனுக்கு இறைவனுடைய பேரானந்தம் எப்பொழுது கிட்டும் என்று அதற்குரிய காலத்தை அளந்து சொல்ல யாருக்குமே இயலாது. காலவரையறையில் அது

கட்டுப்படுவதல்ல. இறைவனுடைய அருள் முதலில் வருகிறது. பிறகு அருளைத் தொடர்ந்து பேரானந்தம் தானாக வருகிறது. அருளும் ஆனந்தமும் ஆத்ம சாதகனுக்கு வாய்ப்பதை இரண்டு உபமானங்களைக்கொண்டு விளக்கலாம். அரசன் ஒருவன் ஏழைக் குடிமகன் ஒருவனைப் பார்க்க அவன் வீட்டுக்குச் செல்லத் தீர்மானித்தால் முதலில் அதற்குத் தேவையாயிருக்கும் தட்டுமுட்டுச் சாமான்களை அனுப்பி வைக்கிறான். பிறகு தானே அவ்வேழைக் குடிமகன் வீட்டுக்குப் போய்ச் சேருகிறான். சூரிய உதயத்தை மற்றொரு உபமானமாக எடுத்துக்கொள்ளலாம். சூரியன் உதயமாவதற்கு முன்பு கிழக்கே முதலில் வெளுத்து வருகிறது, பிறகு செவ்வானம் உண்டாகிறது. அதன் பிறகு சூரியன் தோன்றுகிறான். அரசன் தான் வருவதற்கு முன்பு ஏழை வீட்டுக்குச் சாமான்களை அனுப்பி வைத்தது போன்றும், சூரியன் உதயமாவதற்கு முன்பு கிரணங்களை அனுப்புவது போன்றும் பேரானந்த சொரூபியாகிய பரம்பொருள் உள்ளத்தில் சுயஞ்சோதியாய் ஒளிர்தற்கு முன்பு ஆத்ம சாதகனிடத்து அருளை எடுத்து வழங்குகிறார். அவ்வருளுக்குப் பாத்திரமாவதற்குக் காலவரையறை கிடையாது. பூ இன்ன பருவத்தில் மலரும் என்று சொல்லுவது போன்று அருள் இன்ன பருவத்தில் வாய்க்கும் என்று யாருமே அறுதியிட்டு இயம்ப முடியாது. அது நொடிப் பொழுதில் வாய்க்கலாம்; கல்பகாலத்துக்குப் பிறகு கைகூடலாம். அருள் வேண்டுமென்று அருள் நாட்டம் கொண்டிருப்பது ஒன்றே சாதகன் செய்யக்கிடக்கும் கடமையாகும். அருள் கிட்டவில்லையே என்று பல ஜன்மாந்திரங்களில் அவன் வருந்தவேண்டியிருக்கலாம். இக்கருத்துக்களையெல்லாம் தொகுத்துத் தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டு உண்டு, தண்முகை தனக்கு முண்டோ? தமிய

னேற்கு இவ்வணம் திருவுளம் இரங்காத தன்மையால் தனியிருந்து துன்பமுறில் எனத் தாயுமானவர் பகர்கிறுர்.

அழுத பிள்ளை பால்குடிக்கும் என்பது பழமொழி. அதற்கொப்ப ‘வல்வினையேன் அழுதால் உன்னைப் பெற லாமே’ என்று மாணிக்கவாசகர் மொழிகிறுர். அதே முறை யில் தாம் துன்பமுறுவதைக் குறித்துத் தாயுமானவர் முறை யிடுகின்றுர். அப்படி முறையிடுகின்றவர் தமக்கு வாய்க்க வேண்டியது இன்னது என்பதையும் எடுத்து விண்ணப் பித்துவிடுகின்றுர். இறைவனும் இறைவனுடைய அன்பர் களும் ஒன்றுபட்டவர்கள் ஆவார்கள். தீயைச் சேர்ந்த இரும்பும் தீ ஆய்விடுவது போன்று இறைவனுடைய அன் பர்கள் இறைவனிடத்துள்ள பேரானந்தத்துக்குப் பாத்திர மாகிறுர்கள். உலகத்தில் உள்ளவர்களும் ஆனந்தத்தை நாடி அலைந்து திரிகிறுர்கள். ஆனல் இவ்வுலக வாழ்வு என்பது காரிருள் செறிந்த நள்ளிரவுக்கு ஒப்பானது. இடை யிடையே தென்படும் மின்னல்களுக்கு ஒப்பானது இவ் வுலகம் தருகிற இன்பம். இதில் அகப்படுகிற சிறிய இன் பத்துக்காக உலகம் படாதபாடு படுகிறது. அல்லும் பகலும் அதன் பொருட்டே உழைத்து வருகிறது. இந்த அற்பசுகத் தின் பொருட்டு இவ்வளவு பாடுபடுவது என்றுல் இறைவ னிடத்திருந்து வருகிற அழியாத சுகத்துக்காக இன்னும் எவ்வளவு தூரம் பாடுபட்டாக வேண்டும் என்பதைக் கடைத்தரமான சாதகர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. அருள் நாட்டம்கொண்டு ஏதோ சிறிது முயற்சி செய்கின்ற னர். பிறகு அதில் சலிப்பு ஏற்பட்டு அதைப் புறக்கணித்து விட்டு மீண்டும் அழியும் தன்மையுடைய உலக சுகத்தையே நாடித் திரிகின்றனர். ஆனல் தீவிரமான ஆத்ம சாதகர்கள் சாதகபட்சி போன்று ஆய்விடுகின்றனர். உலக சுகத்தை

அவர்கள் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. அவர்களுடைய பான்மை எத்தகையது என்பதை நாம் அறிந்துகொள்வது அவசியமாகிறது. வணிகன் ஒருவன் வியாபாரத்தில் தொல்லைகள் பல இருக்கின்றன எனக் காண்கிறான். வாணிபத்துக்குப் பதிலாக கிருஷித் தொழிலை எடுத்துக் கொண்டால் பூமியில் விதையிட்டால் போதுமானது; விளைவு தானாக வந்து குவிகிறது எனக்கருதி கிருஷியில் பிரவேசிக் கிறான். அத்தொழிலை எடுத்துக்கொண்ட பிறகு அதிலுள்ள இடையூறுகள் அவனுக்கு விளங்குகின்றன. இரண்டு மூன்று வருஷங்களுக்குத் தொடர்ந்து மழையில்லாது போய்விட்டால் பூமியில் போட்ட விதையெல்லாம் வீணாய்ப்போய்விட்டதென அவன் சோர்வுறுகிறான். ஆனால் பரம்பரைக் குடியானவனு டைய போக்கு அத்தகையதன்று. தொடர்ந்து பன்னிரண்டு வருஷங்களுக்கு வானம் வர்ஷிக்காது போய்விடினும் கிருஷி கன் தன் கருமத்தில் சோர்வுறுவதில்லை. தான் எடுத்துக் கொண்ட கருமத்தையே இடைவிடாது செய்து வருகிறான். அத்தகைய கிருஷிகன் போன்றவன் ஆத்ம சாதனத்தில் தீவிரமாகச் செல்லும் திடபக்தன். தன் தொழிலைத் திரும் பத் திரும்ப மாற்றிக் கொண்டிருக்கும் வணிகன் போன்ற வன் அற்ப சிரத்தையுடைய ஆத்ம சாதகன். இறைவனிடத் திருந்து வருகிற அழியாத சுகத்தின் பொருட்டே அவர் கள் அல்லும் பகலும் அருள்தாகம் பிடித்தவர்களாக இருக்கிறார்கள். ஒரே விண்ணப்பத்தை அவர்கள் இறை வனிடம் எவ்வளவு காலம் வேண்டுமானாலும் சமர்ப்பித்துக் கொண்டேயிருக்கின்றனர். இக்கருத்தை எங்ஙனே அழி **யாத நின் அன்பர் சுகம் வந்து வாய்க்கும் உரையாய்!** என்று தாயுமானவர் இறைவனிடம் கேட்கிறார்.

ஆத்மசாதகன் ஒருவன் அருள் நாட்டத்தில் தீவிரமாகச் செல்லக் கடமைப்பட்டிருக்கிறான். இறைவனுடைய அருள் வாய்ப்பதற்குக் கால தாமதம் எவ்வளவு ஏற்பட்டாலும் அந்த அருள் நாட்டத்திலேயே கண்ணுங்கருத்துமாய் இருக்க வேண்டும் என்பது தாயுமானவர் கருத்து. இவை யாவும் அடங்கிய பாடல் மேலே வந்துள்ளது.

—

## 3. சுகவாரி

கல்லேனும் ஐயவொரு காலத்தில் உருகுமென்
கல்நெஞ்சம் உருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையும்நான்முகன்
கற்பிக்க வொருகடவுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
வழக்குக் கிழுக்குமுண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிறங்கிஎனை
வாழ்விப்ப துன்பரங்காண்
பொல்லாத சேயெனில் தாய்தள்ளல் நீதமோ
புகலிடம் பிறிதுமுண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலு
புன்மையே னுவனந்தோ [மாய்ப்
சொல்லால் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
சும்மா இருக்க அருளாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

காலம் எல்லையில் அடங்கியது போன்று தென்படுகிறது. ஆனல் அதற்குத் துவக்கமும் இல்லை, முடிவும் இல்லை. ஆதியந்தமில்லாத காலத்தில் ஒரு பகுதியை நாம் அறிகிறோம். அதை அளந்தெடுப்பதற்கு நிகழ்ச்சிகள் தேவையாய் இருக்கின்றன. இரண்டு நிகழ்ச்சிகளுக்கிடையிலுள்ள இடையீட்டைக் காலம் என்கிறோம். சூரியன் தோற்றத்துக்கு வருகிறது ; பிறகு அது மறைகிறது. இந்த இரண்டு நிகழ்ச்சிகளுக்குமிடையில் இருக்கும் இடையீட்டைக் காலம் என்று கணக்குப் போடுகிறோம். காலத்தை

அளவையாக வைத்துக்கொண்டு உலகின் நடைமுறையை நாம் அறிய முடியும். இயற்கையில் காலம் இரண்டுவித செயல்களைச் செய்துவருகிறது எனலாம். புதிய பொருள்களை ஓயாது தோற்றுவித்துக் கொண்டிருப்பது ஒருவிதச் செயல். பழைய பொருள்களை ஓயாது ஒடுக்கிக்கொண்டிருப்பது மற்றொரு விதச் செயல். இவ்விரண்டினுள் ஒடுக்குதல் என்னும் செயலை விரிவாக ஆராய்ந்து பார்ப்போம். உலகில் ராஜ்யங்கள் எத்தனை யெத்தனையோ தோன்றியிருக்கின்றன. அவைகளையெல்லாம் காலம் எடுத்து விழுங்கிவிட்டது. யாண்டும் நிலைத்திருப்பது போன்று மலை தென்படுகிறது. ஆனால் சிறிது சிறிதாக அது தேய்வு அடைகிறது. கல்லினால் ஆனது மலை. உலகில் இருப்பவைகளுள் நெடுங்காலத்துக்கு நிலைத்திருப்பது போன்று கல் தென்படுகிறது. ஆனால் அதற்கும் தேய்வு உண்டு. வெயிலில் காய்ந்து கல் விரிவடைகிறது; பிறகு குளிரிலும் மழையிலும் அது சிறிது சுருங்குகிறது. விரிவடைவதாலும், சுருங்குவதாலும் கல்லிலுள்ள மேற்பகுதி சிறிது சிறிதாகச் சிதறடைந்து போகிறது. வெப்பத்தை முன்னிட்டு எது உருமாறுகிறதோ அதை உருகுகிறது என்கிறோம். காலத்தின் ஆதிக்கத்தால் உலகிலுள்ள பொருள்கள் உருமாறிப் போய்விடுகின்றன. இக்கோட்பாட்டை **கல்லேனும் ஐய ஒரு காலத்தில் உருகும்** என்று தாயுமானவர் பகர்கிறார். கல்லேனும் என்னும் சொல் கல்லுங்கூட எனப் பொருள்படுகிறது. ஐய என்னும் சொல் வியப்பைக் குறிக்கிறது.

நெஞ்சம் என்னும் சொல் பருப்பொருளாயிருக்கிற உடலின் ஒரு சிறு பகுதியைக் குறிக்கிறது. நுண்ணியதாய் தோற்றத்திலில்லாத உள்ளத்தையும் அச்சொல் குறிக்கிறது. இதற்கு நிகராக ஆங்கிலத்தில் ஒரு சொல் இருக்கிறது.

heart (ஹார்ட்) ஹிருதயம் என்கிறோம். உடலுக்குள்ளே யிருக்கும் ஓர் உறுப்பையும் அச்சொல் குறிக்கிறது; மனிதன் கொள்ளுகிற உணர்ச்சிகளையும் அதே சொல் குறிக்கிறது. He has no heart என்பது ஒரு ஆங்கில வாக்கியம். அதை அவனுக்கு ஹிருதயம் இல்லை என்று மொழி பெயர்க்கலாகாது. அவன் உள்ளன்பில்லாதவன் என அது பொருள் படுகிறது. அதே விதத்தில் கல் நெஞ்சம் என்று நாம் தமிழில் சொல்லுகின்றபொழுது நெஞ்சம் கல்லால் சமைக்கப் பட்டது என்று பொருள்படுத்தலாகாது. கல் நெஞ்சம் என்பதை ஈரமில்லா நெஞ்சம் என்று இயம்பலாம். ஆனால் உடம்போ எப்பொழுதும் நீர் மயமாய் இருப்பதால் அதனிடத்து ஈரம் இருக்கிறது எனினும் ஈரமில்லா நெஞ்சம் என்பது உள்ளத்தில் உணர்வு குறைந்திருக்கும் பாங்கை விளக்குகிறது. ஒரு மனிதன் எத்தகைய பாங்கு படைத்திருக்கிறானோ அதற்கேற்றபடி அவனுடைய நெஞ்சத்தில் மாறுபாடு உண்டாகிறது. கல்நெஞ்சம் படைத்தவனென்று யாரைப் பகர்வது என்னும் கேள்வி எழலாம். உயிர் வாழ்க்கையை உறுதிப்படுத்துதற்கு மக்கள் அனைவரும் முயன்று வருகின்றனர். அவர்களுக்குப் பிறவிகள் உண்டு. பிறவி தோறும் தங்கள் வாழ்க்கையைப் பலப்படுத்துதற்கென்றே மக்கள் அனைவரும் முயன்று வந்திருக்கின்றனர். யாரோ சிலர் தங்கள் வாழ்வில் கருத்துவைப்பது போன்று பிறர் வாழ்விலும் கருத்து வைக்கின்றனர். பெரும்பான்மையோர் தங்கள் சொந்த வாழ்க்கையிலேயே காலமெல்லாம் கருத்து வைப்பவர் ஆகின்றனர். பிறரிடத்து அன்பும் அனுதாபமும் காட்ட அவர்களுக்கு இயலுவதில்லை. பிறர் எவ்வளவுதான் துன்பப்பட்டாலும் அதைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. தங்கள் சொந்த நலத்திலேயே அவர்கள் யாண்டும்

கண்ணும் கருத்துமாய் இருக்கின்றனர். அத்தகைய மன நிலைக்கு சுயநலப்பற்று என்று பெயர். எவ்வளவுக் கெவ்வளவு ஒரு மனிதனுக்கு சுயநலப்பற்று இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவன் கல்நெஞ்சம் படைத்தவனுகிருன். சுயநலப்பற்று வைத்திருக்கிறவன் முன்னேற்றம் அடைபவன் போன்று வெளித்தோற்றத்துக்குத் தென்படலாம். ஆனல் மனிதனுக்கு உண்மையான முன்னேற்றம் சுயநலப்பற்றில் வருவதில்லை. பிறர் நலத்தில் கருத்து வைக்குமளவு உண்மையான முன்னேற்றம் வருகிறது. தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்கின்றவனே பெரு வாழ்வு வாழ்பவனுகின்ருன். பிறர்க்கென வாழ்ந்து பழகுகிறவனே பிறகு பாரமார்த்திகப் பெருவாழ்வுக்குத் தகுதியுடையவனுகிருன். அதை அருள் நாட்டம் என்று பகர்வதும் உண்டு. அருள்நாட்டம் கொள்ளுதலும் பிறர்க்கென வாழ்ந்து பழகுதலும் ஒரே பாங்குடையவைகள் ஆகின்றன. அப்படிப் பெருவாழ்வு வாழ்கின்றவர்களுக்குப் பிறர் நலத்தை முன்னிட்டு நெஞ்சம் இளகுகிறது. உலையிலிட்டு உலோகங்களை உருக்குகின்றவளவு உலோகங்கள் மாசு நீங்கப் பெறுகின்றன. பிறர்க்காகவென்றும் இறைவனுடைய அருளுக்காகவென்றும் யாருடைய உள்ளம் வெதும்புகிறதோ அவர்கள் மனபரிபாகம் அடைகின்றனர். வாழ்வில் மேல்நிலைக்கு இயல்பாக அவர்கள் போகின்றனர். ஆனல் அத்தகைய பரந்த மனப்பான்மை தமக்கு இன்னும் வந்து அமையவில்லையே என்று உணர்ந்த தாயுமானவர் என் கல் நெஞ்சம் உருகவில்லையே என்கிருர்.

இயற்கையினுள் ஊடுருவியிருக்கிற சக்தி வெவ்வேறு பாங்குகளில் வினையாற்றுகிறது. அத்தனைவித செயல்களையும் மூன்றுவித வினைகளாகத் தொகுத்துவிடலாம். படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூவித வினைகளில் இயற்

கையின் செயல்கள் யாவும் அடங்கிவிடுகின்றன. எள்ளில் எண்ணெய் போன்று இயற்கையினுள் ஊடுருவியிருக்கின்ற பரம்பொருள் இந்த மூன்றுவிதச் செயல்களுக்கும் மூலகாரண மாய் இருக்கிறார். மெய்ப்பொருளாகிய அவர் ஒருவர் எனி னும் செயலுக்கு ஏற்ப அந்த ஒரே பொருள் மும்மூர்த்திகள் என்று மொழியப்படுகிறார். சிருஷ்டித்தல் அல்லது படைத் தல் என்னும் செயலைச் செய்கின்றபொழுது அவருக்கு பிரம்மா, ஸ்வயம்பு, நான்முகக் கடவுள்—இப்படியெல்லாம் பெயர்கள் வருகின்றன. காத்தல் என்னும் செயலைச் செய் கின்றபொழுது அவருக்குத் திருமால் என்றும் விஷ்ணு என்றும் பெயர்கள் வருகின்றன. அழித்தல் என்னும் செய லைச் செய்கின்றபொழுது ருத்திரன் என்றும் சிவன் என்றும் அவர் அழைக்கப்படுகிறார். இயற்கைக்கே பிரம்மா அல் லது நான்முகக் கடவுள் என்னும் பெயர் வந்துள்ளது. நான்கு திக்குகளிலும் அவர் வியாபித்திருப்பதால் நான்கு முகங்களை உடையவராக அவர் கருதப்படுகிறார். பரம் பொருளிடத்திருந்து இயற்கை தோன்றி வந்திருப்பதால் அவருக்கு ஸ்வயம்பு என்னும் பெயரும் வந்துள்ளது. ஒவ் வொரு உயிர்க்கும் உயிராயிருந்து அதை அவர் உருவாக்கு கிறார். முட்டைக்குள்ளிருந்து அவர் அதைக் குஞ்சு ஆக்கு கிறார். விதையினுள்ளிருந்து அதைச் செடியாக்குகிறார். கருவினுள்ளிருந்து அதை ஜங்கம உயிர் ஆக்குகிறார். அந் தந்த உயிர்க்குரிய இயல்பாகவும் அவருடைய சக்தி தோன்று கிறது. அந்த அளவில் மக்களாகிய நமக்கு நாமே சிருஷ்டி கர்த்தாக்களாக இருக்கிறோம். நமக்குப் புறத்திலிருந்து பிரம்மதேவன் நம்மை சிருஷ்டிக்கவில்லை. நமது அந்தராத் மாவாக இருந்து நம்மை அவர் சிருஷ்டிக்கிறார். நம்மை மேல் நிலைக்கு உயர்த்துவதும் அந்த சிருஷ்டி சக்தியின் செயல்

ஆகிறது. கீழ்மையில் நம்மை ஆழ்த்துவதும் அதே சிருஷ்டி சக்தியின் செயல் ஆகிறது. பள்ளிக்கூடத்தில் பாடம் புகட்டு தல் என்னும் செயல் நிகழ்ந்துவருகிறது. அதற்கு உடந்தை யாகின்ற மாணுக்கன் அறிவாளியாகின்ருன். அச்செயலுக்கு உட்படாத மாணுக்கன் அறிவிலியாகின்ருன். அதேவிதத்தில் இறைவனுடைய கருணை என்னும் உயர்ந்ததொரு சக்தி இயற்கையில் செயலாற்றி வருகிறது. அக் கருணைக்குத் தன்னை ஆளாக்குகின்றவன் மனபரிபாகத்தில் மேன்மையடை கிருன். கருணைக்குத் தன்னைப் புறம்பாக வைத்துக்கொள் கின்றவன் கல்நெஞ்சம் படைத்தவன் போன்று ஆய்விடு கிருன். தன்னை எடுப்பதுவும் கெடுப்பதுவும் தன்னிடத்துள்ள சிருஷ்டி சக்தியின் செயல் ஆகிறது. தன்னை எடுப்பதற்குப் பதிலாக மனிதன் கெடுத்துவிடுவானுகில் அது அவனுடைய தௌர்ப்பாக்கியம். தன்னை மேன்மைப்படுத்திக்கொள்வதில் தன்னுடைய ஆற்றலைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக நெஞ்சமுத்தக்காரனுகத் தன்னைக் கீழ்மைப்படுத்திக் கொள்ளுதலில் அதே ஆற்றலை அவன் பயன்படுத்துவானுகில் அது வியப்புக்குரிய விஷயமாகும். தன் உள்ளிருந்து தன்னை அங்ஙனம் படைக்கின்ற தெய்வத்தை நொந்துகொள்ளுகிற பாங்கில் கருணைக்கிணங்காத வன்மையையும் நான்முகன் கற்பிக்க ஒரு கடவுளோ? என்று தாயுமானவர் வியந்து வினவுகிருர்.

இயற்கையினுடைய நடைமுறையில் கீழ்த்தரமான நியதி ஒன்று உண்டு. The law of the jungle—வனத்துக் குரிய சட்டம் என்று அதைப் பகர்வதுண்டு. வனத்தில் வாழ்பவைகளுக்கிடையில் வலிவுமிகப் படைத்த விலங்கு ஏனைய விலங்குகளை அடக்கியாளுகிறது. இக்கோட்பாடு நாகரிகத்தில் இன்னும் கீழ்நிலையில் இருக்கிற மக்களுக்

கிடையிலும் தென்படுகிறது. உடலுறுதி படைத்திருக்கிற மனிதன் ஒருவன் எளியவர்களை அடக்கியும் துன்புறுத்தியும் தனக்கு அடிமைப்படுத்திக் கொள்கின்றான். மக்களுக்கிடையில் சர்வ சாதாரணமாகத் தென்படுகிற வாழ்க்கைச் செயல் ஒன்றிலிருந்து இக்கோட்பாடு ஒரு பழமொழியாக எடுத்து சொல்லப்படுகிறது. மக்களில் பெரும்பான்மையோர் சாகுபடி செய்கின்றனர். ஒரு பெரிய நீர் நிலையினின்று வாய்க்கால் வெட்டி அவர்கள் அவரவருடைய நிலத்துக்கு நீர் கொண்டு வருகின்றனர். அத்தகைய மாந்தர்களுள் வலிமை மிகப் படைத்தவன் தன் வசதிக்கேற்ற பிரகாரம் வாய்க்காலை அமைத்துக்கொள்கிறான். அதனால் மற்றவர்களுக்கு இடைஞ்சல் ஏற்படுவதையும் அவன் பொருள்படுத்துவதில்லை. மற்றவர்கள் தங்களுக்கும் கொஞ்சம் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று நயந்து கேட்டுக் கொண்டாலும் அவன் அதற்கு ஒருப்படமாட்டான். தனது முரட்டுப்போக்கிலேயே அவன் நடந்துகொள்வான். இக்கோட்பாட்டை **வல்லான் வகுத்ததே வாய்க்கால்** எனும் பெருவழக்குக்கு இழுக்குமுண்டோ என்று தாயுமானவர் கேட்கின்றார். இழுக்கு என்னும் சொல் குற்றம் எனப் பொருள்படுகிறது. ஈண்டு தம்மிடத்து அமைந்துள்ள கருணைக்கிணங்காத கல்நெஞ்சத்தையே வல்லான் ஒருவனோடு அவர் ஒப்பிட்டு இயம்புகிறார். மனமானது இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாகாது தன் போக்கில் போய்விடுமாகில் அது வருந்துவதற்குரிய விஷயமாகும்.

வல்லான் ஒருவன் வாய்க்கால் நீரைத் தனக்கென்றே பயன்படுத்திக்கொள்கிறான். எளியவர்கள் அவனிடமிருந்து எந்த விதத்திலும் நீரைப்பெற இயலாதவர்களாய் இருக்கிறார்கள். என் செய்வதென்று அவர்களுக்கே விளங்குவ

தில்லே. கடவுளிடம் அவர்கள் விண்ணப்பிக்கிருர்கள். கிருபை கூர்ந்து கடவுள் வானத்தினின்று வேண்டியவாறு மழை பொழியும்படி செய்கிருர். மழை நீர் எல்லார்க்கும் பொதுவாகப் பயன்படுகிறது. தனக்குரியதென்று வல்லான் ஒருவன் அதைத் தடுத்துக்கொண்டு போய் விடமுடியாது. மனிதன் தன்னுடைய மனதைப் பண்படுத்திப் பணிவுடன் இருக்கும்படி செய்து கடவுளுடைய அருளுக்கு உரியதாக அமைக்கவேண்டும். அப்படி மனிதன் செய்யாவிட்டால் எளியவர்களுடைய நிலங்களுக்கு மழை நீரைக் கொண்டு கடவுள் உதவிபுரிந்து அவர்களுக்கு மகிழ்ச்சியூட்டுவது போன்று மனபரிபாகம் அடையாதவர்களுக்கும் அவர் கிருபை செய்யவேண்டும். மழையைத் தந்தருள்வதால் மக்களுக்கு உணவூட்டி அவர் வளர்க்கின்ருர். கருணையைப் பொழிவதால் ஆத்ம சாதகனுக்குப் பேரின்பத்தையும் பெருவாழ்வையும் அவர் கொடுத்துதவுகிருர். இக்கோட்பாட்டை **வானமாய் நின்று இன்ப மழையாய் இறங்கி எனை வாழ்விப்பது உன்பரங் காண்** என்று அவர் பகர்கிருர். பரம் என்பதற்கு பாரம் அல்லது கடமை என்று பொருள்.

கடவுளுடைய கருணைக்குச் சிறிதேனும் தகுதியில்லாதவர்கள் உலகில் இருக்கிருர்கள். அவர்களுக்குக் கடவுள் ஏன் அருள்புரிய வேண்டும் என்னும் கேள்வி எழலாம். தம்மையும் அதே நிலையில் தாயுமானவர் வைத்துக்கொள்கிருர். ஆனல் தகுந்ததொரு உபமானத்தை எடுத்துக்காட்டி கடவுளிடம் அருளை அவர் வேண்டுகிருர். தாய் ஒருத்திக்குப் புதல்வர்கள் பலர் இருக்கிருர்கள். அவர்களுள் நல்லவர்களும் உண்டு, கெட்டவர்களும் உண்டு. நல்ல புதல்வர்களுக்குமட்டும் உணவூட்டி வளர்த்தல் என்கின்ற செயல் தாயினிடத்து இல்லை. கெட்டவர்களிடத்து அவள் இன்னும்

அதிகமாகவே இரக்கம் காட்டுகிருள். நல்ல பிள்ளைகள் வேற்ருரிடம் போனல் ஒருவேளை அவர்களுக்கு உதவி கிடைக்கக்கூடும். ஆனல் கெட்ட பிள்ளைகளுக்கோ வேற்ருர் யாரும் துணைபுரிய முன்வரமாட்டார்கள். பிள்ளை ஒருவன் எவ்வளவுதான் கெட்டவனுக இருந்தாலும் தாய் ஒருத்தியே பரிந்து அவனுக்கு எல்லா நலன்களையும் செய்கின்ருள். கடவுளோ தாயினும் சாலப்பரிந்து உயிர்களுக்கு உதவி புரியும் பாங்குடையவர். **பொல்லாத சேய் எனில் தாய் தள்ளல் நீதமோ, புகலிடம் பிறிது முண்டோ** என்று தாயுமானவர் கடவுளிடம் விண்ணப்பிக்கின்ருர். அவர் தம் கடமையைச் செய்தே ஆகவேண்டும் என்றும் பரிந்து கேட்டுக் கொள்கிருர்.

இரக்கமே வடிவெடுத்துள்ள தாய் ஒருத்தி இருக்கிருள். வன்நெஞ்சம் படைத்துள்ள பொல்லாத மகன் ஒருவன் இருக்கிருன். அவன் செய்யத்தகாத குற்றம் ஒன்றைச் செய்து விடுகிருன். பின்பு செய்த குற்றத்தை மறைக்க முயலுகின்ருன். அப்படிப் பொய் சொல்ல அவன் முந்து கின்றபொழுது இரக்கமே வடிவெடுத்துள்ள தாய்க்கும் சினம் வந்து விடுகிறது. கல்நெஞ்சம் படைத்தவள் போல் அவள் ஆய்விடுகிருள். மகன் ஒருவன் செய்த குற்றத்தை மறைப்பதற்குப் பதிலாக "தாயே, நான் இத்தகைய குற்றத் தைச் செய்து விட்டேன், நலன் செய்வதற்கேற்ற ஆற்றலோ என்னிடத்தில்லை. குற்றத்தை மிக எளிதில் செய்துவிடு கிறேன். இத்தகைய கீழ்மையில் உள்ள என்னை நீ தான் காப்பாற்ற வேண்டும்" என்று உண்மையையே அவன் பேசுவானுகில் தாய்க்கு அவன்மீது அதைக் குறித்து புதிய இரக்கம் வந்து விடுகிறது. தாயினிடத்துள்ள இந்தப் பேரியல்பு பன்மடங்கு அதிகமாக தெய்வத்திடத்தும் இருக்

கிறது. இதைத் தாயுமானவர் நன்கு உணருகிருர். அப்படி உணர்ந்திருப்பதற்கு அறிகுறியாக பொய் வார்த்தை சொல் லிலோ திருவருளுக்கு அயலுமாய்ப் புன்மையேன் ஆவன் அந்தோ என்று பகர்கிருர்.

மக்கள் ஒருவரோடு ஒருவர் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளுதற்குச் சொற்களை ஏராளமாகப் பயன்படுத்துகின் றனர். சொற்களை முறையாகப் பயன்படுத்துதலே ஒரு கலை ஞானம். நாம் இக்காலத்தில் கற்று வரும் கல்வியில் பெரும் பகுதி சொற்களை உபயோகப்படுத்தத் தெரிந்து கொள்ளுதல் பொருட்டேயாம். நன்கு பேசத் தெரிந்து கொண்டிருப்பவர் கள் பல துறைகளில் முன்னேற்றமடைகின்றனர். இயக்கங் கள் பலவற்றை உலகிலே உண்டுபண்ணுதற்குச் சொற்கள் பெரிதும் பயன்படுகின்றன. மேலாம் கருத்துக்களை மக்களுக் கிடையில் எடுத்து வழங்குதற்கும் சொற்கள் உதவுகின்றன. நீதிமன்றங்களில் வழக்குத் தொடுத்து அதில் வெற்றி பெறு தற்கு சொல் வன்மை முற்றிலும் அவசியமாகிறது. அரசியல் தந்திரிகள் வெளிநாடுகளுடன் நல்லிணக்கம் வைப்பதற்கு சொல்வன்மை உதவுவது போன்று வேறு எதுவும் உதவாது. இத்தனைவிதமான அலுவல்களுக்கு சொற்கள் உதவுகின்றன வெனினும் சொல்வன்மையில் குறைபாடு ஒன்று உளது. கருத்தை விளக்குதற்கென்றே சொற்கள் அமைந்திருக்கின்றன வெனினும் சொல் வல்லுநர் பலர் பெரு மிதமாக அவைகளைக் கையாண்டு தங்கள் கருத்துக்களை வேண்டுமென்றே மறைத்து வைத்து விடுகின்றனர். ராஜ தந்திரி ஒருவன் தனது சொல் சாதுர்யத்தால் பல கருத்துக் களை ஒரு சொற்பொழிவில் மறைத்து வைத்து விடுகின்ருன். ஒரு நாட்டுக்கு அவன் உதவிபுரிபவன் போன்று பேசுகிருன். உண்மையில் அவனிடமிருந்து ஒரு உதவியையும் எதிர்

பார்க்க வேண்டியதில்லை என்னும் கருத்தும் அதே சொற் பொழிவில் புதைந்து கிடப்பதுண்டு. அவனுடைய உள்ளக் கிடக்கை என்னதான் என்பதை அவனுடைய பெரும் பேச்சி னின்று கண்டு பிடிக்க முடியாது. உலக வியவகாரங்கள் பலவற்றிற்குப் பயன்படும் சொல்வன்மை அன்பை உள்ளபடி தெரிவிப்பதற்குச் சிறிதும் பயன்படாது போகக்கூடும். அன்பு பெருகுகின்ற அளவு சொல் தானே குறைந்துவிடு கிறது. நிறைகுடம் ததும்பாது என்பது பழமொழி. தாய்க் கும் சேய்க்கும் இடையிலுள்ள அன்பை சொல் விளக்குவ தில்லை. அன்பை அன்பே விளக்கிவிடுகிறது. கடவுளிடத்து நாம் அன்பு கொள்ள முயலுகிறோம். அப்படி முயலும் தரு வாயில் இருக்கும்பொழுது அதை விளக்குதற்குச் சொற்களை யும் பாமாலைகளையும் ஏராளமாகப் பொழிகிறோம்; அத்த கைய சொற்களைக் கேட்டு உலக மக்கள் ஏமாற்றமடைந்து விடலாம். கடவுளை யாரும் ஏமாற்ற முடியாது. மனிதன் உண்மையாக எதை நாடுகிறான், அவன் எதற்குத் தகுதி யுடையவனாய் இருக்கிறான் என்பதை அவன் வாய் விட்டுப் பேசுதற்கு முன்பே வாலறிவனாகிய கடவுள் நன்கு அறிந்து கொள்கிறார். இதை உணர்ந்து கொண்ட தாயுமானவர் சொல்லால் முழக்கிலோ சுகமில்லை என்று பகர்கிறார். கடவுளிடத்திருந்து வருகின்ற சுகம் அல்லது பேரானந் தத்தை வார்த்தைகளைக் கொண்டு பெற்றுவிட முடியாது.

தாயுமானவருக்கு குருவாக அமைந்தவர் ஒரு மௌனி. பேசாதிருப்பதையே அவர் ஒரு விரதமாக எடுத்துக்கொண் டார். கடவுள் நாட்டம் கொள்கிறவர்களில் சிலர் ஆயுட் காலம் முழுதிலும் மௌன விரதம் பூண்டவர்களாய் இருந்து விடுகின்றனர். அவர்கள் அப்படி செய்வதால் உலகுக்கு என்ன பயன் என்னும் கேள்வி எழுகிறது.

விவேகானந்த சுவாமிகள் உடல் வாழ்க்கை வாழ்ந்திருந்த பொழுது அத்தகைய பெரியார் ஒருவரைச் சந்தித்தார். அருள்துறையில் அவர் மிகவும் முன்னேற்றமடைந்தவர். ஆனால் உலகத்தவருடன் அவர் அதிகமாகப் பேச்சு வார்த்தை வைத்துக்கொள்வதில்லை. அவருடைய அருள்நிலை ஏன் அப்படி மறைந்து பட்டுப்போக வேண்டுமென்று விவேகானந்த சுவாமிகள் அவரிடம் கேட்டார். வாய் பேசாதிருந்து மனதோடு மனது இணக்கம் வைக்க முடியாதா, என்று அவர் திருப்பிக் கேட்டார். அவர் கருத்தை விவேகானந்த சுவாமிகள் முற்றிலும் அறிந்து கொண்டார். ஏராளமாக வாய்பேசி உலகுக்கு உதவி புரிந்தவர்களைவிட வாய் பேசாதிருந்து பெருநிலை அடைந்தவர்களே உலகுக்குப் பேருதவி செய்திருக்கின்றனர். அத்தகையவர்களில் ஒருவர் தாயுமான சுவாமிகளின் குரு. இரண்டு தடவைகளில் மட்டும் அவர் தாயுமான சுவாமிகளுக்கு இரண்டொரு சொற்களை வாய்விட்டுப் பேசினார். அவருக்கு மந்த்ரோபதேசம் செய்தபொழுது முதல் வார்த்தை வாயை விட்டு வந்தது. சிஷ்யனை விட்டு அவர் பிரிந்து போகின்றபொழுது, சிஷ்யனுக்கு உண்டான வருத்தத்தை நீக்குதற்கு "சும்மா இரு" என்று சொன்னார். ஆனால் மனதோடு மனது தொடர்வு வைக்கிற பெரும் செயலை அவர் செய்து சாதித்தார். தாயுமான சுவாமிகளுக்கு உண்டான மனபரிபாகத்தையெல்லாம் மிக அமைதியாக அவர் அமைத்து விட்டார். குரு அடைந்திருந்த பெருநிலையைத் தாமே அடைதற்கு அவர் பெரு முயற்சி எடுத்துக்கொண்டார். அக்குறிக்கோளையே தெய்வத்திடத்தும் அவர் வேண்டிக்கொண்டார். மௌனியாய் சும்மா இருக்க அருளாய் என்பது அவர் செய்த விண்ணப்பம்.

கடவுள் சகல கல்யாண குணங்களை உடையவராய் இருக்கிறார். குணங்களை யெல்லாம் கடந்தவராகவும் அவர் இருக்கிறார். நீர் ஆற்றுநீர், கிணற்றுநீர், கடல்நீர், மழைநீர் எனப் பல பெயர் உடைத்திருக்கிறது. ஆனால் அது ஆவி யாக இருக்கிறபொழுது இதையெல்லாம் கடந்த நிலை; அது மிக சுத்தமாயும் இருக்கிறது. கடவுள் தோற்றத்தை யெல் லாம் கடந்த நிலையில் சுத்த நிர்க்குணமானவர் ஆகிறார். ஐம்பொறிகளுக்கும் மனதுக்கும் புத்திக்கும் அப்பொழுது எட்டாதிருப்பதால் அவர் பரதெய்வம் என்று பகரப்படு கிறார். அவரிடத்துள்ள சுயஞ்சோதி சூரியன் சந்திரன் போன்றவைகள் தருகின்ற வெளிச்சத்துக்கு அப்பாற்பட் டது. ஆதலால் அது பரஞ்சோதி எனப்படுகிறது. வாரி என்பது நீர். உலகுக்கு உயிரைக்கொடுக்கிறது அது. கடவுளோ இன்ப சொரூபமாகவும் நீர் போன்று பேருயிர் சொரூபமாகவும் இருப்பதினால் சுகவாரி என்று அழைக்கப் படுகிறார். இக்கருத்துக்கள் யாவும் அடங்கிய பாடல் இது.

## 4. சுகவாரி

என்பெலாம் நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பஉடல்
இளகமன தழலின்மெழுகாய்
இடையரு துருகவரு மழைபோ லிரங்கியே
இருவிழிகள் நீரிறைப்ப
அன்பினுல் மூர்ச்சித்த அன்பருக் கங்ஙனே
அமிர்தசஞ் சீவிபோல்வந்(து)
ஆனந்த மழைபொழிவை உள்ளன்பி லாதஎனை
யார்க்காக அடிமைகொண்டாய்
புன்புலால் மயிர்தோல் நரம்பென்பு மொய்த்திடு
புலைக்குடிலில் அருவருப்புப்
பொய்யல்ல வேஇதனை மெய்யென்று நம்பிஎன்
புந்திசெலு மோபாழிலே
துன்பமா யலையவோ உலகநடை ஐயவொரு
சொப்பனத் தினும்வேண்டிலேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

இயற்கையில் ஒன்றுமில்லாத இடத்தை சூன்யம் என்கின்றோம். அப்படி ஒன்றுமில்லாத இடம் இயற்கையிலுண்டா என்னும் கேள்வி அடுத்தபடியாக வருகிறது. உண்மையில் இயற்கையில் சூனியமே கிடையாது. ஏனென்ருல் ஆகாசம் என்னும் பூதம் பிரபஞ்சம் முழுதிலும் நீக்கமற நிறைந்திருக்கிறது. இந்த ஆகாசமே ஸ்தூலவடிவெடுத்து ஏனைய நான்கு பூதங்கள் ஆகிறது. அந்த நான்கினுள் எதை வேண்டுமானுலும் ஓரிடத்தில் இல்லாது காலிசெய்துவிடலாம். காற்று முழுதையும் ஏதேனும் ஒரு பாண்டத்தினின்று

காலியாக்கிவிடலாம். வெப்பமில்லாது தணுப்பே வடி வெடுத்ததாக மற்றேரிடத்தை மாற்றிவிடலாம். இனி, நீரின் அறிகுறி சிறிதேனுமில்லாது முற்றிலும் உலர்ந்ததாக மற் ரேரிடத்தைச் செய்துவிடலாம். ஆனல் செயற்கையாகச் செய்யப்பட்டுள்ள அத்தகைய சூழ்நிலேயோடு இயற்கை போராடுகிறது. அப்போராட்டத்தில் இயற்கை எப்படியும் வெற்றி பெற்றுவிடுகிறது. ஓரிடத்தில் காற்றில்லாது செய்து வைத்தால் அந்த இடத்துக்கு வேறு இடங்களிலிருந்து காற்று விரைந்து அடிக்கிறது. மிகத் தணுப்பான இடத் துக்குச் சுற்றிலுமுள்ள வெப்பம் இயற்கையால் அனுப்பப் படுகிறது. முற்றிலும் உலர்ந்ததை சிறிதளவாவது நணையும் படி இயற்கை செய்துவிடுகிறது. ஆதலால் ஐம்பூத சொருப மாக இருக்கும் இயற்கையில் இந்த ஸ்தூல பூதங்களே அகற்றிக் காலிபண்ண நாம் முயன்ருல் இயற்கை அதற்குப் பெரிதும் இடந்தருவதில்லே. ஏதேனும் ஒன்றைக் காலி செய்தால் மற்றென்று அவ்விடத்தினுள் புகுந்து அதைத் தனக்குரியதாக்கிக்கொள்கிறது.

ஜடவுலகத்துக்குரிய இவ்வுண்மை மானுடனுக்கும் ஓரளவு பொருந்துகிறது. மானுட உள்ளத்தில் எண்ணிறந்த எண்ணங்கள் புதைந்து மறைந்து கிடக்கின்றன. அவ்வெண் ணங்களேக் காலிசெய்யச் செய்ய வேறு எண்ணங்கள் அத னுள் தோன்ற ஆரம்பித்துவிடுகின்றன. ஓரிடத்திலிருந்து காற்றைக் காலிபண்ணுவதற்கு ஆங்கு வெப்பத்தை மேலும் மேலும் செலுத்தி அதை அப்புறப்படுத்துவது முறை. அதற் கொப்ப ஆத்ம சாதனத்தில் மனதில் உண்டாகிற எண்ணங் களே யெல்லாம் தெய்வீக எண்ணங்களாக மாற்றி அவை யாவையும் தெய்வத்துக்கே உரியவைகள் ஆக்கிவிட வேண்டும். ஆத்ம சாதகன் அப்படி முயலுகின்றவிடத்து

அவன்பால் உள்ள மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களும் அதற்கேற்றவாறு மாறியமைகின்றன. அப்படி மாறியமையும் செயல் மேனியினிடத்துத் தெளிவுறத் தென்படுகிறது. மனிதனுடைய உடலமைப்பில் உறுதிமிக வாய்க்கப்பெற்றது எலும்பு. எலும்பு இல்லாவிட்டால் மானுட உடலை எப்படி வேண்டுமானலும் சுருட்டி முட்டை கட்டலாம். ஆனல் உறுதிவாய்ந்த எலும்பு அதற்கு இடந்தருவதில்லை. ஆத்ம சாதகனுக்கு உண்டாகின்ற அருள்தாகத்தின் வேகத்தால் அத்தகைய எலும்பே நெகிழ்ந்து உடைந்து பட்டுப்போவது போன்று மாறியமைந்துவிடுகிறது. அதை வேண்டியவாறு மாற்றியமைக்கும் திறமை அருள் நாட்டத்துக்கு உண்டு. அந்த அரிய செயலை என்பெலாம் நெக்குடைய என்கிருர் தாயுமானவர்.

உடலிலே மற்ருேர் அறிகுறி அருள் நாட்டத்தின் விளைவாக வருகிறது. அதை அவர் உரோமம் சிலிர்ப்ப என்கிருர். ஆனல் உரோமம் சிலிர்ப்பது வேறுபல உணர்ச்சிகளை முன்னிட்டும் நிகழ்வதுண்டு. திடீரென்று அச்சம், வியப்பு, துயரம், களிப்பு முதலியன தோன்றுகிற விடத்து உரோமம் சிலிர்க்கிறது. ஆனல் அருள் நாட்டத்தை முன்னிட்டு உண்டாகிற மயிர்க்கூச்சுக்கும் ஏனைய உணர்ச்சிகளை முன்னிட்டு உண்டாகிற மயிர்க்கூச்சுக்கும் பலத்த வேற்றுமையுண்டு. அருள் நாட்டத்தால் அது உண்டாகுமிடத்து மேனி தூயதாகிறது. ஏனைய உணர்வால் உரோமச் சிலிர்ப்பு ஏற்படுமிடத்து உடல் இருந்தபடி இருக்கிறது; அல்லது கீழ்மையடைகிறது. அருள் நாட்டத்தால் உண்டாகின்ற உரோமச் சிலிர்ப்பையே ஆன்ருேர்கள் மேலானதெனப் பாராட்டுகின்றனர்.

உடலிலே மற்ருெரு மாறுதல் ஆத்ம சாதகனுக்கு உண்டாகிறது. அதை அண்ணல் உடல் இளக என்று இயம்புகிருர். சாதாரணமாயுள்ள வாழ்க்கையில் உடல் திட்பம் பெறுகிறது; கட்டுடையதாகிறது; உறுதிப்பாடே வடிவெடுத்ததாகிறது; நல்ல உடல் வளர்ச்சிக்கு இவையாவும் அறிகுறிகளாகின்றன. ஆனல் இப்பொழுது இயம்பியுள்ள உலக இன்பதுன்பங்களை முன்னிட்டு உடல் இளகுவதுண்டு. அதனல் மேனியின் மாண்பு குறைந்து தேய்கிறது. உலகிலே வாழவந்த மனிதன் சிறிது சிறிதாகத் தன் உடல் திட்பத்தை ஒடுக்கிக் கலைத்துவிடுகிருன். ஆனல் அருள் நாட்டம் கொண்டுள்ள ஆத்ம சாதகன் ஒருவனுக்கு உண்டாகிற உடல் இளக்கம் அவனைக் கெடுப்பதில்லை. தீயில் சுடுமளவு செம்பொன் மேலும் தூயதாகிறது. தீயில் காய்ச்சுமளவு ஆவின் பாலுக்குச் சுவையதிகரிக்கிறது. அங்ஙனம் அருள் தாகத்தால் உடல் இளகுவது போன்று ஆவதெல்லாம் அதை ஆத்மீகத் துறையில் உறுதிப் படுத்துதற்காம்.

உள்ளத்தின் செயலைப்பற்றித் தாயுமானவர் மேலும் மொழிகிருர். மனது அழலின்மெழுகாய் இடையருது உருக என்று அவர் இயம்புகிருர். மெழுகானது கடின பதார்த்தமாயிருக்கிறது. ஆனல் தீயில் வாட்டும்பொழுது அது இளகிப் போகிறது. அந்த மெழுகுடன் மனது ஒப்பிடப்படுகிறது. மனதை உருக்குதற்கு முகாமைகள் பல இருக்கின்றன. காமத்தால் மனது உருகுகிறது; தாங்கவொண்ணுத் துயரத்தால் மனது உருகுகிறது; பொங்கியெழும் சினத்தால் மனது உருகுகிறது. அப்படி உருகுகிற மனது தன் விவேகத்தை இழந்து விடுகிறது. அருள் பொலிவை அதுபோக்கடித்துவிடுகிறது. ஆனல் பரம்பொருளை அடைய வேண்டும் என்று அது பொங்கி உருகுமாகில்

மேன்மைகளனைத்தும் அதன்பால் நன்கு மிளிர ஆரம்பித்து விடுகின்றன. தீயண்டை வைத்த மெழுகை தீயினின்று அப்புறப்படுத்தும்பொழுது மேலும் அது இறுகுகிறது. ஆத்மசாதகனுடைய மனதிலே அப்படி செயலும் எதிர்ச் செயலும் நிகழலாகாது. பேருணர்வால் உருகிய உள்ளம் அப்பொழுது அடைந்துள்ள பண்பாட்டில் இருக்கிறது. திரும்பவும் பேருணர்வு ஊற்றெடுத்துப் பாயும்பொழுது மேலும் அது உருக ஆரம்பிக்கிறது. உருக்கிய அளவு பொன் சுத்தமாய் இருப்பது போன்றும், ஆவின் பால் சுவை பெற்றிருப்பது போன்றும் அருள் நாட்டத்தால் உருகுமளவு மனது தூயதாகி, உலகப்பற்று என்னும் துருப்பிடியாதிருந்து புதிய புனிதத்திலே புகுகிறது. இந்த வேற்றுமை ஆத்ம சாதகனது மன உருக்கத்துக்கும் மெழுகினது உருக்கத்துக் கும் இடையில் இருக்கிறது.

இயற்கையில் இறுக்கமும் புழுக்கமும் வெப்பமும் அதி கரித்தால் அவைகளைத் தொடர்ந்து அதிவிரைவில் மழை வரும். அதே விதத்தில் உள்ளத்தினுள் உருக்கமும் கசிவும் அதிகரித்தால் அவைகளைத் தொடர்ந்து கண்ணீர் வரும். கண்ணீரைப் பொதுவாகத் துன்பக் கண்ணீர் என்றும் இன் பக்கண்ணீர் என்றும் இரண்டாகப் பிரிக்கிறோம். உலக வாழ்க்கையில் உண்டாகிற இன்பதுன்பங்களை யெல்லாம் ஒட்டி வருகிற கண்ணீரைத் துன்பக் கண்ணீர் என்கிறோம். உலக இன்பத்தைச் சார்ந்து வருவதைத் துன்பக் கண்ணீர் என்று இயம்புவானேன்? உலக இன்பம் நிலைத்ததன்று. முற்பொழுதில் இன்பமாய் இருப்பது பிற்பொழுதில் துன்ப மாக மாறுவது திண்ணம். ஆதலால்தான் உலக வாழ்க்கை சம்பந்தமான கண்ணீர்கள் அனைத்தும் துன்பக்கண்ணீர் எனப்படுகிறது. அது அக்ஞானத்தோடு கூடியது. கடவுள்

நாட்டத்தைத் தொடர்ந்து வருகிற கண்ணீர் யாண்டும் இன்பக்கண்ணீர் எனப்படுகிறது. அது பெயரளவில் துன்பம் நிறைந்ததாக இருக்கிறது. பேரின்பத்துக்கு அது அடிகோலுகிறது. எனவே ஆதியோடு அந்தமாக அது பேரின்பத்தோடு இணைக்கப்பட்டிருக்கிறது. இந்த இரண்டுவிதக் கண்ணீர்களும் உள்ளத்தில் எழும் வேகத்தை முன்னிட்டே மழை பொழிவது போன்று ஏராளமாக வருவதுண்டு. மனக் கசிவுக்குக் கண்ணீர் புறச்சின்னமாகிறது. "மனதே, நீ பொருளுக்காகவும், போகத்துக்காகவும், பதவிக்காகவும், புகழுக்காகவும் குடம் குடமாகக் கண்ணீர் சிந்தியதுண்டு. ஆனல் கடவுளை நாடி நீ ஒருசொட்டுக் கண்ணீர் சிந்தியதுண்டா?" என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்நெஞ்சோடு புலம்பியிருக்கின்றார். ஆத்மசாதகன் சிந்துகிற கண்ணீருக்கும் உலகப்பற்றுடையார் சிந்துகிற கண்ணீருக்கும் இடையிலுள்ள வித்தியாசம் இதுவே. ஆத்மசாதகன் ஒருவனுக்குக் கண்ணீர் ததும்பி வருவதை வரும் மழை போல் இரங்கியே இருவிழிகள் நீர் இறைப்ப எனத் தாயுமானவர் இயம்புகிறார்.

மனதில் எழுகிற எழுச்சிக்கும் இரண்டு இயல்புகள் உண்டு. ஒன்று உலகைப் பற்றியது; மற்றது இறைவனைப் பற்றியது. மனவெழுச்சி அதிகரிக்குமிடத்து மனதின் செயலே ஸ்தம்பித்தது போன்று நின்றுவிடுகிறது. மனது செயலற்றிருக்கிற பொழுது மூச்சும் கும்பகம் என்னும் பிராணயாமத் தத்துவத்துக்கு ஒப்ப அடங்கி நின்று விடுகிறது. அருள் நாட்டத்தில் இப்படி மனது ஒடுங்குமளவு அது விரைவில் பரிபாகமடைகிறது. அதற்கு நேர்மாருக மருள் நாட்டத்தில் மனது ஒடுங்குவதால் அதனிடத்து மயக்கமும் அவிவேகமும் அதிகரிக்கிறது. முகத்தை அது இருள்

சூழ்ந்ததாக்குகிறது. அருள் நாட்டத்தில் வருகிற மன வொடுக்கமோ முகத்தில் எழில் வீசும்படி செய்கிறது. இக் கருத்தை அன்பினுல் மூர்ச்சித்த அன்பருக்கு என அண்ணல் பகர்கிருர்.

இயற்கையானது சூனியத்தை ஆதரிப்பதில்லை என்று ஏற்கனவே ஆராய்ந்தோம். ஆத்ம சாதகன் ஒருவன் உள்ளத்திலே உண்டாகின்ற மன நெகிழ்ச்சிகள் அனைத்தையும் இறைவனுக்கு உரியவைகளாக்கி இறைவனிடத்திலேயே தனது மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களையும் அவன் ஒப்படைத்து விடுகிருன். அந்த அரும்பெரும் செயலை முன்னிட்டு அவனுடைய உள்ளம் காலியாகிறது. அதனுள் ஜன்மாந்திரங்களில் புதைந்து கிடந்த பொருளற்ற கருத்துக்களும் உணர்வுகளும் தெய்வத்திடத்து ஒப்படைக்கப் பட்டவைகள் ஆய்விட்டன. இம்முறையிலே மனதைக் காலி பண்ணுவது செயற்கரிய செயலாம். சான்ருேர்களுக்கே அது சாத்தியமாகிறது. மனதை அப்படிக் காலிசெய்து விட்டால் அதனுள் நிரப்பப்படுவது யாது? அங்ஙனே அமிர்த சஞ்சீவிபோல் வந்து ஆனந்தமழை பொழிவை என்று இக்கேள்விக்குத் தாயுமானவர் விடைகொடுக்கிருர். உள்ளம் என்னும் அறையினின்று மருளை நீக்கிய அதேகணத்தில் இறைவன் அருளைப் பொழிகிருர். அப்படி விரைவில் நிகழ்வது அங்ஙனே என்னும் சொல்லைக்கொண்டு விளக்கப்படுகிறது. உலகில் பெய்கிற மழையை உபசாரத்துக்காக அமிர்த சஞ்சீவி என்று சொல்லலாம். உணவை அது உண்டுபண்ணுவதால் அமிர்தத்துக்கு அது ஒப்பானது. உயிர்வாழ்க்கை நிலைத்திருப்பதற்கு அது உதவி புரிவதால் அது சஞ்சீவிக்கு ஒப்பானது. செத்ததற்கு அல்லது சாகும் தருவாயில் இருப்பதற்கு எது புத்துயிர் கொடுக்கிறதோ

அது சஞ்சீவி. பெய்கிற மழை அந்த அரிய செயலைச் செய்கிறது. எனவே அதைச் சஞ்சீவி என்று அழைப்பது முற்றிலும் பொருந்தும். இப்படி மழையால் வருகிற உணவும் உயிர் வாழ்க்கையும் சாசுவதமானவைகள் அல்ல. ஆனால் இறைவனுடைய அருள் என்னும் மழையால் மனிதன் மரணமிலாப் பெருவாழ்வை அடைந்துவிடுகிறான். ஆதலால் அருள் ஒன்றையே அமிர்தமென்றும் சஞ்சீவியென்றும் முறையாக மொழியலாம். அந்த அருளினின்று உதிக்கிற ஆனந்தம் யாண்டும் நிலைத்திருக்கிறது. இப்படி ஒப்பு உயர்வு அற்ற பேறு அதனை கச்மலங்களினின்று காலி செய்யப்பட்டுள்ள உள்ளத்தில் இறைவன் நாட்டிவைக்கின்றார்.

மனிதன் கடவுளிடத்து அன்பு வைப்பதற்கே மானுடனாகப் பிறந்திருக்கிறான். கடவுளிடத்து அன்பு வைக்காது அவன் இருந்து விடுவானாகில் அதற்குக் காரணம் யாது? உலகப்பற்று இன்னும் அவன் உள்ளத்தில் ஊறிக்கிடக்கிறது என்பது வெளியாகிறது. பண்பட்ட மனது இறைவனுக்கு அடிமையாகிறது; பண்படாத மனது உலகுக்கு அடிமையாகிறது. இக்கோட்பாட்டை வெளிப்படையாகச் சொல்லாது கேள்வியொன்று கேட்பதில் தாயுமானவர் அதை அடக்கி வைத்துவிடுகிறார். **உள்ளன்பிலாத எனை யார்க்காக அடிமை கொண்டாய்?** என்பது அவர் இறைவனிடம் முறையிடுகிற கேள்வியாகும்.

சேரிடம் அறிந்து சேர் என்பது பழமொழி. ஒரு மனிதன் யாரிடம் சேர்க்கை கொள்ளுகிறானோ அதினின்று அவன் தரம் வெளியாகிறது. இறைவனோடு சேர்ந்திருப்பதற்கு நிகரான லட்சியம் வாழ்க்கையில் இல்லை. அப்பெரிய லட்சியத்தைக் கடைப்பிடிக்க இயலாதவிடத்து உலகிலுள்ள உயிர்களிடத்து அன்பு கொண்டு அவ்வுயிர்களின் பொருட்

டுத் தொண்டு புரிதல் போன்ற சீரிய செயல்களைச் செய்து வருவதும் பாராட்டத்தக்கதேயாம். ஆனால் சாதாரண மனிதன் ஒருவன் அதையும் செய்வதில்லை. அவன் எடுத்திருப்பது பெறுதற்கரிய மானுடப் பிறவி யெனினும் கொள்ளுகிற விருப்பம் மிகக் கீழானது. அதன் கீழ்மையை நன்கு எண்ணிப் பார்த்து அதனிடத்துச் சிறிதேனும் நாட்டம் வைக்கலாகாது. இக் கருத்தைத் தாயுமானவர் **புன்புலால் மயிர் தோல் நரம்பு என்பு மொய்த்திடு புலைக்குடிலில் அருவருப்பு** என்று இயம்புகிறார். ஆனால் விந்தையுள் விந்தை! மனிதன் எதனிடத்து அருவருப்புக் கொள்ள வேண்டுமோ அதனிடத்து அளவுக்கு மிஞ்சிய அன்பும் அபிமானமும் கொள்ளுகிறான். மனிதன் உடலில் வாழ்ந்திருக்க வேண்டும். ஆனால் உடற்பற்று சிறிதேனும் அவனுடைய பெருமைக்கு ஒவ்வாது. புலால் மிகக் கீழ்த்தரமான பொருள். மயிரோ ஒன்றுக்கும் உதவாதது. தோல் உலர்ந்து சருகிலும் கீழானதாகக் கூடியது. நரம்பு தீண்டுதற்கு உதவாதது. எலும்பு இடுகாட்டில் இறைபட்டுக்கிடப்பதற்குரியது. இத்தகைய அற்பப் பொருள்கள் ஒன்று கூடி உருவாயிருப்பது உடல். புலைக்குடில் என்று அதைக் கூறுவது முற்றிலும் பொருந்தும். புலால் நாற்றம் அதினின்று ஓயாது வந்துகொண்டேயிருக்கிறது. கர்மத்தை ஒழிக்கும் பரியந்தம் அதில் எப்படியோ குடியிருந்தாக வேண்டும் என்று பற்றற்றநிலையில் அதைப் பேணுதற்குப்பதிலாக அதில் பெரும்பற்று வைப்பவன் புலையன் ஆய்விடுகின்றான். மனிதன் இப்படித் தன்னை புலைக் குடிலுடன் இணைத்து வைத்துக் கொண்டதைக் குறித்து அருவருப்புக் கொள்ளுதல் ஒன்றே அதன் மீது வைத்துள்ள பற்றுதலை நீக்குதற்கு உற்ற உபாயமாகும். எனவே விவேகி ஒருவன் உடல்பற்றுதல் கொள்ளுதற்கு மாறாக உடலில் அருவருப்புக்கொள்ளுதல் ஆத்ம சாதனத்துக்கு முதல்படியாகும்.

ஆத்ம சாதகன் செய்யவேண்டிய மற்ெருரு சீரிய விசாரம் உளது. நாம் அறிந்துவரும் பொருள்களுள் பொய் யானது எது, மெய்யானது எது என்று முறையாக விசாரித்துப் பார்க்க வேண்டும். ஒரு காலத்தில் இருந்து இன்னெரு காலத்தில் இல்லாது போய்விடுவதுபொய்ப்பொருள். எல்லாக் காலத்திலும் இடையீடின்றி இருந்து வருவது மெய்ப்பொருள். மானுட அமைப்பில் பொய்யானது மெய் யானது ஆகிய இரண்டும் கலந்து கிடக்கின்றன. அவை இரண்டையும் சரியாகப் பாகுபடுத்த வேண்டும். ஸ்படிகமும் புஷ்பமும் பக்கம் பக்கம் இருக்கிறபொழுது புஷ்பத்தின் நிறம் ஸ்படிகத்தில் பொலிகிறது. அதனல் ஸ்படிகம் நிறம் கொண்டது எனக் கருதுவது பொய்யான முடிவு ஆகும். மனிதனுடைய அமைப்பில் உடலும் ஆத்மாவும் கலந்திருக்கின்றன. இவ்விரண்டினுள் ஆத்மா அழிவற்றது; காலத்தில் அடிபடாதது; யாண்டும் நிலைத்திருப்பது; எனவே அது மெய்ப்பொருள். ஆனல் உடலோ ஓயாது மாறியமைந்து கொண்டிருக்கிறது. ஒரு நொடிப்பொழுதுக்கு முன்பு இருந்தது போன்று பின்பு இருப்பதில்லை. மரணத்தின் வாயிலாக அது ஐம்பூதங்களாகப் பிரிந்து போகக்கூடியது. அத்தகைய உடல் பொய்யல்லவே! இதை மெய் யென்று நம்பி என்புந்தி செலுமோ பாழிலே? எனத் தாயுமானவர் கேட்கிருர். இவ்வுடல் பொய்யானது தானே! இதில் சந்தேகம் என்ன இருக்கிறது? ஆனல் பொய்யான உடலுக்கு உபசாரமாக மெய் என்கின்ற ஒரு பெயரைக் கொடுத்து அதை எப்பொழுதும் நிலைத்திருக்கக் கூடியது என்று நம்பி அதனிடத்து எனது பண்படாத அறிவு சென்று கொண்டிருப்பது நியாயமா? பாழ் என்பதும் சூனியம் என்பதும் ஒரே பொருளைக் குறிக்கும் இரண்டு சொற்களாம்.

எது பொய்யானதோ அது பாழ்; எது ஒருகாலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் இல்லாது போய்விடுகிறதோ அது பாழ். பாழ் அல்லது சூனியம் எது என்று மனிதன் பிரபஞ்சத்தில் உள்ளவைகளுக்கிடையில் தேடியலைய வேண்டியதில்லை. தன் உடலைப் பாழ் என்று அதன் தரத்தை உள்ளபடி அவன் அறிந்துகொள்வானாகில் உண்மையை அறிந்துகொண்டவனாகிறான்.

ஈசுவர சிருஷ்டியில் துன்பம் இருப்பானேன் என்னும் கேள்வி தொன்றுதொட்டு திரும்பத் திரும்ப தோன்றிக் கொண்டேயிருக்கிறது. துன்பம் இருப்பதற்குக் காரணம் யாது? இக்கேள்வியும் கிளம்பிக்கொண்டேயிருக்கிறது. இதே கேள்வியைத் துன்பமாய் அலையவோ? என்று தாயுமானவரும் கேட்கிறார். இக்கேள்விக்குச் சான்றோர்கள் விடை கொடுத்திருக்கிறார்கள். மனிதனிடத்து அக்ஞானமிருக்கும் வரையில் அவன் துன்பத்துக்கு ஆளாகவேண்டும். இக்கோட்பாடு மனிதனுக்குமட்டும் உரியதல்ல. தேவர்கள் உட்பட உடல் எடுத்துள்ள ஜீவாத்மாக்கள் அனைத்துக்கும் இது பொதுவானது. பொய்யான உடலை மெய்யென்று கருதுவது அக்ஞானம். அந்த அக்ஞானம் இருக்கும்வரையில் உடலின் பொருட்டு மனிதன் துன்பத்துக்கு ஆளாகவேண்டும். இடையறாது அல்லல்பட்டாகவேண்டும். எவ்வளவு தான் முயன்றாலும் துயரத்தினின்று தப்பித்துக்கொள்ள அவனுக்கு இயலாது.

வாழ்க்கையில் தாங்கள் கொண்டுள்ள குறிக்கோள் அல்லது நோக்கம் இன்னதென்பது மக்களில் பெரும்பாலோருக்குத் தெரியாது. சிற்றுயிர்கள் அனைத்தும் வாழ்க்கையில் பெரும்பற்றுதல் வைப்பதைக் குறிக்கோளாகக்கொண்டிருக்கின்றன. எப்படியாவது வாழ்ந்திருந்தால் போதும்

என்பது அவ்வுயிர்களின் உள்ளத்தில் உதிக்கும் உணர்வு ஆகும். அந்த சிற்றுயிர்களின் தரத்திலேயே மக்களில் பெரும்பான்மையோர் இருக்கின்றனர். உயிர் வாழ்ந்திருப் பது ஒன்றையே வாழ்க்கையின் லட்சியமாக அவர்கள் வைத் திருக்கின்றனர். ஆனால் மக்கள் மற்ற உயிர்களைப்போன்று அல்லாது கல்வி கற்பது, நாட்டுக்குரிய நல்ல குடிமகன் ஆவது, செல்வத்தைப் பெருக்குவது, வசதிகளை வேண்டிய வாறு தேடிக்கொள்வது போன்ற மேலாம் நோக்கங்களைக் கொண்டிருக்கின்றனர். இவை யாவிலும் உயர்ந்ததொரு லட்சியமுண்டு. நல்லறிவுடையோர் ஆயிரத்தில் ஒருவர்க்கே அந்த ஒப்பற்ற லட்சியம் மனதில் தெளிவுற விளங்குகிறது. அந்த உயர்ந்த லட்சியத்தை **உலகநடை ஐய ஒரு சொப் பனத்திலும் வேண்டிலேன்** என்கின்றார் தாயுமானவர். சான்றோர் கருத்துப்படி மக்கள் தன்மை விலங்குத் தன்மை யைவிட உயர்ந்தது. அடுத்தபடியாக மக்களிடத்து தெய் வத் தன்மை வாய்ப்பது அதிலும் உயர்ந்தது. தெய்வத் தன்மையை நாடுபவரே தலையாய மாந்தர். உலக நடை யாகிய இகலோக வாழ்க்கைக்கு வேண்டிய கல்வி, வசதி யான வாழ்வு, பொருளீட்டம், நோயற்றவாழ்வு முதலியன வெறும் உலக நடை ஆய்விடுகின்றன. உயிர்ப் பற்றுவைப் பது விலங்கின் இயல்பு. தெய்வநடை ஒன்றே தாம் வேண் டுவது என்றும், உலகநடையைக் கனவிலும் தாம் கருதுவ தில்லையென்றும் அண்ணல் இயம்புகின்றார். தெய்வநடை யாது என்பதைத் தெளிவுற அறிந்துகொள்ளுவது அவசிய மாகிறது. உலகநடையைப் பிரவிருத்தி யென்கிறோம். அதைப் பெருக்கிக்கொண்டு போகப்போக பிறவிப் பெருங் கடலும் விரிவடைந்துகொண்டே போகிறது. ஜனன மர ணத்துக்கு அது ஒரு முடிவுகாணாது. எரிகின்ற தீயில்

விறகுக் கட்டையைப் போடுமளவு அது சோர்வுறுது சுடர் விட்டெரிவது போன்று உலகநடையின் மூலம் சம்சார சாகரம் விரிவடைகிறது. அதினின்று பின் வாங்குவது தெய்வநடை. நிவிருத்தி மார்க்கம் என்று அது சொல்லப் படுகிறது. உலக வாழ்வினின்று மனிதன் தன்னை மீட் டெடுத்து தெய்வீக வாழ்க்கைக்கே தன்னை ஒப்படைக்குங் கால் அவனுக்கு நிவிருத்தி மார்க்கம் துவங்குகிறது. காய் கனிந்து வருகிறபொழுது மரத்தில் வைத்துள்ள பற்றுதல் குறைகிறது. பிறகு மரத்தினின்று அது பிரிந்துகொள்கிறது. அதைத் தொடர்ந்து புதிய பெருவாழ்வு அக்கனிக்கு உண்டா கிறது. நிவிருத்தி மார்க்கத்தில் செல்லுகிற ஆத்மசாதகன் உலகில் வாழ்ந்திருக்கிறுன் எனினும் உலகுக்கும் அவனுக் கும் ஒருவிதமான தொடர்வும் இல்லை. அவனுடைய மனது பகவத் விஷயங்களிலேயே உலவிக் கொண்டிருக்கிறது. காயத்தைக்கொண்டு அவன் செய்கின்ற செயல்களெல்லாம் இறைவழிபாடு ஆகின்றன. அவன் கற்கின்ற கல்வியும் செய்கின்ற ஆராய்ச்சியும் பேசுகின்ற பேச்சும் எல்லாம் கட வுளைப் பற்றியவைகளாகவே இருக்கின்றன. நனவில் மனிதன் ஆழ்ந்து நினைப்பதுதான் கனவில் வருகிறது. ஆக, மனிதனது மனப்போக்கை அளப்பதற்கு சொப்பனம் உதவுகிறது. நனவிலே ஆழ்ந்து எண்ணுவது கனவில் வந்துவிடுகிறது. கனவிலும் தமக்கு உலகநடை வேண்டாம் என்று சொல்லுகிற தாயுமானவர் நனவிலே தம்மை முற்றி லும் தெய்வத்துக்கென்றே ஆயத்தப்படுத்துபவர் ஆகின்றுர். மேலே வந்துள்ள இக்கருத்துக்கள் அனைத்தும் அடங்கி யுள்ள பாடல் இது.

——

## 5. சுகவாரி

வெங்நீர் பொருதென்உடல் காலில்முள் தைக்கவும்
வெடுக்கென் றசைத்தெடுத்தால்
விழிஇமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்
வேறொன்றை யொருவர்கொல்லின்
அந்நேரம் ஐயோஎன் முகம்வாடி நிற்பதுவும்
ஐயநின் னருள்அறியுமே
ஆனாலும் மெத்தப் பயந்தவன் யான்என்னை
ஆண்டநீ கைவிடாதே
இந்நேர மென்றிலை உடற்சுமைய தாகவும்
எடுத்தா லிறக்கஎன்றே
எங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினும்
இறைஞ்சுசுக ராதியான
தொன்னீர்மை யாளர்க்கு மானுடம் வகுத்தஅருள்
துணையென்று நம்புகின்றேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

மக்களிடத்து இரண்டு இயல்புகள் உண்டு. ஒன்று பேரியல்பு, மற்றது சிற்றியல்பு. பேரியல்பு யாண்டும் பின்னணியில் இருக்கிறது. சிற்றியல்பு முன்னணியில் நின்று வாழ்வை நடாத்தி வருகிறது. இந்த சிற்றியல்பு எல்லார்க்கும் விளங்குகிறது. பேரியல்போ ஆழ்ந்து உன்னிப் பார்ப்பவர்களுக்கே விளங்குகிறது. அது ஆத்ம சொருபத்தைச் சார்ந்தது. அதற்கு மாறாகச் சிற்றியல்பு உடல் சொருபத்தைச் சார்ந்தது. ஆத்ம சொருபத்தின் இயல்பைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். தனக்கு அழிவு வரும் என்று

மனிதன் ஒருபொழுதும் எண்ணுவதில்லை. தான் முன்பு ஒருகாலத்தில் இல்லாதிருந்து இப்பொழுது உண்டாயிருப்ப தாக அவன் எண்ணுவதில்லை. இதற்கெல்லாம் காரணம் அவன் உண்மையில் ஆத்மா. அதற்கு ஆதியந்தமில்லை; பிறப்பு இறப்பு இல்லை; ஆத்மாவை ஆயுதம் வெட்டாது; நீர் நனைக்காது; நெருப்பு அவிக்காது; காற்று உலர்த் தாது; பூதங்களின் செயல்களில் அது கட்டுப்படுவதில்லை. அப்பேரியல்பை உணர்ந்து அதில் நிலைத்திருப்பது ஆத்ம சாதனங்களின் குறிக்கோளாகும். அதற்கு மாருக யாக்கை யைச் சார்ந்துள்ள சிற்றியல்புகளில் உழல்வது உலக நடை முறையாகும். அந்த உலக நடைமுறைகளைக் கொண்டே அதற்கப்பாலிருக்கும் பெருநிலையை எட்ட முயலுதல் வேண்டும்.

மிகைபட்ட வெப்பமோ அல்லது மிகைபட்ட தணுப்போ உடலுக்கு ஒத்துக்கொள்வதில்லை. வெப்பமும் தணுப்பும் உடலுக்கு ஒத்திருக்குமாறு இடைநிலையில் இருந் தாக வேண்டும். நீராடுகிறவர்கள் மிதமாயுள்ள வெந்நீரில் சுகங்காண்கின்றனர். அளவு பட்டுள்ள வெந்நீரை வேண்டிய வாறு வார்த்து உடலைக் குளிப்பாட்டும்பொழுது மனிதன் இன்பம் காண்கிருன். அப்படிச் செய்வதால் உடலுக்குள் ளிருக்கும் இரத்தப் பெருக்கு அதிகரிக்கின்றது. அது ஆரோக்கியத்துக்கு உற்றதுணை. புறத்தில் தோல் முழு துக்கும் வெந்நீர் சொகுசைக் கொடுக்கிறது. உடலைத் தேய்த் துத் தேய்த்து மிதவெப்பம் படைத்துள்ள வெந்நீரை ஊற் றிக்கொண்டிருக்குமளவு மனிதன் ஒருவிதத்தில் இன்பத்தில் மெய்ம்மறந்தவன் ஆகிருன். அதற்கிடையில் கொதித்துக் கொண்டிருக்கிற வெந்நீரை எடுத்து அவன்மீது கொட்டினல் அவன் கோவென்று கதறிவிடுவான். அக்கினி என்னும்

பூதத்தின் செயலாகிய வெப்பம் அப்பு என்னும் பூதத்தினுள் புகுந்துகொண்டு அவனைத் திணறவைத்து விடுகிறது. இன்பம் தந்து வந்த அந்த இரண்டு பூதங்களும் நொடிப் பொழுதில் அம்மனிதனுக்குத் துன்பத்தை உண்டுபண்ணி விடுகின்றன. இக்கோட்பாட்டை வெந்நீர் பொருது என் உடல் என்கிறார் தாயுமானவர்.

சில உயிர் வகைகளுக்கு கால் அமைப்பில் இயற்கை யாகவே பாதுகாப்பு இருக்கிறது. விலங்கு இனங்களுக்குக் குளம்பு பெரிதும் பாதுகாப்பு ஆகிறது. பறவை இனங் களுக்குக் காலில் காந்தம் மின்சக்தி முதலியன செல்லாது இயற்கைப் பாதுகாப்பு இருக்கிறது. மின்சக்தி நிறைந்த கம்பியின்மீது அமர்வதால் பறவைக்கு ஆபத்தில்லை. நிலத் தில் நடமாடும் உயிர் வகைகள் அப்படிக் கம்பியின் மீது நின் றால் அதிலுள்ள மின்சக்தியால் தாக்கப்படுவனவாகும். மனிதனுடைய உடலமைப்பில் பாதுகாப்பு மிகக் குறைவு. ஆனால் செயற்கையாக அவன் தனக்கு வேண்டியவாறு பாதுகாப்புகளை அமைத்துக்கொள்ளலாம். உயிர் வகை களுள் தக்க முறைகளில் பாதரட்சைகளை அணிந்துகொண்டு போகின்றவன் மனிதன் ஒருவனே. மற்ற உயிர்களுக்கு செயற்கையாகப் பாதரட்சைகளைத் தேடிக்கொள்ளத் தெரி யாது. பாதத்துக்குச் சரியான பாதுகாப்பு அமைத்துக் கொள்ளாது முள் தரையிலே ஓடவேண்டிய நெருக்கடி திடீ ரென்று ஒரு மனிதனுக்கு ஏற்படுகிறது. அப்பொழுது பாதத்தில் ஆழமாக முள் பாய்ந்துவிடுகிறது. அதை அசைத் தெடுக்கும் செயலையும் அதனால் மனிதனுக்கு உண்டாகின்ற எதிர்ச் செயலையும் தமக்கே நிகழ்வனவென்று வைத்துக் கொண்டு, காலில் முள்தைக்கவும் வெடுக்கென்று அசைத்து எடுத்தால் விழி இமைத்து அங்ஙனே தண்

அருளை நாடுவேன் எனத் தாயுமானவர் இயம்புகிறார். துன்பத்தில் பெரும்பயன் ஒன்று உண்டு. அது மனிதனுக்குப் பெரிதும் விளங்குவதில்லை. துன்பம் வரும்பொழுதெல்லாம் மனிதன் தெய்வத்தின் அருளை நாடுகிறான். இன்பம் துய்த்திருக்கும்பொழுது அவன் அருளை நாடுவது மிக அரிது. துன்பத்தில் திணறுகிறபொழுது அருளை நாடாதிருப்பதும் அரிது. படிப்படியாக மனிதனைப் பக்குவப்படுத்துவது துன்பம். உடல் எல்லாவிதமான துன்பங்களுக்கும் ஆளாகக் கூடியது. துன்பம் நிறைந்துள்ள உடலை வைத்துக்கொண்டே துன்பம் கலவாத இன்பத்தை மனிதன் நாடுவது விந்தையிலும் விந்தையாம்.

கீழ்த்தரமான மக்கள் மன்னுயிரைத் தன்னுயிர்போல் கருதுவதில்லை. மற்ற உயிர்கள் துன்பப்படுவதை மகிழ்வுடன் வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பவர்கள் இருக்கிறார்கள். தன் இனத்தின் உயிர்க்கு ஆபத்து வரும்பொழுது அதை எதிர்க்கும் நல்லியல்பு சில உயிர்வகைகளிடத்து உண்டு. ஒரு காக்கைக்கு ஆபத்து என்றால் ஏனைய காக்கைகள் அதன் உதவிக்கு வருவதைக் காண்கிறோம். காட்டு யானை, குரங்கு முதலியவைகளுள் ஒன்றன் உயிருக்கு ஆபத்து என்றால் மற்றவை அதைக் காப்பாற்ற முந்துகின்றன. மக்களோ அவரவர்க்கு உற்றார் உறவினரை மட்டும் காப்பாற்ற முன் வருகின்றனர். மற்றவர்களைப்பற்றி அவர்கள் பராமுகமாயிருந்து விடுகின்றனர். ஆனால் பேரியல்பு படைத்த பெருமக்கள் யாரோ சிலர் இருக்கின்றனர். அன்னவர்களின் நல்லியல்பைத் தாம் படைத்திருப்பதைத் தாயுமானவர், வேறு ஒன்றை ஒருவர் கொல்லின் அந்நேரம் ஐயோ என்முகம் வாடிநிற்பதுவும் ஐய நின் அருள் அறியுமே என்று இயம்புகிறார். ஒருவர் படுகிற

அடியை முற்றிலும் உணர்கிற மேலோர் சிலர்க்கு அடிபடா மலேயே உடம்பில் அடியின் அடையாளம் அமைந்ததற்குச் சான்றுகள் பல உள. உண்மையில் உயிர்கள் அனைத்தும் ஒரே பேருயிரின் பலப்பல தோற்றங்களாம். ஒரு பேருயிர் தான் இத்தனைவித சிற்றுயிர்களாக இயங்கிக்கொண்டிருக் கிறது என்னும் அறிவு மனிதனை மெய்ஞ்ஞான நிலைக்கு எடுத் துச் செல்லுகிறது. மன்னுயிரையும் தன்னுயிரையும் ஒரே பாங்கில் பாராட்டுவது மனபரிபாகத்தின் அறிகுறியாகும். பரஞானத்தை எட்டுதற்கு அத்தகைய உணர்வு துணைபுரி கிறது. ஆத்ம சாதகன் ஒருவன் அந்த நிலையை அடையப் பெறுகிறுன் என்பதைத் தாயுமானவரது கூற்று வெளி யாக்குகிறது.

அஞ்சுதல் அல்லது பயப்படுதல் உயிர்கள் அனைத்துக் கும் பொதுவாயுள்ள இயல்பாம். அஞ்சாத உயிர் இயற்கை யில் இல்லை. யானை சிங்கத்துக்கு அஞ்சுகிறது; சிங்கம் யானைக்கு அஞ்சுகிறது. மற்ற உயிர்களும் ஏதேனும் ஒரு விதத்தில் ஒன்றனிடத்து ஒன்று அச்சம் கொள்ளுகிறது. பயத்தில் உழல்வது சிற்றியல்பு. அபயம் அல்லது அஞ் சாத பெருநிலையை எய்துவது பேரியல்பு. உயிர்கள் அனைத் தும் மரணத்துக்கு அஞ்சுகின்றன. மரணமோ சரீரத்தின் கூறு. தேகம் எடுத்திருப்பவர்களெல்லாம் பயப்படுகின்ற னர். தேக உணர்வைத் தாண்டியிருப்பவர்களெல்லாம் பயத்தை மீறி அபயத்தில் நிலை நிற்கின்றனர். தெய்வமும் அபயமும் ஒன்று. ஆதலால்தான் தெய்வத்துக்கு நாம் எந்த வடிவத்தைக் கொடுத்தாலும் அவ்வடிவத்திலே அத் தெய்வமானது அபயகரம் தாங்கியிருப்பதைக் காண்கிறோம். ஆத்ம சொருபத்தில் திளைத்திருப்பவர்களே அபயத்துக்கு அருகதையுடையவர் ஆகின்றனர். தங்களை ஆத்ம சொருப

மாக உணர்கிறவர்களே தெய்வ சந்நிதிக்குச் செல்லத் தகுதியுடையவர் ஆகின்றனர். அன்னவர்களுக்கு அபயம் தானாக வாய்க்கிறது. ஆனால் தேகத்தை தான் என்று உணர்வதால் தமக்கு அத்தகைய அபயம் வாய்க்கவில்லை என்பதை ஆனாலும் மெத்தப் பயந்தவன் யான் என்னை ஆண்ட நீ கைவிடாதே எனத் தாயுமானவர் கூறுகிறார். ஒவ்வொரு மனிதனும் தனது ஆத்ம பரிபாகத்தை ஆய்ந்து அறிந்து கொள்ளுதற்குத் தான் அஞ்சாப்பெருநிலையை எவ்வளவு தூரம் அடைந்திருக்கிறான் என்பதை ஆராய்ந்து பார்த்தால் தெரிந்துகொள்ளலாம். இறைவனை முறையாக நாடுமளவு ஒருவனுக்கு அஞ்சாமை தானாக வந்தமைகிறது. குழந்தை ஒன்று தன் தாயின் மடியின் மீதிருக்கிறபொழுது அது எதற்கும் அஞ்சுவதில்லை. தாய் தன்னைக் காப்பாற்றுகிறாள் என்னும் உணர்வே அதற்குக் காரணமாகும். ஆனால் தாயினிடத்துள்ள காப்பாற்றும் சக்தி வரம்புக்குட்பட்டது என்பது குழந்தைக்குத் தெரியாது. அறியாமையினால் தனக்கு ஆபத்து ஒன்றுமில்லை யென்று அது எண்ணிக்கொள்கிறது. ஆனால் இறைவனே சர்வ சக்திமான். இறைவனிடம் சரண் புகுமளவு ஜீவன் ஒருவனுக்கு உண்மையாகவே எல்லாவிதப் பாதுகாப்பும் இருக்கிறது. இறைவனது பாதுகாப்பில் ஜீவன் ஒருவனுக்கு அஞ்சுதற்கு ஒன்றுமில்லை. மரணபயமும் ஆங்கு அடிபட்டுப் போய்விடுகிறது.

உடல் வாழ்க்கையைப் பற்றிய நியதி ஒன்று உண்டு. எப்பொழுது உடல் தோன்றிவிட்டதோ பின்பு அதற்கு மறைவு என்பது ஒன்று உண்டு. அதை மாற்ற யாருக்குமே இயலாது. தோன்றியது மறையும்; மறைந்தது தோன்றும். இது இயற்கையின் நியதி. தோன்றி மறைகிற உடலை தான் என்று கருதுகிற உயிர்களுக்குப் பிறப்பும் இறப்பும் உண்டு.

உடலில் கட்டுண்டு கிடப்பதற்கிடையில் தனக்கு மரணமிலாப் பெருநிலை வேண்டும் என்று மையல் கொள்ளுகின்றவன் மதி மயக்கம் உடையவனும். உடல் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிற பொழுது அதினின்று வருகிற விகாரங்களுக்கெல்லாம் மனிதன் உட்பட்டாக வேண்டும். இவ்விதியினின்று யாருமே தப்பிக்க முடியாது. இக்கோட்பாட்டை இந்நேரம் என்று இல்லை உடல் சுமை அது ஆகவும் எடுத்தால் இறக்க என்றே எங்கெங்கும் ஒரு தீர்வை ஆயம் உண்டு எனத் தாயுமானவர் பகர்கின்றார். உடல் பாரம் மரணத்தின் வாயிலாக எப்பொழுது கீழே விழும் என்கிற நியமனம் இல்லை. அது அப்படியிருந்தும் உடல் எடுத்தால் அது இறந்தே தீரும் என்னும் நியதி எக்காலத்தும் எவ்விடத்தும் ஒரே தீர்ப்பாகவும் கடமையாகவும் அமைந்துள்ளது என்பது இதன் கருத்து.

ஆனால் இந்த நியதிக்கு விலக்கு ஒன்று உண்டு. சுகப் பிரம்மமும் அவர்போன்ற நிறைஞானிகளும் ஏதோ சிற்சில வேளைகளில் மண்ணுலகில் தோன்றுவதுண்டு. தேகம் எடுத்திருப்பதற்கிடையிலும் தேகத்தைப்பற்றிய உணர்ச்சி சிறிதேனும் அடையப்பெறாதவர் சுகப்பிரம்மம். வெயிலில் நடக்கிற நாம் நிழலை உண்டுபண்ணுகிறோம். ஆனால் அந்த நிழலை உணராதிருப்பது நமக்கு சாத்தியம். அந்த நிழல் மேடுபள்ளத்தில் வளைந்து வளைந்து போவதால் நமக்கு வலி ஒன்றும் உண்டாவதில்லை. அதிகாலையில் அல்லது மாலை யில் நிழல் நீண்டிருப்பதால் நமக்கு லாபம் ஒன்றுமில்லை. உச்சி வேளையில் நிழல் ஒடுங்கி மறைந்திருப்பதால் நமக்கு நஷ்டம் ஒன்றுமில்லை. அதே முறையில் சுகப்பிரம்மத்துக்கு உடல் உருவானது; அது வளர்ந்தது; தேய்ந்தது; மறைந் தது. ஆனால் உடலின் மாறுதல்களை அவர் கருத்தில் வாங்

கிக்கொள்ளக் கிடையாது. உடலுக்கு உரியனவாகிய பசி, தாகம், காமம், பிணி முதலியன சுகப்பிரம்மத்தின் சொருபத்தைப் பாதிக்கவில்லை. பிறவியிலேயே சுகப்பிரம்மம் உடல் உணர்வைக் கடந்த அதீத நிலையில் இருந்தார். மற்றவர்கள் சாதனத்தின் வாயிலாக அத்தகைய பெருநிலையை அடைவார்களாகில் அவர்களுக்கும் சுகப்பிரம்மத்திடத்திருந்த பேரியல்பு தானாக வாய்ப்பது திண்ணம். பரஞானத்தைப்பெறுவது அலாதியாக ஹிந்துமதத்தில் பிறந்த பெருமக்களது தனி வாய்ப்பு என்று நாம் கருதலாகாது. ஈண்டு நாம் எடுத்துக்கொண்டுள்ள விஷயத்துக்குப் பொருத்தமான சான்று ஆக முஸ்லீம் பெரியார் ஒருவரைப் பற்றி நாம் மொழியலாம். இஸ்லாமிய மதத்தில் ஸூபி சமயம் என்பது கிட்டத்தட்ட வேதாந்தத்துக்கு ஒப்பானது. ஸூபி மார்க்கத்தை அனுஷ்டித்த முஸ்லீம் பெரியார் ஒருவருக்குப் பரஞானம் வாய்த்து விட்டது. தாம் பெற்ற ஞானத்தின் அனுபவத்தை அவர் சொல்லால் விளக்கினர். அஹம் பிரம்மாஸ்மி — நானே பிரம்மம்; சிவோஹம்—நானே சிவம் என்னும் மஹாவாக்கியங்களுக்கு ஒத்தமுறையில் ‘நானே அல்லா’ என்று அப்பெரியார் பகர்ந்தார். அக்கூற்றை முஸ்லீம்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அது ஆண்டவனுக்குச் செய்யும் பெரிய அபராதமாகும். அத்தகைய அடாத கூற்றைப் பகர்ந்தவருக்கு நல்ல தண்டனை கொடுக்க அச் சமயவாதிகள் முன் வந்தனர். கை கால் முதலிய அங்கங்களை வெட்டினார்கள். ஒவ்வொரு படித்தரத்திலும் அந்த நிறைஞானியிடம் அவர்கள் கேள்விகள் கேட்டனர். நானே அல்லா என்னும் கூற்றை அவர் மாற்றவில்லை. கண்ணைப் பிடுங்கினார்கள். அதன் பிறகும் தாம் பகர்ந்தது உண்மை என்றார் அவர். நாவை அறுத்தார்கள். அதன்

பிறகும் தாம் பகர்ந்தது உண்மையென்று தலையை அசைத்தார். இறுதியாக அவரது தலையை வாங்கிவிட்டார்கள். ஆனால் உடலுக்குச் செய்த அத்தனைவிதமான சித்திரவதையும் ஆத்ம சொரூபத்தைத் தொடவில்லை. அத்தகையவர்கள் உடல் வாழ்க்கையில் இருப்பதற்கிடையில் உடலுக்குரிய இன்பதுன்பங்களில், கஷ்ட நஷ்டங்களில் கட்டுப்படாதவர்களா யிருக்கிறார்கள். இச்சிறந்த பேரியல்பை ஆயினும் இறைஞ்சு சுகர் ஆதியான தொல் நீர்மையாளர்க்கு மானுடம் வகுத்த அருள் துணை என்று நம்புகிறேன் எனத் தாயுமானவர் பகர்கிறார். தொல் நீர்மையாளர் என்பதன் பொருள் காலத்தைக் கடந்துள்ள ஆத்ம சொரூபத்திலேயே திளைத்திருப்பவர்களாம். அப் பெருமக்கள் மற்ற மானுடர் போன்று மண்ணுலகில் வாழ்ந்திருந்தாலும் பிரபஞ்சக் குறைபாடு எதிலும் கட்டுப்படாதவர்களாக இருக்கிறார்கள். இக்கருத்துக்கள் யாவும் இப்பாடலில் புதைந்துகிடக்கின்றன.

---

## 6. சுகவாரி

பற்றுவன அற்றிடு நிராசையென் றெருபூமி
 பற்றிப் பிடிக்கும் யோகப்
பாங்கிற் பிராணலயம் என்னுமொரு பூமிஇவை
 பற்றின்மன மறும்என்னவே
கற்றையஞ் சடைமௌனி தானே கனிந்தகனி
 கனிவிக்க வந்தகனிபோல்
கண்டதிங் நெறியெனத் திருவுளக் கனிவினெடு
 கனிவாய் திறந்தும் ஒன்றைப்
பெற்றவனு மல்லேன் பெருதவனுமல்லேன்
 பெருக்கத் தவித்துளறியே
பெண்ணீர்மை என்னஇரு கண்ணீரிறைத்துநான்
 பேய்போ லிருக்கஉலகஞ்
சுற்றிநகை செய்யவே யுலையவிட் டாயெனில்
 சொல்லஇனி வாயுமுண்டோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
 சோதியே சுகவாரியே.

பிரபஞ்ச வாழ்க்கையில் உயிர்கள் அனைத்தும் எத்தனை யெத்தனையோ பிரயத்தனங்களை யெடுத்துக்கொள்கின்றன. இந்த முயற்சிகளெல்லாம் எதன் பொருட்டு என்று எண்ணிப் பார்க்கவேண்டும். குறைகள் பல உயிர்களுக்கு உண்டு. தேவைகள் பல அவைகளுக்கு இருந்துவருகின்றன. குறைகளைப் போக்குதற்கும் தேவைகளை நிறைவேற்றுதற் கும் உயிர்கள் பாடுபட்டு வருகின்றன. தேவைகளைப் பூர்த்தி பண்ணப்பண்ண புதிய தேவைகள் வந்துகொண்டேயிருக் கின்றன. உண்பதை உதாரணமாக எடுத்துக்கொள்வோம்.

இன்றைய வாழ்வுக்கு உணவு தேவை. அதை வழங்கிப் பசியைத் துடைக்கிறோம். ஆனல் நாளைக்கு மீண்டும் பசி. உடல் வாழ்க்கையில் பசியை நிரந்தரமாக அகற்று தற்கு உபாயம் இல்லை. இன்றைக்கு உணவாக உடலுக்குக் கொடுத்தது நாளைக்கு இருக்குமிடம் தெரியாது வேறு வடி வெடுத்து மறைகிறது. உணவை இன்று மனிதன் பற்றிப் பிடிக்கிருன். நாளைக்கு அது அவனிடமிருந்து அற்றுப் போய் விடுகிறது. இனி ஐம்பொறிகளும் தமக்கேற்ற உணவை நாடிக்கொண்டிருக்கின்றன. வடிவங்களைக்காணக் கண் காமுறுகிறது. விரும்பிய வடிவத்தை அது பெறுகிறது, ஆனல் பெற்றதை நீடித்து வைத்திருக்க முடியாது விட்டு விடுகிறது. ஓசையைக் கேட்க காது நாட்டம் கொள்கிறது. பின்பு கேட்டதின் மீது கொஞ்ச நேரத்திற்குள் கயப்பு வந்து விடுகிறது. இதேமுறையில் பொறிகள் அனைத்தும் புலன் களைப் பெறவும் பெற்றவைகளை விலக்கவும் செய்துவருகின் றன. இதுவே வாழ்வின் போக்கு ஆகும். உயிர்கள் அனைத்தும் இவ்வுலகிலே எதையெதையோ பெறவும் பிறகு இழக்கவும் செய்துவருகின்றன. இவ்விதிக்கு விலக்கா யுள்ள உயிரைக் காண்பது அரிது. இத்தகைய வாழ்க்கை விதியைப் பற்றுவன அற்றிடும் என்கின்ருர் தாயுமானவர்.

உயிர்களிடத்துக் காணப்படாத நிலையொன்று உண்டு. ஆனல் அந்நிலை யாருக்குமே விளங்குவதில்லை. துன்பத்தில் உழன்றுகொண்டிருக்கும் வேளையில் இன்பம் யாருக்குமே விளங்காது. ஆனல் துன்பமோ ஏதோ ஒருவேளையில் வரு கிறது; மற்ருெரு வேளையில் அது மறைகிறது. துன்பம் மறையும்பொழுது இன்பம் விளங்குகிறது. ஆனல் உயிர் களைவிட்டுப் பிரியாதிருக்கின்ற மனநிலை யொன்றுண்டு. அந்த மனநிலை ஆசை என்னும் பெயர்பெற்றிருக்கிறது.

மனதுக்கு வேகம் கொடுப்பது ஆசை. வாழ்வினுள் உயிர் களைத் தூண்டுவது ஆசை. பெறுதற்கரியவைகளைப் பெற்றே யாகவேண்டும் என்று நம்மைப் பாடுபடும்படி தூண்டுவது ஆசை. இந்த ஆசையானது யாரிடத்தில் இருக்கிறது, யாரிடத்தில் இல்லை என்று பாகுபடுத்த முடியாது. ஜட நிலையிலிருக்கும் உயிர்கள் தம்போக்கில் ஆசைகொள்கின் றன. சிற்றுயிர்கள் ஆசைக்கு அடிமைப்பட்டு இருக்கின்றன. மண்ணுலகத்தவர் ஆசையினால் ஏவப்பட்டு அலைக்கழிந்து வருகின்றனர். விண்ணவர்கள் ஆசைக்கு அடிமைகளாகி ஓயாது உழைத்து வருகின்றனர். ஆசையினால் தூண்டப் பட்டே அகிலாண்டங்களும் இயங்கி வருகின்றன. பிர பஞ்சத்தின் போக்கு இப்படியிருக்கையில் இதற்கு நேர் மாறான நிலையொன்று உண்டு. அதை நிராசை யென்று ஒரு பூமி எனத் தாயுமானவர் கூறுகிறார். ஆசையற்ற நிலை நிராசையென நவிலப்படுகிறது. ஆசைக்கு அடிமைப்படாத நிலையொன்று உண்டு. ஞான பூமிகள் பலவற்றுள் அது உயர்ந்ததோர் இடம் பெற்றிருக்கிறது. அத்தகைய பெரு நிலத்திலே வசித்திருக்கும் வாய்ப்பை அடைந்தவர்கள் யாரோ ஒரு சிலர் இருக்கின்றனர். ஆகையினால்தான் அதைப்பற்றிய செய்தி நமக்கு எட்டியுள்ளது.

உயிர்கள் அனைத்தும் ஐம்பொறிகள் மூலமாகப்பெறுகிற பேறு போகம் என்று சொல்லப்படுகிறது. இந்தப் போகத் துக்கு நேர்மாறாக யோகம் என்பது ஒன்று உளது. போகத் தின் மூலமாகப் பெறுகிற இன்பம் நிலையற்றது. யோகத் தின் மூலமாகப் பெறுகிற இன்பம் நிலைத்திருக்கிறது. ஐம் பொறிகளின் செயலின்றி போகம் இல்லை. ஐம்பொறிகளின் செயலைத் தடுப்பது யோகம். இனி யோக சாதனங்கள் பல உள. அவைகளுள் பிராணவாயுவின் செயலை ஒழுங்குப்

படுத்துவது மிக முக்கியமானது. எரிகின்ற தீபத்துக்கு எண்ணெய் ஒழுங்காக வந்துகொண்டிருக்கவேண்டும். அதிகமான எண்ணெய் வந்தால் ஒருவேளை அது விளக்கையே அணைத்து விடலாம் அல்லது விரைவில் எரிந்து விரயமாய்ப் போய்விடலாம். எண்ணெய் குறைபட்டு வந்தால் விளக்கானது வேண்டியவளவுக்கு ஒளி விடாது. அளவெடுத்து வருகிற எண்ணெயானது விளக்கை நன்றாக எரியச் செய்கிறது. உடல் வாழ்வு விளக்கு எரிதற்கு நிகரானது. பிராணன் அதற்கு எண்ணெய் போன்று பயன்பட்டு வருகின்றது. இந்தப் பிராணனுடைய போக்குவரத்தைப் பிராணாயாமத்தின் மூலம் சரியாகப் பற்றிப் பிடித்துப் பயன் படுத்துவது நல்ல யோக சாதனமாகிறது. அப்படி யோக சாதனம் செய்கின்றவர்களே உடல் வாழ்வை நன்கு வாழ்ந்து வருகின்றனர். யோகியர்கள் அனுபவிக்கின்ற பரம சுகத்தை போகியர்கள் அனுபவிப்பதில்லை. அந்த அளவிற்கு உயிர் வகைகளுள் யோகியர்கள் போகியர்களுக்கு மிக்கவர் ஆகின்றனர். பிராணனைப் பிடித்து லயப்படுத்துவதின் மூலம் மரணத்தையே பெரிதும் வென்றவர்களாக யோகியர்கள் ஆய்விடுகிறார்கள். நீண்ட வாழ்வும் நிலைத்த சுகமும் பெறுதற்கு யோகம் சிறந்த சாதனம் என்றால் அதை ஏன் கைப் பற்றலாகாது? அதைக் கைப்பற்றுகிறவர்கள் பிரபஞ்சத்தில் ஒரு சிலர் இருக்கின்றனர். அவர்களைக் குறித்து பற்றிப்பிடிக்கும் யோகப் பாங்கில் பிராண லயம் என்னும் ஒரு பூமி என்று அண்ணல் இயம்புகின்றார்.

நிராசை என்கிற பூமி, பிராணலயம் என்கிற பூமி ஆகிய இரண்டு பாரமார்த்திகப் பெருநிலைகள் ஈண்டு இயம்பப்பட்டுள்ளன. உயிர் வாழ்க்கையை வளர்ப்பது ஆசை. பிறவிப் பெருங்கடலைப் பரப்பிக்கொண்டே போவது ஆசை.

ஆசையை அகற்றுமளவு உயிர்வாழ்க்கைக்கு வித்தாக இருக்கிற அக்ஞானம் அகலுகிறது. ஆசை அறவே அற்றுப்போய் விடுமிடத்துக் கூத்தாடுகிற மனதும் செயலற்றதாய்விடுகிறது. மனதுக்கு ஊக்கம் கொடுத்துக் கொண்டிருப்பது ஆசை. மனதை வளர்ப்பதும் ஆசை. பல ஜன்மாந்திரங்களில் மனது தொடர்ந்து இருந்து வருவதற்கு முகாமையாய் இருப்பது ஆசை. உபமானம் ஒன்றைக்கொண்டு இதை விளக்கலாம். நீராவி யென்கிற விசை இருப்பதால் நீராவி யந்திரம் ஓடுகிறது. பெட்ரோல் என்னும் எண்ணெயின் விசை இருப்பதால் மோட்டார் வண்டி ஓடுகிறது. பெட்ரோல் என்னும் எண்ணெய் இல்லாது போய்விட்டால் ஓடிக் கொண்டிருக்கிற மோட்டார் வண்டி தானாக நின்றுவிடுகிறது. அதே முறையில் ஆசை அற்றுப்போகுமிடத்து மனதுக்கு முதலில் வேகம் குறைகிறது. பிறகு மனது இருக்குமிடம் தெரியாது மறைந்துபோகிறது. அதற்கு ஒப்ப பிராணனுக்கும் மனதுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்துவருகிறது. பிராணாயாமத்தின் மூலம் பிராணனது செயலை ஒழுங்குப் படுத்துமளவு மனது அமைதியுறுகிறது. ஒழுங்குப்பாடே வடிவெடுத்துள்ள நிலைக்குப் பிராணனுடைய செயலைக் கொண்டுவந்துவிட்டால் கூத்தாடுகிற மனது தனது கூத்தை நிறுத்திவிடுகிறது. பிராணாயாமத்தின் ஒழுங்குப் பாட்டுக்கும் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளலாம். பம்பரம் ஒன்று செயலற்றுத் தரையில் கிடக்கிறது. அது செத்த பிணத்துக்கு நிகராகிறது. பின்பு அதைச் சாட்டையினால் சுழற்றினால் அது தடதடவென்று ஓலமிட்டுக்கொண்டும் குதித்துக் கொண்டும் சுழல்கிறது. அப்படி அது சுழல்வதற்கு நிகரானது பிராணனுடைய செயலும் சிந்தையினுடைய செயலும் ஒழுங்குப்பாடற்றிருக்கும் நிலை. மக்களிற் பெரும்பாலருடைய

வாழ்வில் பிராணனுடைய செயல் தடுமாற்றம் நிறைந்த தாகும். மனதின் செயல் கள்குடித்து தேளினல் கொட்டு உண்டு கிடக்கும் குரங்கின் கூத்துக்குச் சமானமானது. யோகசாதனத்தின் மூலம் வாழ்வை ஒழுங்குப்படுத்துபவனே சான்ருேன் ஆகிருன். முறையாகச் சுழல்கின்ற பம்பரமோ ஒய்ந்து உறங்குவது போன்று காட்சிகொடுக்கிறது. செயல் புரிதற்கிடையில் அது செயலற்றிருப்பது போன்று தென்படு கிறது. பம்பரத்தின் சிறப்பு எல்லாம் அப்பொழுது வெளி யாகிறது. அதே விதத்தில் சான்ருேன் ஒருவனுடைய சரீர வாழ்வு பிராணனை ஒழுங்குப்படுத்தியிருக்கும்பொழுது சிறப் புற்று ஒளிர்கிறது. செயல்கள் பல புரிவதற்கிடையில் செயல் எதிலும் சிக்கிக்கொள்ளாதவனுக அவன் இருக் கிருன். அவனுடைய மனது கூத்தாடுவதில்லை. வியவகா ரங்கள் பல செய்துவருபவன் போன்று அவன் தென்படு கிருன். அதற்கிடையில் அவன் உண்மையில் விச்ராந்தி யிலேயே வீற்றிருக்கிருன். ஆக, ஆசையை ஒழிப்பதாலும் யோகசாதனங்களைச் சரியாகப் பழகுவதாலும் மனதற்ற பெருநிலை மனிதனுக்கு வாய்க்கிறது. இந்த இரண்டுவித சாதனங்களின் விளைவு மனோலயம் அல்லது மனோ நாசமாம். இக்கோட்பாட்டை, இவை பற்றின் மனம் அறும் என்று அண்ணல் இயம்புகிருர். இது உயிர் வாழ்க்கையைப்பற்றிய மர்மமாகும். மனதற்ற நிலையை எய்துதற்கே நாம் முயன்று கொண்டிருக்கிருேம். ஆனுல் அதுதான் நமது குறி என்று நம்மில் யாரும் எளிதில் அறிந்துகொள்வதில்லை. மனோ நாசத் துக்கு மாருக மனவளர்ச்சியிலேயே நாம் முயன்று வரு கிருேம். மனதற்ற நிலை நாம் அடைதற்கிருக்கும் பெருநிலை யென நாள்தோறும் இயற்கைத்தாய் அயர்ந்த உறக்கத்தின் வாயிலாக நமக்குப் புகட்டி வருகிருள். அயர்ந்த உறக்கத்

தில் மனது தாற்காலிகமாகச் செயலற்றதாகிறது. அதன் விளைவு விந்தைக்குரியதாம். மனம் ஒடுங்கிய நிலையில் பிர பஞ்சம் நமக்கு இல்லை; நமது ஜீவபோதம் நமக்கில்லை; ஜீவ போதத்தைச் சார்ந்திருக்கின்ற உற்றார் உறவினர் நமக்கு இல்லை. நாம் இன்ன ஊரைச் சேர்ந்தவர்கள், இன்ன இனத் தைச் சேர்ந்தவர்கள், இன்ன மொழியைப் பேசுபவர்கள், இன்ன சூழ்நிலையில் இருப்பவர்கள், இன்னின்ன வாய்ப்புக் களை யெல்லாம் அடையப் பெற்றவர்கள் என்கிற பாகுபாடுக ளெல்லாம் அயர்ந்த உறக்கத்திலே அடிபட்டுப்போய்விடு கின்றன. ஆனால் அமைதியும் ஆனந்தமும் அந்நிலையில் அடி பட்டுப்போவதில்லை. அழியாததாக ஆனந்தம் எஞ்சி நிற் கிறது. அந்த ஆனந்தத்துக்காகவே உயிர்கள் அனைத்தும் ஓயாது உழைத்து வருகின்றன. உழைப்பு ஒழிந்தவிடத்து, மனது அற்றவிடத்து நாம் நாடுகிற ஆனந்தமே எஞ்சி நிற் கிறது. இவ்வளவு எளிதில் அடையக்கூடிய பெருநிலைக்கு அறியாமையினால் ஆசையை வளர்த்து மனதை விரித்து மனிதன் படாதபாடு படுகிறான்.

பேரானந்தம் என்னும் பெருவாய்ப்புக்குரிய மார்க் கத்தை ஆத்ம சாதகனுக்கு ஐயம் திரிபு அற விளக்கிக் காட்டுபவர் அப்பெரு நிலையை அடைந்திருக்கும் குரு ஆவார். தாயுமான சுவாமிகளுக்குக் குருவாக வாய்த்தவர் திருமூலரது பரம்பரையில் வந்துள்ள மௌனகுரு ஆவார். அவர் ஜடாதாரியாக இருந்தார். ஜடைகளையெல்லாம் கற்றை யாக உச்சந்தலையில் கட்டி வைத்திருந்தார். அப்படி அவர் வைத்திருந்ததில் தனி அழகு ஒன்று திகழ்ந்தது. அவர் புரிந்த அரிய செயல் பாரம்பரியமாக சத்குரு தீவிர சாதகன் ஒருவனுக்கு உபதேசித்தருளும் ஞான நிலையாகும். தீவிர சாதகன் முறையாக முதிர்ந்து பழுத்துக் கனியாவதற்கு

ஆயத்தமாயிருக்கும் காய்க்கு ஒப்பாகிறான். ஞான குருவோ நன்றாகப் பழுத்த கனிக்கு ஒப்பாகிறார். அந்தக் கனியை முதிர்ந்த காய்களுக்கிடையிலே வைத்தால் காய்கள் தாமாகவே விரைவில் பழுக்க ஆரம்பித்துவிடுகின்றன. பழுத்த பழம் இனி பழுப்பதற்கிருப்பவைகளுக்குச் செய்யும் பேருபகாரம் அவைகளுக்கிடையிலே சேர்ந்திருப்பதாம். அதே விதத்தில் பழுத்த ஞானி ஒருவர் பக்குவமாயிருக்கின்ற ஆத்ம சாதகர்களுக்குச் செய்கிற பேருபகாரம் அவர்களுடன் சேர்ந்திருப்பதாம். நிறை ஞானியுடன் சத் சங்கம் செய்வதால் பரிபக்குவமடைந்துள்ள சாதகர்கள் தாமே ஞானத்தைப் பெறுபவர் ஆய்விடுகின்றனர். ஞானி ஒருவர் படைத்துள்ள வாயை', கனி வாய் என்று கூறலாம். நலத்தையே இனிமையுடன் கூறுகிற வாயைக் கனிவாய் என்கிறோம். நன்கு கனிந்த கனியினின்று நறுமணம் கமழ்வது போன்று நிறைஞானம் கனிந்த சான்றோனுடைய வாயினின்று உலகை உய்விப்பதற்கான உயர்ந்த கோட்பாடுகளே வெளியாகின்றன. அப்படி அவர் வெளியிடுகின்ற கோட்பாடுகளை உள்ளன்போடு உரைக்கிறார். உயிர்கள் உய்வு அடையவேண்டும் என்னும் பேர் இரக்கம் அவர் உள்ளத்தில் பொலிந்து கொண்டிருக்கிறது. அது ஞானியர்க்கென்றே அமைந்துள்ள அலாதியான மன நிலையாகும். அசட்டையாகவோ பராமுகமாகவோ பேசுவது பெரியோர் போக்கு அன்று. நிறை மனம் படைத்தவர்களாயிருந்து மக்களை செந்நெறியிலே செலுத்தும் கருத்துடையவர்களாக சான்றோர் பேசுகின்றனர். தாயுமானவருக்கு வாய்த்த குரு மௌனியாதலால் இரண்டு தடவைகளுக்கு மேல் அவர் பேசவில்லை. தாயுமானவருக்கு மந்த்ரோபதேசம் செய்தது முதல் பேச்சு. பிரியும் பொழுது 'சும்மா விரு' என்றது இரண்டாவது பேச்சு. இந்த

இரண்டு பேச்சே தாயுமானவரை உய்விப்பதற்குப் போது மானவைகள் ஆய்விட்டன. ஆனால் அவர் பேசியது போத வில்லேயே என்கிற உணர்ச்சி ஒரு பக்கம். முடிவான நெறியை அவர் கூறிவிட்டாரே யென்று திருப்தியடைந் திருப்பது மற்றொரு பக்கம். இப்படி குருவுக்கும் தமக்கும் இடையிலே வாய்த்த பேரிணக்கத்தையும் தாம் அடையப் பெற்றுள்ள முடிவான நெறியின் மகிமையையும் அவர் இங்ங னம் கூறுகிறார். என்னவே (என்று கூறுதற்கு) கற்றை அம்சடை மௌனி தானே கனிந்தகனி கனிவிக்கவந்த கனிபோல் கண்டது இந்நெறி என திருவுளக் கனிவி னொடு கனிவாய் திறந்தும் ஒன்றைப் பெற்றவனும் அல் லேன் பெருதவனும் அல்லேன் என்கிறார்.

ஒவ்வொரு துறையிலும் உழைத்துப் பாடுபடுகிறவர் களுக்கு இடையிடையே மனக்கிலேசம் சிறிது உண்டாவது இயல்பு. தாம் கொண்டுள்ள லட்சியத்தில் தமக்கு வெற்றி வாய்க்குமோ அல்லது தோல்வி வந்துவிடுமோ என்னும் வியாகூலம் உள்ளத்தில் புகுந்துவிடும். அந்த வியாகூலத்தை யாருமே தன்னோடு வைத்திருப்பதில்லே. பிறரிடம் அதை யெடுத்துப் பகர்வது உலக இயல்பு. பிறர்க்கு அதை எடுத் துப் பேசுதலில் ஒருவிதமான ஆறுதல் உண்டாகிறது. பிற ரிடமிருந்து ஊக்கம் பெறுதலில் இன்னொருவித ஆறுதல் உண்டாகிறது. இத்தகைய மன இயல்பு ஆத்மசாதனத் தில் செல்லுகிறவர்களிடத்தும் தென்படுகிறது. தாயுமான வர் இவ் விதிக்கு விலக்கு ஆகவில்லே. பெருக்கத் தவித்து உளறியே என்கிறார் அவர். தாம் நாடுகிற பாரமார்த்திகப் பெருநிலேயை எப்படியாகிலும் பெற்றேயாகவேண்டும் என்று மிகவும் வாட்டம்கொண்டு பிதற்றியவன் ஆகிறேன் என்கிறார் அவர்.

பக்தி சாதனத்துக்கும் ஞான சாதனத்துக்கும் இடையில் பலத்த வேற்றுமை ஒன்று உண்டு. மனமுருகும் தன்மையது பக்தி சாதனம். மனம் வைரம்போன்று உறுதி பெறுவது ஞான சாதனம். பிரபஞ்சமே அழிந்துபட்டுப் போகுமிடத்தும் ஞானிக்கு நெஞ்சங் கலங்குவதில்லை. தனக்கு ஜீவபோதம் ஒன்றுமில்லையாதலால் தான் பெறுதற்கோ பெருதிருப்பதற்கோ எதுவுமில்லை என்னும் உறுதிப்பாடு ஞானியினிடத்து இருக்கிறது. ஆனல் பக்தனே தான் வழிபடு தெய்வத்தின் சாந்நித்தியத்தை உணரும்பொழுது ஆனந்தக் கூத்தாடுகிருன். அந்த சாந்நித்தியத்தை மறக்கும்பொழுது அல்லது தெய்வம் தனக்கு இன்னும் அனுக்கிரகம் செய்யவில்லை யென்று உணரும்பொழுது அவன் கண்ணீரும் கம்பலையுமாக வருந்துகிருன். அருள் தாகம் பிடித்து ஆருகக் கண்ணீர் பெருக்குவது பக்தி சாதனத்தின் சிறப்பு. ஆனல் ஞானியோ அதைக் குறித்து எள்ளி நகையாடுகிருன். யாண்டும் தனக்குச் சொந்தமாயிருக்கும் நிஜசொருபத்தைத் தான் பெறவில்லையென்று வருந்திக் கண்ணீர் சிந்துவது பெண்ணின் இயல்பு என அவன் எண்ணுகிருன். இந்நிலையை பெண் நீர்மை என்ன இரு கண்ணீர் இறைத்து என்று அவர் இயம்புகிருர்.

மனதிலுள்ள ஒரு குறைபாட்டை பேய்க்குணம் என்கிருேம். பேய் என்பது வேருென்றும் அல்ல. இன்னும் பண்பாடடையாது பதைத்துக் கொண்டிருக்கும் மனதே பேய் ஆகிறது. பிரபஞ்சத்திலிருக்கும் அனைத்தும் தாம் தாம் அடைதற்கிருக்கின்ற பெருநிலையை அமைதியாக எய்தி வருகின்றன. மனிதன் ஒருவன் மட்டும் அதற்காகப் பேய் போல் அலைகிருன். எப்பொழுதெல்லாம் மனிதன் முறை தவறி அலைந்து திரிகிருனே அப்பொழுதெல்லாம் உலகத்த

வர் அவனைச் சூழ்ந்து நின்று கொண்டு எள்ளி நகையாடு கின்றனர். நன்னெறியில் ஒழுங்காகச் செல்லுகிறவனைப் பார்த்துப் பரிகாசம் செய்பவர் யாருமில்லை. நெறி பிறழ்ந்து போகின்றவனைப் பார்த்தே உலகம் ஏளனம் செய்கிறது. அமைதியாக நட்சத்திரம் வானவெளியில் நகர்ந்து போவது போன்று சான்றோர் உலகத்தவர் ஏளனத்துக்கு இலக்கா காது தாம் நாடிய குறியைச் சென்றடைகின்றனர். ஆனால் நெறி பிறழுகின்றவர்களோ வீணில் அலைந்து திரிவதுமல் லாது உலகத்தவர்களுடைய புன்மொழிகளுக்கும் பரிகாசத் துக்கும் இலக்கு ஆகின்றனர். தமக்கு அத்தகைய சிறுமை வந்துவிட்டது என்பதை நான் பேய் போலிருக்க உலகம் சுற்றி நகை செய்யவே உலையவிட்டாய் எனில் சொல்ல இனி வாயுமுண்டோ ? என்கிறார். முறைதவறிப் போனதை யாருமே பிறர்க்கு விரித்து எடுத்து விளக்க விரும்புவதில்லை. ஆகையினால்தான் தான் சொல்லுதற்கு இனி வாயில்லை என்று அண்ணல் முடித்து விடுகிறார். இக்கருத்துக்கள் யாவும் மேலேயுள்ள பாடலில் பொதிந்திருக்கின்றன.

## 7. சுகவாரி

அரும்பொனே மணியேஎன் அன்பேஎன் அன்பான
அறிவேஎன் அறிவிலூறும்
ஆனந்த வெள்ளமே என்றென்று பாடினேன்
ஆடினேன் நாடிநாடி
விரும்பியே கூவினேன் உலறினேன் அலறினேன்
மெய்சிலிர்த் திருகைகூப்பி
விண்மாரி எனஎனிரு கண்மாரி பெய்யவே
வேசற் றயர்ந்தேனியான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வனு ஞலும்உனே
இடைவிட்டு நின்றதுண்டோ
என்றுநீ யன்றுநான் உன்னடிமை யல்லவோ
யாதேனும் அறியாவெறுந்
துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ஒரு மனிதன் எதற்குப் பெருமதிப்புத் தருகிருனே அதி னின்று அவனுடைய தரமும் மனபரிபாகமும் நன்கு விளங்கு கின்றன. உலக மக்களில் பெரும்பான்மையோர் பொன்னைப் பொருளெனப் போற்றுகின்றனர். ஏன் அவர்கள் அப்படிச் செய்யவேண்டும்? அழகிய ஆபரணங்கள் செய்வதற்குப் பொன் உதவுகிறது. பண்டங்களை மாற்றுதற்கு அது பயன் படுகிறது. பொன்னைப் படைத்திருப்பவன் அதை விலையா கக் கொடுத்து உலகில் வேறு எதை வேண்டுமானலும் வாங் கலாம். எனவே பொன் படைத்திருப்பது விரும்பியபொருள்

களையெல்லாம் படைத்திருப்பதற்கு நிகராகிறது. ஆதலால் மக்களுக்கு அதனிடத்தில் அவ்வளவு ஆசை. மனிதனிடத்துள்ள மூவித ஆசைகளுள் பொன் ஆசை ஒன்று. அதற்கு அவன் பெரிய மதிப்புக் கொடுத்திருக்கிறான். உலகத்தவர் அதனிடத்துக் கொடுத்துள்ள பெரிய மதிப்பைப் பரம்பொருளிடத்து வைத்து அப்பரம்பொருளை அரும்பொனே என்கிறார் தாயுமானவர். உலகத்தவனுக்குப் பொன் இருந்தால் எல்லாம் இருப்பதாகிறது. ஞானிக்கோ பரம்பொருள் அடையப்பெற்றிருந்தால் எல்லாம் அடையப்பெற்றதாகிறது. ஆதலால் எல்லார்க்கும் தெரிந்துள்ள பொன்னை உபமானமாகக்கொண்டு ஞானிக்கு மட்டும் விளங்குகிற பரம்பொருள் ஈண்டு மதிப்பிடப்படுகிறது.

சிறிய அளவு பொன் கொடுத்து பெருவாரியாக உணவுப் பொருள்களையும் உடை வகைகளையும் வீடு கட்டுதற்குரிய வஸ்துக்களையும் வாங்கலாம். அந்த அளவில் பொன் மதிப்புக்குரிய வஸ்துவாகிறது. ஆனால் பொன்னிலும் அரிய வஸ்துக்கள் சில இருக்கின்றன. அவைகளைப் பொதுவாக நவரத்தினங்கள் என்கிறோம். அவைகளை மணி என்று மொழிவதும் உண்டு. ஆயிரம் பொன் அல்லது பதினாயிரம் பொன் பெறும்படியான மணி இருக்கிறது. அத்தகையதை விலைக்கு வாங்க செல்வர்கள் சிலர்க்கே இயலும். விலைக்கு வாங்கிய மணியை தனவான்கள் அருமையாகப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். உடலிலே மணியை அணிந்திருக்கும் பொழுதும் அதற்குப் பாதுகாப்பு; அதைக் கழற்றி வைத்திருக்கும் பொழுதும் அதற்குப் பாதுகாப்பு. யாரும் திறக்க முடியாதபடியும் களவாட முடியாதபடியும் உறுதியான இரும்புப் பெட்டகத்தில் அவர்கள் மணியைப் பூட்டிவைக்கிறார்கள். அதற்கு அவர்கள் தரும் மதிப்பு அவ்வளவு பெரிய

தாம். உலகப்பொருள்களுள் மணிக்கே பெருமதிப்பு என்று மொழிவது மிகையாகாது. ஞானி ஒருவனுக்கு மதிப்புப் போட முடியாத பொருளாயிருப்பது பரம்பொருள். அப் பரம்பொருளைத் தாயுமானவர் மணியே என்று அழைக் கிறார். அவர் போற்றுகிற மணிக்கும் உலகத்தவர் போற்று கிற மணிக்கும் வேற்றுமை மிக உண்டு. மற்றவர்கள் களவாட முடியாதபடி உலக மணியை மாந்தர் பாதுகாத்து வைக்கின்றனர். பரம்பொருள் என்னும் மணியோ ஞானியர் உள்ளத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்கிறது. அதை யாரும் களவாட முடியாது. உலகத்தில் தென்படும் மணி யாரோ ஒருவனுக்கு உரியதாகிறது. அதை அணிந்திருப்ப வனைப் பார்த்து மற்றவர்கள் பொறாமைப்படுகின்றனர். அவனை வஞ்சித்தோ கொன்றோ அம்மணியை அபகரித்துக் கொள்ளலாமா என்று மனக்கோட்டை கட்டுகின்றனர். ஆனால் ஞானியின் உள்ளத்தில் ஒளிர்கிற மணி மற்ற உயிர் களை அருள்துறையில் வசீகரித்து இழுக்கிறது. ஞானியோடு இணக்கம் கொள்ளுகிறவர்களுக்கு அந்த ஞானியினிடத்து பக்தி ஓங்குகிறது. தாங்களும் ஞானநிலை எய்தவேண்டு மென்று விரும்புகின்றனர். ஞானியைக் குறித்துப் பொறா மைப்படுவார் யாருமில்லை. எனவே ஞானிக்குச் செல்வமா யிருக்கும் பரம்பொருளை மணியென்று மொழிவதே முற்றிலும் பொருத்தமானது.

அன்பு பாராட்டுவது உயிர்களின் இயல்பு. அன்பில் லாத உயிர்வாழ்க்கை ஒன்றுக்கும் உதவாது. சிற்றுயிர் பேருயிர் ஆகிய எல்லா உயிர்களிடத்தும் அன்பு இருக் கிறது. மனிதனிடத்துள்ள அன்பு உற்றார் உறவினர்க் குரியதாகிறது. மற்றவர்களிடத்து அது அதிகம் பாராட் டப்படுவதில்லை. விலை மிகக் கொடுத்துவாங்கிய மணி

ஒன்றை மனிதன் ஒருவன் தன் மனைவிக்கோ மக்களுக்கோ அணியாக அளிக்கிறுன். அப்படி அவன் செய்வது அன்புக்கு அறிகுறியாகிறது. தான் தேடிய செல்வத்தை அன்பின் மேலீட்டால் உற்ருர்க்கெடுத்து மனிதன் வழங்குகிறுன். அன்பினுல் தூண்டப்பெற்று உயிர்களுக்கிடையில் அரும் பெரும் தியாகங்கள் நிகழுகின்றன. புரு ஒன்று தன்னேடு இணைந்து வாழ்ந்திருக்கும் புருவுக்காக உயிர்கொடுக்கும். இணையைப் பிரிந்து அது உயிர்வாழாது. அன்பின் வலிவு அவ்வளவு பெரியது. பொருளை உயிருக்கு நிகராகக்கருதி அதைச் சேகரிக்கிற மனிதன் மனைவி மக்களுக்காகவென்றே செலவிடுகிறுன். எவ்வுயிர் எதனிடத்து அன்பு வைத்திருக் கிறதோ அதன்பொருட்டுத் தன்னிடத்து இருப்பதையெல் லாம் தயங்காது எடுத்து வழங்குகிறது. இரண்டு உயிர் களை ஒருயிர் ஆக்கவல்லது அன்பு. உலகத்தவர் எல்லோரும் அன்பே என்று அழைப்பதற்கான உயிர்கள் உள. ஞானி ஒருவன் அன்பே என்று அழைப்பதற்கு ஏற்றதாயிருப்பது பரம்பொருள். அப்பரம்பொருளைத் தாயுமானவர் **என் அன்பே** என்று அழைக்கிருர். உலகத்தவர்கள் உலக அன்புக்காகத் தியாகம் செய்கின்றனர். ஞானியோ தெய்வ அன்புக்காகத் தெய்வத்துக்கே தன்னைத் தியாகம் செய் கிறுன்.

அன்பு பாராட்டுவதை அனுசரித்துள்ள வாழ்க்கைத் தத்துவம் ஒன்று உளது. யாரிடத்தில் ஒரு மனிதன் தொடர்ந்து அன்பு பாராட்டி வருகின்ருனே அந்த மனித னுக்குத் தான் அன்பு பாராட்டும் உயிரிடத்துள்ள இயல்பு களெல்லாம் படிப்படியாக வந்து அமைகின்றன. துஷ்டன் ஒருவனிடத்து அன்பு பாராட்டினுல் அத்துஷ்டனிடத்துள்ள கீழான இயல்புகளெல்லாம் அன்பு பாராட்டுபவனுக்கும்

வந்துசேரும். ஆதலால் சான்றோர்கள் சாதாரண உயிர் களிடத்துப் பேரன்பே வடிவெடுத்திருப்பவர்களாகத் தென் படினும் உண்மையில் அவர்களுடைய அன்பு பரம்பொருளி டத்திலேயே வைக்கப்படுவதாகிறது. பரம்பொருளை நேசிக் கிறவர்கள் பிரபஞ்சத்திலுள்ள உயிர்கள் அனைத்தையும் இயல்பாகவே நேசிக்கிறார்கள். ஆனால் அவர்கள் அன் புக்கு இலக்காயிருப்பது பரம்பொருள். ஆதலால் அப்பரம் பொருளிடத்துள்ள தெய்வீக இயல்புகளெல்லாம் பக்தி பாராட்டுகிற ஆத்ம சாதகர்களுக்கு வந்தமைகின்றன. பரம் பொருள் பேரறிவு சொரூபம். ஆதலால் பரம்பொருளை நேசிக்கிறவர்களுக்குப் பேரறிவு வளர்கிறது. இந்த வாழ்க் கைத் தத்துவம் தாயுமானவர் மூலமாகவும் நிரூபிக்கப் பெறு கிறது. தம் அனுபவத்தை அவர் என் அன்பான அறிவே என்று இயம்புகிறார்.

உலக மக்களிடத்து அன்பு வைக்கிறபொழுது அவ்வுலக மக்களின் மனப்பான்மைக்கு ஏற்ப அன்பில் மாறுதல் ஏற் படுகிறது. நேசிக்கப்படுபவர் துன்புற்றிருந்தால் நேசிக் கிறவர்களுக்கும் துன்பம் வருகிறது. நேசிக்கப்படுபவர் இன்புற்றிருந்தால் நேசிக்கிறவர்களுக்கும் இன்பம் வருகிறது. இங்ஙனம் உலக அன்பின் விளைவாக இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவதுண்டு. ஆனால் தெய்வத்தை நேசிக்கிறவர் களுக்குத் துன்பம் கலவாத பேரின்பமே ஓங்குகிறது. இக் கோட்பாட்டைத் தாயுமானவர் என் அறிவில் ஊறும் ஆனந்த வெள்ளமே என்று இயம்புகிறார்.

பாடுதலும் ஆடுதலும் வெவ்வேறு வடிவெடுத்து மக்கள் எல்லாரிடத்தும் இருக்கிறது. குழந்தைகள் தம்போக்கில் பாடவும் ஆடவும் செய்கின்றன. அதன் மூலம் தங்கள் உள் ளத்தில் இலங்கும் தெய்விகத்தையே குழந்தைகள் வெளி

யிடுகின்றன. ஆனால் வயது முதிர்ந்தவர்கள் பாடவும் ஆட வும் செய்வதெல்லாம் வாழ்க்கையில் தாங்கள் கொண்டுள்ள குறிக்கோளை நிறைவேற்றுதல் பொருட்டேயாம். பதவியிலி ருக்கும் ஒரு பிரமுகருடைய ஆதரவைப்பெற விரும்பு கிறவர்கள் அப்பிரமுகரைச் சிலாகித்துப் பேசுவர். அப்படிப் பேசுவது அவர்களைச் சிலாகித்துப் பாடுவதற்கு ஒப்பாகும். அப்பிரமுகரைத் திருப்திப் படுத்துதற் பொருட்டு இங்கு மங்கும் ஓடி அலைந்து அவர்க்கான பலவிதக் காரியங்களைச் செய்து முடிக்க முந்துவர். அப்படிச் செய்வது ஆடுதற்கு ஒப்பாகிறது. எனவே அவரவர் லட்சியத்தை நிறைவேற்று தற்கு உலக மக்கள் தம்தம் போக்கில் பாடவும் ஆடவும் செய்கின்றனர். கடவுளுக்கென்று தங்களை ஒப்படைத்திருப் பவர்களும் கடவுள் நாட்டத்திலேயே கண்ணும் கருத்து மாயிருப்பவர்களும் கடவுளைக் குறித்தே முயன்று வருகின் றனர். இக்கோட்பாட்டைத் தாயுமானவர் ஆனந்த வெள் ளமே என்றென்று பாடினேன் ஆடினேன் என்று இயம்புகிறார்.

தான் விரும்பியதைப் பெற்றேயாகவேண்டும் என்று குழந்தை ஒன்று பெரு முயற்சி எடுத்துக்கொள்கிறது. தான் விரும்புவது இன்னதென்று பெற்றோரிடம் தெரிவிக்கிறது. பெற்றோர் தன் விருப்பத்தை நிறைவேற்றி வைக்காவிட்டால் குழந்தை சினந்து கொள்கிறது. பிறகு தன் கோபத்தை வெளியிடும் முறையில் வாய்விட்டு அழ ஆரம்பிக்கிறது. உலக மக்கள் தாங்கள் கொண்டுள்ள உலக ஆசைகளை நிறைவேற் றிக்கொள்ளுதற்பொருட்டு இத்தகைய செயல்களைச் சற்று ஏறத்தாழச் செய்து வருகின்றனர். ஆனால் இவையாவையும் கடவுளை அடைதற் பொருட்டுச் செய்வது சாலச் சிறந்தது. அதைத்தான் அண்ணலும் செய்கின்றார். நாடி நாடி விரும்

பியே கூவினேன் உலறினேன் அலறினேன் என்கின்றார் அவர். உலறுதற்குப் பொருள் சினத்தல் என்பதாம். ஓல மிட்டு அழுவது அலறுதல் எனப்படுகிறது.

கடவுள் நாட்டம் கொள்ளுகிறவர்களுக்கு ஆற்றல்கள் அதிகரிக்கின்றன. அப்படி வாய்க்கிற ஆற்றல் முழுதையும் கடவுள் நாட்டத்திலேயே மேலும் அவர்கள் கையாளுகின்ற னர். உணர்ச்சி மேலோங்குமிடத்து அதன் புறச் சின்ன மாக உடல் சிலிர்க்கின்றது. கைகூப்பி வணங்குதல் தானுக நிகழ்கிறது. இரு கண்களிலும் நீர் ஏராளமாகப் பெருக் கெடுக்கிறது. ஆனல் அது ஒரு பொழுதும் துன்பக் கண் ணீர் ஆகாது. அருள் நாட்டத்தை முன்னிட்டு வரும் கண் ணீர், இன்பக் கண்ணீருக்கு நிகரானது. அருள் நாட்டத் துக்கு அறிகுறியாக இப்படி உடலில் உண்டாகும் செயல் களையெல்லாம் மெய்சிலிர்த்து இருகை கூப்பி விண் மாரி எனஎன் இருகண்மாரி பெய்யவே என்று அண்ணல் இயம்புகின்றார். வானத்தினின்று மழையானது பெருமித மாகப் பொழிவது போன்று பக்தர்களுடைய கண்களினின் றும் அருள்நாட்டக் கண்ணீர் பெருமிதமாகப் பொழிவது இயல்பு.

கடவுளை நோக்கிக் கண்ணீர் சிந்தி அழுது புலம்பியான பிறகு அவ் அழுகையை நிறுத்திவிட்டு மனதினுள் தன் லட்சி யத்துக்கு ஏற்ற எண்ணங்களையோ உணர்வுகளையோ கொள் ளுவது இயல்பு. இத்தகைய செயலைச் சிறுர்களிடத்தும் காணலாம்; பக்தர்களிடத்தும் காணலாம். பக்தன் ஒருவன் தான் எவ்வளவுதான் தெய்வத்திடத்து விண்ணப்பித்த பிறகும் அவர் அருள் சுரக்கவில்லையே என்று மனதுக்குள் நொந்து கொள்கின்றுன். அச்செயலைத் தாயுமானவர் யான் வேசற்று அயர்ந்தேன் என்று சொல்லுகிறுர்.

காய்ச்சப்படுகிற பாகு அடுப்பின்மீது கொதித்துக் கொண்டிருக்கிறது. ஆயினும் அது பக்குவமாவதற்கு நெடு நேரம் கொதிக்கவேண்டியது அவசியமாகலாம். கடவுளை நோக்கிக் கண்ணீர் சிந்தி அழுகின்றவர்கள் பாக்கியவான்களே. ஏனென்றால் அவர்களுக்கு ஆறுதல் கிட்டுவது திண்ணம். ஆனால் அழ ஆரம்பித்த அதே வேளையில் இறைவனிடமிருந்து ஆறுதல் வந்துவிடும் என்று எதிர்பார்க்கலாகாது. நெடுங்காலத்துக்கு ஆத்மசாதகன் ஒருவன் அழுது கொண்டேயிருக்கவேண்டியது அவசியமாகலாம். நெடுங் காலம் அருள் தாகமெடுத்து அழுகின்றவர்களுக்கே இரும்பு போன்றிருக்கின்ற நெஞ்சம் இளகிப் பக்குவமாகிறது. அருள் நாட்டத்தில் நெடுங்காலம் ஈடுபட்டிருக்கவேண்டியது அவசியம் என்பது ஒருபுறமிருக்க ஜீவாத்மனுக்கும் பரமாத்மனுக்கும் உள்ள தொடர்பு மற்றொரு பக்கம் ஆத்மசாதகனுக்கு ஞாபகமூட்டப்படுகிறது. அலை எப்பொழுதுமே கடலுக்கு அன்னியமானதன்று. அங்ஙனம் பக்குவமடைந்துள்ள ஜீவாத்மன், பக்குவமடையாத ஜீவாத்மன் ஆகிய எல்லா ஆத்மாக்களும் எப்பொழுதாவது இறைவனுக்கு அன்னியமானவர்களாவதில்லை. அவரை விட்டுப் பிரிந்திருக்கவும் முடியாது. யாண்டும் அவரைச் சார்ந்திருப்பதுதான் ஜீவர்களின் இயல்பு. இக்கருத்துக்களையெல்லாம் இரும்பு நேர் நெஞ்சகக் கள்வன் நான் ஆனாலும் உனை இடைவிட்டு நின்றதுண்டோ? என்கிறார் தாயுமானவர். பொருள் ஒன்றை முறைதவறி அபகரித்து அதை யாருக்கும் பயன்படாது மறைத்து வைப்பவன் கள்ளன் எனப்படுகிறான். அம்முறையில் தாயுமானவர் தம்மையும் கள்ளன் என்று குற்றம் சாட்டிக்கொள்கிறார். பரம்பொருளைத் தம் உள்ளத்தில் ஒளிரச் செய்யாது மறைத்து வைத்தது தாம் செய்த கள்ளச் செயல் என்கின்றார் அவர்.

அலைக்கும் கடலுக்கும் சாசுவதமாகத் தொடர்வு இருப்பதுபோன்று ஜீவாத்மனுக்கும் பரமாத்மனுக்கும் சாசுவதமான தொடர்வு உண்டு. அத்தொடர்வை ஜீவாத்மனே அல்லது பரமாத்மனே அழித்துவிட முடியாது. **என்றுநீ அன்றுநான் உன்அடிமை அல்லவோ?** என வினவி, மாருத இத்தொடர்வை இறைவனுக்கு அவர் ஞாபகமூட்டுகிருர்.

உலகத்தவர் தாம் தாம் ஈடுபட்டுள்ள துறைகளுக்குப் பொருத்தமான மக்களைப் பொறுக்கி எடுக்கின்றனர். ராணுவத்துக்குப் பொருத்தமானவன் யார்? சிற்ப வேலைக்குப் பொருத்தமானவன் யார்? கைத்தொழிலுக்குப் பொருத்தமானவன் யார்—இப்படியெல்லாம் மக்களைத் துருவியாராய்ந்து அந்தந்தத் துறைக்கு ஏற்றவாறு அவர்களைத் தேர்ந்தெடுப்பது உலக வழக்கத்தில் இருந்து வருகிறது. கடவுளை அடையத் தகுதியுடையவர் யார் என்னும் ஆராய்ச்சியைச் செய்தால் பெரும்பாலோர் அல்லது கிட்டத்தட்ட உலக மக்கள் எல்லோருமே அதற்குத் தகுதியற்றவர்களாகப் போய்விடுவார்கள். தகுதியற்றவர்களைத் தகுதியுற்றவர்களாகச் செய்வது கடவுளது கருணாகரச் செயலாகும். அச்செயலைச் செய்தாகவேண்டும் என்று தாயுமானவர் தெய்வத்திடம் விண்ணப்பிக்கின்ருர்: **யாதேனும் அறியா வெறும் துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ?** இங்ஙனம் அவர் இறைஞ்சுகின்ருர்.

சத்சங்கம் அல்லது நல்லார் இணக்கம் ஒரு மனிதனுக்கு ஏற்பட்டுவிட்டால் அவன் எவ்வளவுதான் குறைபாடு உடையவனுக இருந்தாலும் அவன் முன்னேற்றம் அடைவது உறுதி. ஆதலால் **தொண்டரொடு கூட்டு கண்டாய்** என்கிருர் அவர். இக்கருத்துக்களெல்லாம் இப்பாடலில் பொதிந்திருக்கின்றன.

---

## 8. சுகவாரி

பாராதி அண்டங்கள் அத்தனையும் வைக்கின்ற
பரவெளியி னுண்மைகாட்டிப்
பற்றுமன வெளிகாட்டி மனவெளியினில் தோய்ந்த
பாவியேன் பரிசுகாட்டித்
தாராள மாய்நிற்க நிச்சிந்தை காட்டிச்
சதாகால நிட்டைஎனவே
சகசநிலை காட்டினை சுகாதீத நிலயந்
தனைக்காட்ட நாள்செல்லுமோ
காரார எண்ணரும் அனந்தகோ டிகள்நின்று
காலூன்றி மழைபொழிதல்போல்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மியா னந்தவெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவுமுகிலே
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

நாம் வசித்துவரும் நிலவுலகுக்குப் பார் என்பது ஒரு பெயர். இச்சொல் ஐம்பூதங்களில் ஒன்ருகிய மண்ணையும் குறிக்கிறது. நாம் வசித்துவரும் தேசத்தையும் குறிக்கிறது. பாரினுள் பகுதிகள் பல இருக்கின்றன. குடியிருப்பதற்கு வசதி ஒருபகுதியில் இருப்பது போன்று மற்றெரு பகுதியில் இருப்பதில்லை. பூமி முழுதையும் ஆராய்ந்து பார்த்தால் எத்தனை யெத்தனை விதங்களில் நிலவுலகம் அமைந்திருக் கிறது என்பது வெளியாகும். இனி, ஆங்காங்கு வசித்திருப் பவர்களுக்கு அந்தந்தப் பகுதியில் பெரும்பற்றுதல் வந்துவிடு

கிறது. பார் உலகினின்று பிரிந்துபோக யாருக்கும் விருப் பம் வருவதில்லை. அவரவர் வாழ்ந்திருக்கும் பகுதியே வாசத்துக்கு முற்றிலும் பொருத்தமானது என்கின்ற வாஞ்சை அந்தந்தப் பகுதியினிடத்து மக்களுக்கு வருகிறது. நிலத்தில் பற்றுவைத்து உரிமை பாராட்டுகிற இயல்பும் எல் லாரிடத்திலும் இருக்கிறது. மூவித ஆசைகளுள் மண்ணாசை ஒன்று. தனக்குரிய நிலத்தை விட்டுக்கொடுக்க யாருக்கும் விருப்பம் வருவதில்லை. பிறர்க்குரிய நிலத்தைத் தனக்கு உரியதாக்கும் அவா எல்லாரிடத்திலும் இருக்கிறது. மண் ணாசை பிடித்திருக்கிறவர்கள் மண்ணுலகு முழுதையும் தாங் கள் பயன்படுத்த முடியாது என்பதை அறிந்துகொள்வ தில்லை. உண்டியில் ஒருவன் விருப்பம் மிக வைத்திருக்க லாம். ஆனால் உலகிலுள்ள உண்டியை எல்லாம் யாரும் தானாகவே அருந்திவிட முடியாது. உலகிலுள்ள நிலத்தை யெல்லாம் ஒரு கூட்டத்தாரே தங்களுக்குரியதாக்க ஆசைப் படுவதில் பொருள் இல்லை. நிலவுலகம் தங்கள் தேவைக்கு மேல் எத்தனை யெத்தனையோ மடங்கு அகன்று கிடக்கிறது என்பதை அவர்கள் எண்ணிப்பார்ப்பதில்லை. ஒருவிதக் கண்கொண்டு பார்க்குமிடத்து இது பரந்த தொல்லுலகமா கிறது; மற்றொருவிதக் கண்கொண்டு பார்க்குமிடத்து வண் ணத்தில் இது சிறுத்துவிடுகிறது. சூரிய மண்டலத்தில் இருக்கிற மற்ற கிரகங்களோடு ஒப்பிடும்பொழுது நிலவுலகம் ஒரு வெறும் புள்ளியாய் விடுகிறது. பரந்த பார் உலகம் நுண்ணிய புள்ளியாக மாறுகிறது. வானத்திலிருக்கும் மற்ற சூரியமண்டலங்களோடு சீர் தூக்கும்பொழுது கோடிக் கணக்கான மைல்களில் விரிந்திருக்கிற நமது சூரியமண்டலம் முழுதும் சேர்ந்து ஒரு புள்ளியாய்விடுகிறது. இப்படி எண்ணிறந்த சூரியமண்டலங்கள் எண்ணிறந்த அண்டங்

களாக இயற்கையில் அமைந்திருக்கின்றன. எத்தனை யெத் தனையோ கோடி அண்டங்கள் ஆகாசத்தில் அல்லது வெட்ட வெளியில் மிதக்கிக் கொண்டிருக்கின்றன. அத்தனைக்கும் இடம் தருகிற வெட்டவெளியோ எல்லையில் அடங்காதது. இந்த வெட்டவெளியை ஜட ஆகாசம் என்கிறோம். பிரளய காலத்தில் அண்டகோடிகளைத் தன்னகத்து அடக்கி வைத் திருக்கிற ஜட ஆகாசமே சித்ஆகாசத்தில் ஒடுங்கி விடுகிறது. பரந்து விரிந்துள்ள ஆலமரம் ஒன்று கடுகு போன்றுள்ள ஒரு விதையினுள் ஒடுங்கியிருப்பது போன்று ஜட ஆகாசம் முழு துமே சித் ஆகாசத்தில் ஒடுங்கி விடுகிறது. சித் ஆகாசத் துக்குப் பரவெளி யென்பது மற்றொரு பெயர். இந்தப் பர வெளி எதனிடத்தாவது ஒடுங்குகிறதா என்னும் கேள்வி யெழுகிறது. பரவெளியானது காலதேச வர்த்தமானத்தில் கட்டுப்படாதது. ஆதலால் அதற்கு ஒடுக்கமும் விரிவும் இல்லை. அது யாண்டும் இருந்தபடி இருக்கிறது. ஜட ஆகாசம் அல்லது இகவெளியோ சிருஷ்டியில் தோன்றவும் பிரளயத்தில் ஒடுங்கவும் செய்கிறது. இத்தனை கோடி அண்டங்களும் தோற்றத்தை இழந்து ஒடுங்குவது வியப் புக்குரிய விஷயமாம். வியப்புக்குரியதெனினும் அதன் பிரளயம் மறுக்கமுடியாத உண்மையாம். இத்தகைய பேர மைப்பைக் குறித்து பாராதி அண்டங்கள் அத்தனையும் வைக்கின்ற பரவெளியின் உண்மை காட்டி என்கின்றார் தாயுமானவர். பாராதி (பார் + ஆதி) என்னும் சொல் மண் ணுலகு முதலிய என்று பொருள்படுகிறது. வைக்கின்ற என்னும்சொல் தன்னிடத்தில் தங்கியிருக்க இடம் கொடுக் கின்ற எனப் பொருள்படுகிறது. சிதாகாசத்தின் மீது ஐம் பூதங்களும் அவைகளினின்று உருவாகிற அண்டங்களும் சதா தோன்றிக்கொண்டும் மறைந்துகொண்டும் இருக்கின்

றன என ஈண்டு இயம்பப்படுகிறது. இது இகத்தைப் பற்றியதும், இந்த இகத்துக்கு உறைவிடமாயிருக்கும் பரத்தைப் பற்றியதுமான உண்மையாம். மெய்ப்பொருள் ஆராய்ச்சி பண்ணுகிற ஆத்ம சாதகர்களுக்கு இவ்வுண்மை ஒருவாறு எட்டுகிறது.

மனிதனுக்கு அகம் புறம் என்னும் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. புறத்தில் இருப்பவைகளிடத்தே மனித னுடைய மனது ஐம்பொறிகள் மூலமாக ஓடிக்கொண்டிருக் கிறது. புறத்தில் இருக்கும் ஜட ஆகாசம் என்னும் பெரு வெளி எவ்வளவு பெரியது என்பதை இதுகாறும் ஆராய்ந் தோம். இனி, மன வெளியைச் சிறிது ஆராய்ந்து பார்ப்பது அவசியமாகிறது. பற்று வைக்கும் தன்மை மனதுக்கு உண்டு. வெவ்வேறு மனிதர் வெவ்வேறு பொருள்களில் பற்று வைக் கின்றனர். ஒருவரிடத்தில் இருக்கிற பற்றுதல் முற்றிலும் அதே முறையில் இன்னெருவரிடத்தில் இருப்பதில்லை. முகச் சாயல் எங்ஙனம் ஒவ்வொருவருக்கும் தனித்தனி வியக்தி யாக அமைந்திருக்கிறதோ அங்ஙனம் பற்றுதலும் அவரவர் மனதுக்கேற்றவாறு அமைந்திருக்கிறது. பற்றுதலுக்கு ஏற்ப மனதினுள் புறவுலகின் பிம்பம் அமைந்திருக்கிறது. புறவுலகம் முழுதையும் அகவுலகமாகிய மனதினுள் அடக்க முடியுமா என்னும் கேள்வி பிறக்கக் கூடும். அதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். கனவில் ஒரு மனிதன் தான் கண்ட இமயமலை முழுதையும் மற்றுமொருமுறை மனதில் கற்பிக் கிறன். சூரியர்களையும் சந்திரர்களையும் நட்சத்திரங்களையும் கனவில் காண்கின்றுன். புறத்தில் தென்படுகின்ற அண்ட கோடிகள் அனைத்தையும் அகத்தில் அடக்கிவைத்துக் காண் கிற வல்லமை மனிதனுக்குக் கனவில் உண்டாகிறது. மன தினுள்ளே இருக்கின்ற பெருவெளியை மனிதன் ஆய்ந்து

கொண்டே போனல் அதற்கு அடிமுடிகாண அவனல் இய லாது. புறத்தில் இருக்கும் வெளி எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியது மனவெளி. அண்டங்கள் யாவையும் புறவெளி தாங்கியிருப்பது போன்று தான் பற்றுவைத் துள்ள அண்டங்கள் அனைத்தையும் மனவெளி தாங்கிக் கொண்டிருக்கிறது. புறவெளி பெரியதா மனவெளி பெரி யதா என்னும் கேள்வி பிறந்தால் அதற்குச் சரியாக விடை கொடுக்க முடியாது. ஒரு சிலர்க்குப் புறவெளி பெரியதாக இருக்கலாம்; வேறு சிலர்க்கு மனவெளி பெரியதாக இருக்க லாம். அந்தந்த மனிதனுடைய மனதுக்கு இருப்பிடம் அவனுடைய தேகம் என்று வைத்துக்கொள்ளலாம். தேகத் துக்குப் பிண்டம் என்பது மற்றொரு பெயர். அண்டத்தில் இருப்பதெல்லாம் பிண்டத்திலும் இருக்கிறது என்பது மேலோரது கூற்று. ஆதலால் புறவெளியும் மனவெளியும் ஒன்றுக்கொன்று நிகராய் இருக்கின்றன. இக்கோட்பாட்டை பற்று மனவெளி காட்டி என்கின்ருர் தாயுமானவர்.

கையில் அள்ளியெடுத்த சிறிதளவு ஜலத்தை ஆராய்ந்து பார்த்து அதன் அமைப்பு முழுதையும் அறிந்துகொண்டால் அண்டமெங்குமிருக்கும் ஜலத்தின் அமைப்பை நாம் அறிந்த வர் ஆகிருேம். ஏனென்ருல் நீரின் அமைப்பு யாண்டும் ஒரேவிதமாம். அதே விதத்தில் அண்டபகிரண்டமெங்கும் நிறைந்துள்ள வஸ்துவில் நம் கைவசம் உள்ள ஒரு சிறு பகுதியை ஆராய்ந்தறிந்துகொண்டால் எங்கும் வியாபகமா யுள்ள பொருள் முழுதையும் அறிந்தவர் ஆகிருேம். எங்கும் நிறை பொருளில் நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பகுதியா கிருேம். ஆராய்ச்சிக்கு நமக்கு எட்டக்கூடியதாக யாண் டும் இருப்பது நாமே. ஆதலால் நம்மை நாம் உள்ளபடி ஆராய்ந்தறிந்துகொண்டால் நீக்கமற எங்கும் நிறைந்துள்ள

பொருளை அறிந்தவர் ஆகிறோம். அமைப்பில் நாம் வேறு; அண்டமெங்கும் அமைந்துள்ள பொருள் வேறு அல்ல. மனது என்னும் தத்துவத்தை உடைத்திருப்பவன் மனிதன். இந்த மனோ தத்துவம் பரமாத்மனுக்கும் உண்டு. மனோ தத்துவத்தோடு கூடிய பரமாத்மனை சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவன் என்கிறோம். மனதில்லாது பிரம்மதேவனிடத்து சிருஷ்டியில்லை. அவர் படைத்துள்ள மனது சமஷ்டி. நாம் படைத்துள்ள மனது வியஷ்டி. அவருடைய மனது கடல் போன்றது. அதிலுள்ள ஒவ்வொரு அலையும் நமது மனது ஆகிறது. ஆக, அமைப்பிலும் செயல்புரிதலிலும் பிரம்மதேவனுடைய மனதும் ஜீவாத்மனுடைய மனதும் ஒரே பாங்குடையவைகள்.

நமது மனதின் செயலை இப்பொழுது ஆராய்ந்து பார்ப்போம். விழித்திருந்து ஜாக்கிரதாவஸ்தையில் வியவகாரங்கள் செய்கிறோம். அப்பொழுது புறவுலகின் காட்சி நமக்கிருக்கிறது. உறங்கும்பொழுது சொப்பனவஸ்தையில் மனது செயல்புரிகிறது. அப்பொழுது அகவுலகில் ஜகத் ஒன்று நமக்கு இருக்கிறது. விழிப்பு நிலையில் இருக்கிற ஜகத் வேறு; கனவில் காண்கிற ஜகத் வேறு. இவ்விரண்டினுள் நிலைத்திருப்பது எது, அழிந்துபட்டுப்போவது எது என்பது கேள்வி. விழித்திருக்கும்பொழுது கனவு உலகம் அழிந்து போகிறது; கனவு உலகத்தை நாம் நுகரும்பொழுது விழிப்பு நிலையில் உள்ள உலகம் அழிந்துபட்டுப்போகிறது. ஆக, இவையிரண்டும் ஒன்றையொன்று ஒதுக்கித்தள்ளும் தன்மையனவாம். இனி கனவற்ற உறக்கத்துக்குப் போகும்பொழுது மனது உண்டுபண்ணிய அகவுலகம் புறவுலகம் ஆகிய இரண்டும் அற்றுப்போய்விடுகின்றன. இதை வேறொரு விதத்தில் விளக்குமிடத்து மனது ஒடுங்கிய நிலையில் அகவுலகம்

இல்லே; புறவுலகம் இல்லே. எல்லாவித உலகங்களேயும் அனுபவித்துக்கொண்டு வருவது மனது. இந்த மனதில் பற்றற்றவராக பிரம்மதேவன் இருக்கிருர். இதில் பற்று உள்ளவர்களாக நாம் இருக்கிருேம். பற்றுடன் கூடியிருப் பதே நம்மிடத்துள்ள குறைபாடாம். உலகத்தைக் காட் சிக்குக் கொண்டுவருகிற மனது தோன்றவும் மறையவும் செய்கிறதென்ருல் இந்த மனதே நித்திய வஸ்துவல்ல. இது ஒருவேளேயில் இருக்கிறது; மற்ருெரு வேளேயில் இல்லாது போகிறது. அப்படி நிலேயற்ற மனதை நம்பி அதனுல் உண்டு பண்ணப்பட்டிருக்கும் அண்டங்களில் ஆங்காங்கு சிறு பகுதி களில் பற்றுமிக வைத்து நாம் ஏளனத்துக்கு உரியவர்களாக இருந்துவருகிருேம்.

மனிதனேப் பாபி என்று பல சந்தர்ப்பங்களில் பகர்வது உலக வழக்கு. சந்தர்ப்ப பேதத்துக்கு ஒப்ப பாபி என்னும் சொல்லுக்குப் பொருள் வேறுபடுகிறது. கிறிஸ்தவ மதக் கொள்கைப்படி மக்களாகப் பிறந்தவர்கள் எல்லோரும் பாபி கள். கீழ்மையிலேயே உழன்று கொண்டிருப்பவர்கள் என் பது அதன் பொருள். வேதாந்தக் கோட்பாட்டின்படி பாப மும் புண்ணியமும் ஒன்ருேடொன்று முரண்படுகிற இரண்டு இயல்புகள் அல்ல. ஒவ்வொரு செயலிலும் பாபமும் புண்ணியமும் கலந்தே இருக்கின்றன. செயலின் விளேவு அனுகூலமாயிருக்கிற பொழுது அது புண்ணியச் செயல்; பிரதிகூலமாயிருக்கும் பொழுது அது பாபச் செயல். பாபம் புண்ணியம் ஆகிய இரண்டும் நிலேயற்றவைகள். அனுதா பத்துக்குரிய நிலேயில் ஒருவன் அகப்பட்டுக் கொள்ளும் பொழுது 'அட பாபி' என்று அவன் அழைக்கப்படுகிருன். உண்மையில் அவன் கெட்டவன் அல்ல. வேண்டாத சூழ் நிலேயை வரவழைத்துக் கொண்டவன் என அந்நிலேயில்

அவன் பொருள்படுகிறான். இருக்க வேண்டிய பெருநிலை யில் இருப்பவன் பாபி என்று அழைக்கப்படுவதில்லை.

மனிதனுடைய அமைப்பே எத்தகையதென்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். அவனுக்கு மூன்று வித சரீரங்கள் இருக் கின்றன. அம் மூன்றும் முறையே ஸ்தூல சரீரம், சூட்சும சரீரம், காரண சரீரம் எனப்படுகின்றன. கட்புலனாகின்ற உடல் ஸ்தூல சரீரம். அது பஞ்ச பூதங்களால் ஆனது. ஐம் பெரும் பூதங்களுள் ஆகாசம் நீங்கலாக பாக்கி நான்கு பூதங் களும் மானுட உடலில் ஓயாது நிலைமாறி யமைந்துகொண் டிருக்கின்றன. பிருதிவி பூதத்திலிருந்து மனிதனுக்கு அன் னம் வருகிறது. அன்னத்தை அவன் ஓயாது உடலில் போட்டுக்கொண்டேயிருக்கிறான். அதை யேற்று சிலநாள் வைத்திருந்து பின்பு ஒதுக்கித்தள்ளும் செயலை உடல் ஓயாது செய்து கொண்டிருக்கிறது. நிலையாக பிருதிவி பூதம் உடலில் இருப்பதில்லை. அப்பு அல்லது நீரும் அத் தகையதே. உடலுக்கு நீரை மனிதன் கொடுத்துக்கொண்டே யிருக்கிறான். அது சுவாசத்திலும் வியர்வையிலும் மூத் திரத்திலும் ஓயாது வெளிக் கிளம்பிக் கொண்டே யிருக் கிறது; ஆக, நீர் என்னும் பூதமும் மனித அமைப்பில் நிலைத் திருப்பதில்லை. இனி, நெருப்பு என்னும் பூதம் உடலினுள் வைசுவானரன் என்னும் பெயர் பெற்றிருந்து உடல் வாழ்க் கையைக் கொண்டு செலுத்துகிறது. எரிகிற விறகுக் கட் டையில் அக்னி நிலைத்திருப்பது போன்று தென்படுகிறது. ஆனால் கணந்தோறும் அதில் புதிய வெப்பம் வர, பழைய வெப்பம் மறைந்து போகிறது. மானுட உடலிலிருக்கும் கத கதப்பும் அத்தகையதே. ஆக, அக்னியென்னும் பூதம் உட லில் ஓயாது மாறிக்கொண்டிருக்கிறது. வாயு என்னும் பூதமில்லாது உடல் வாழ்க்கை நிறைவேறாது. சுவாசிப்பதன்

மூலம் இந்த வாயு உள்ளே வரவும் வெளியே போகவும் செய்துகொண்டிருக்கிறது. ஆக, ஸ்தூல சரீரத்தில் நிலைத்திருப்பது ஒன்றுமில்லை. சதா தகனமாய்க் கொண்டிருப்பது தேகம் என்று சொல்லப்படுகிறது. பிள்ளைப்பருவத்திலிருந்து பிணமாய் மயானத்துக்குப் போகும் வரையில் உடல் ஓயாது மாறியமைந்து கொண்டிருக்கிறது. ஸ்தூல சரீரத்தின் பரிசு இது. மனிதனிடத்துள்ள மனது சூட்சும சரீரம் எனப்படுகிறது. இந்த மனது ஒருவேளையில் இருப்பது போன்று அடுத்த வேளையில் இருப்பதில்லை. மனிதன் ஒரு நாளைக்கு ஒரு மனம் படைத்தவனுகத் தென்படுகிருன். தனது ஆயுட்காலத்தில் தன் மனதை எத்தனையெத்தனை விதங்களில் மனிதன் மாற்றியமைத்துக்கொண்டு வந்திருக்கிருன் என்பது அவனுக்கே விளங்குவதில்லை. ஆக, சூட்சும சரீரத்தின் பரிசும் நிலையற்றது. அக்ஞானம் காரணசரீரம் எனப்படுகிறது. ஞானத்தால் அக்ஞானம் அழிக்கப்படுகிறது. அக்ஞானத்தை அழிப்பதே வாழ்க்கையின் குறிக்கோள். ஆக, காரண சரீரத்தின் பரிசும் அழியும் தன்மையுடையதாம். இக்கருத்துக்கள் அனைத்தையும் தொகுத்து மனவெளியினில் தோய்ந்த பாவியேன் பரிசுகாட்டி என்கிருர் தாயுமானவர். தாம் தெய்வத்தில் ஒன்றித்து பரசொருபமாக இருப்பதற்கு மாருக சரீரங்களில் தோய்ந்து கீழ்மையுற்றிருப்பதால் தம்மைப் பாவியேன் என்று அவர் அழைத்துக்கொள்கிருர்.

மனதுக்கு சிந்தை என்பது மற்ருெரு பெயர். மனதின் செயலை சிறிது நேரத்துக்காவது ஒதுக்கிவைக்க மனிதனுக்கு இயலுமாகில் அத்தகைய நிலை நிச்சிந்தை எனப்படுகிறது. சிந்தையற்ற நிலை யென்பது அதன் பொருள். அயர்ந்த உறக்கத்தில் மனிதனுக்கு நிச்சிந்தை. அந்நிலையில் துன்புறு

வார் யாருமில்லை. கனவற்ற அயர்ந்த உறக்கத்திலே ஜீவர்கள் அனைவரும் உண்மையில் பரத்தில் லயமானவர்களாக இருக்கிறார்கள். அப்படி லயமாயிருப்பது அவர்களுக்கு விளங்குவதில்லை; ஆயினும் அயர்ந்த உறக்கம் அனைவராலும் போற்றப்படுகிற பெருநிலையாம். விழித்திருக்கும் பொழுதே நிச்சிந்தையில் மனிதன் இருந்து பழகுவானாகில் அவன் பெருமகன் ஆவான். ஆனால் அவன் சிந்தையோடு கூடியிருந்து தன்னை அல்பனாக்கிக் கொள்கிறான். மக்களுள் அரசன் யார், ஆண்டி யார் என்னும் கேள்வி பிறக்கிறது. பொருளைப் பெருமிதமாகப் படைத்திருப்பதாலேயே ஒருவன் அரசனுக்கு ஒப்பாக மாட்டான். பொருள் ஒன்றுமே படைத்திராமையினால் ஒருவன் ஆண்டியாகமாட்டான். அரசன் ஆவதும் ஆண்டியாவதும் முற்றிலும் மனநிலையைப் பொறுத்திருக்கிறது. லட்சக் கணக்கில் பொருளைப் படைத்திருப்பதற்கிடையில் பிச்சைக்காரன் போன்று நடந்து கொள்பவர்கள் இருக்கின்றனர். சிறிதளவு பொருள் படைத்திருப்பதற்கிடையில் தாராளம் நிறைந்திருப்பவர்களைக் காண்கிறோம். மனதில் மேல்நிலையடையும் அளவு மனிதனிடத்துத் தாராளம் திகழ்கிறது. மனதில் கீழ்மையுறும் அளவு மனிதனிடத்து தரித்திரம் தாண்டவமாடுகிறது. மேன்மையுற்ற மனது விரிவடைந்த மனதாகிறது. விரிவடைகிற மனது அகண்டாகாரமாக விரிந்துவிடுமானால் அது மனதற்ற நிலை அல்லது நிச்சிந்தை ஆய்விடுகிறது. ஒரு உபமானத்தைக்கொண்டு இதை விளக்குவோம். மனதைக் கடலிலுள்ள ஓர் அலையாக வைத்துக்கொள்ளுவோம். அந்த அலையானது பெரிதாக விரிந்துகொண்டே போகிறது. கடலெங்கும் அது அகண்டாகாரத்தில் விரிந்துவிடுமானால் அலையென்னும் பெயரை அது இழந்துவிடுகிறது. கடல் என்னும் பெயர் சொல்லாமலேயே

அதற்கு வந்தமைகிறது. உலகில் வாழ்ந்திருக்கும் மனிதன் மற்ற உயிர்களுக்குத் தான் புரியும் பணிவிடைகளில் தாரா ளம் அதிகரித்துக்கொண்டே போனுல் மனதும் விரிவடைந்து கொண்டே போகிறது. அகண்டாகாரத்தில் விரிவடைந்த மனதை நிச்சிந்தை என்கிருேம். ஆக, பெருநிலையடை வதற்கு மனதிலுள்ள சிறுமையை அகற்றி அதை அகண்டா காரமாக்குவதே உற்ற உபாயமாம். இக்கருத்தை தாராள மாய் நிற்க நிச்சிந்தை காட்டி என்கின்ருர் தாயுமானவர்.

ஆத்மசாதனம் பழகுபவன் ஒருவன் ஆரம்பதசையில் குறிப்பிட்ட நேரங்களில் முறைபிறழாது நிஷ்டை செய்து பழகவேண்டும். அப்படிப் பழகுகிற பயிற்சியை யோக சாஸ்திரப்படி பகருங்கால் அது தியானப் பயிற்சி என்னும் பெயர் பெறுகிறது. ஞானமார்க்கத்திற்கு ஒப்ப அது ஆத்மானுசந்தானம் எனப்படுகிறது. எப்பெயரிட்டழைத் தாலும் புரிகிற சாதனம் ஒழுங்காக நடைபெற்ருக வேண்டும். சாதனத்தில் முன்னேற்றமடைகிறவனுக்கு நிஷ்டையில் இருப்பது நீடித்துக்கொண்டே போகிறது. மணிக்கணக் காக தியானத்திலிருப்பது நல்ல சாதகன் ஒருவனுக்கு சர்வ சாதாரணமாய் விடுகிறது. அப்படி முன்னேற்றம் அடைந்த நிலை சதாகால நிஷ்டை என்னும் பெயர் பெறுகிறது. மூச்சு விடுவதும் இருதயம் அடித்துக்கொண்டிருப்பதும் ஓய்வின்றி நிகழ்வது போன்று நிஷ்டையும் இடையீடில்லாததாக நல்ல சாதகனுக்கு மாறிவிடுகிறது. அத்தகைய நிஷ்டைக்கு மற் ருெரு பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. அது சஹஜ நிஷ்டை யெனப்படுகிறது. சஹஜ நிஷ்டை என்ருல் என்ன என்பதை முதலில் அறிந்துகொள்ளவேண்டும். சஹ என்னும் சொல் கூட எனப் பொருள்படுகிறது. ஜ என்பது ஜனித்தல் அல்லது தோன்றுதல் எனப் பொருள்படுகிறது. ஆகவே

சஹஜ என்னும் சொல்லுக்குப் பொருள் உடன் தோன்றியது என்பதாம். மூச்சு விடுவதும் ஹிருதயம் அடிப்பதும் மனிதனுக்கு உடன்பிறந்த செயல்களாம். வாழ்ந்திருக்கும்பரியந்தம் அச்செயல்கள் நிற்காது நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. சஹஜ நிஷ்டையோ அதிலும் உயர்ந்தது. அதன் உட்பொருளை ஆத்ம சாதகர்கள் அறிந்துகொள்ளுவது அவசியமாகிறது. ஓர் அரிய உபமானக் கதையின் மூலம் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அதை விளக்குகிறார்: "நள்ளிரவில் ஒரு மனிதன் தூக்கத்தினின்று எழுந்திருந்தான். கதவைத் திறந்துகொண்டு பக்கத்து வீட்டுக்குப் போனான். கதவை ஓயாது தட்டினான். உள்ளேயிருக்கும் பெரியவர் ஒருவரை உரக்கக் கூவியழைத்தான். உபத்திரவம் பொறுக்கமாட்டாது அப்பெரியவர் எழுந்துவந்து கதவைத் திறந்தார். அந்த அகாலத்தில் அம்மனிதன் எதற்காக அப்படி வந்து கூச்சல் போட்டான் என்று கேட்டார். வந்த மனிதன் தனக்கு சுருட்டுப் பற்றவைக்கத் தீ வேண்டுமென்று கேட்டான். 'அடே அசடே, உன் கையில் கைவிளக்கு ஒன்றைத் தூக்கிக்கொண்டு வந்திருக்கின்றாய். வேண்டிய தீயை உன் கையில் வைத்துக்கொண்டு என்னை ஏன் தூங்கும் வேளையில் நடுஇரவில் தொந்தரவு படுத்துகிறாய்?' என்று கேட்டார். மக்களுடைய நிலை, கைவிளக்கெடுத்துக்கொண்டு தீயைத் தேடிப்போனவனது நிலையை ஒத்திருக்கிறது. தன்னிடத்திருக்கும் ஆத்மானந்தத்தை மனிதன் உலகெலாம் தேடியலைகிறான்." இப்போதனையை நாம் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். நாம் நாடுகிற உறுதிப்பொருள் யாவும் நம்மிடத்திலேயே இருக்கின்றன. தங்கத்தில் செய்துள்ள ஆபரணம் ஒன்றைப் புதியபுதிய ஆபரணங்களாக மாற்றியமைத்துக்கொண்டே போகலாம். வடிவங்

கள் ஓயாது மாறியமைந்து கொண்டிருப்பதற்கிடையில் தங்கம் தங்கமாகவே இருக்கிறது. ஜீவாத்மன் என்னென்னவோ வடிவங்களைப் பல பிறவிகளில் எடுத்துக்கொண்டு போகலாம். அத்தனை விதப் பிறவிகளுக்கிடையில் அவன் ஆத்மானந்த சொரூபி. அப்பெருநிலை அவனைவிட்டு அகன்று போய் விடுவதில்லை. தன்னிடத்து யதார்த்தமாயுள்ள சத் சித் ஆனந்த நிலையை உணர்ந்து அதினின்று பிறழாதிருப்பது சஹஜ நிஷ்டையாகிறது. எக்கருமத்தைச் செய்தாலும் ஏது அவஸ்தைப்பட்டாலும் தன் சொரூபத்தை உணர்ந்து அதினின்று பிறழாது இருக்கக் கற்றுக்கொண்டவன் பெரு வாழ்வு வாழக் கற்றுக்கொண்டவன் ஆகிறான். இதைத் தாயுமானவர் கற்றுக்கொண்டார். ஆதலால் அவர் சதா கால நிஷ்டை எனவே சகசநிலை காட்டினை என்று இயம்புகிறார்.

தாம் மேலும் அடைவதற்கான பாரமார்த்திகப் பெருநிலை ஒன்று உளது. அதைத் தாம் இன்னும் பெறவில்லையென்றும், பரம்பொருள் அப்பெருநிலையைத் தமக்குக் கொடுத்தருளமாட்டாரா என்றும், அவர் பரிந்து விண்ணப்பிக்கின்றார். அவர் செய்கிற விண்ணப்பமாவது: **சுகாதீத நிலையந்தனைக் காட்ட நாள் செல்லுமோ?** இந்த நிலை யாது என்பதை ஆத்மசாதகன் அறிந்துகொள்வது அவசியமாகிறது. அதற்குச் சில உபமானங்கள் நமக்குத் தேவையாய் இருக்கின்றன. சூரியவெப்பம் நமது வாழ்க்கைக்கு முற்றிலும் இன்றியமையாதது. அது வாய்க்காதவிடத்து மண்ணுலகிலுள்ள ஸ்தாவர ஜங்கமங்கள் அனைத்தும் அழிந்து பட்டுப்போம். ஆனால் நமக்கு வாய்த்துள்ள சூரிய வெளிச்சமும் சூரிய வெப்பமும் மூல ஸ்தானத்தில் இருந்தபடி நமக்கு வந்துசேரவில்லை. நமக்கு ஒத்துக்கொள்ளும் முறையில்

வெட்டவெளியில் இருக்கும் காற்றிலே வடிகட்டப்பட்டவை களாக சூரிய வெளிச்சமும் வெப்பமும் நமக்கு வந்து சேரு கின்றன. அவ் வெளிச்சமும் வெப்பமும் படைத்துள்ள யதார்த்த நிலை மண்ணுலகிலுள்ள உயிர்களுக்கு ஒத்துக் கொள்ளாது. காற்றின் மூலம் முறை மாற்றியமைக்கப் பட்ட பிறகே அவைகள் நம் வாழ்க்கைக்கு ஒத்தவைகள் ஆகின்றன. ஆனந்தம் நம் நிஜசொரூபம். யாரிடத்திருந் தும் நாம் அதைக் கடன் வாங்குவதில்லை. ஆனல் அந்த ஆனந்தத்தை நமக்கு நாமே முறைமாற்றி அமைத்துக்கொள் கிறோம். சத்வம் ரஜஸ் தமஸ் என்கின்ற முக்குணங்களில் கலக்கி அவ்வானந்தத்தை நாம் அனுபவித்து வருகிறோம். மூன்று குணங்களும் நம்மிடத்து ஓயாது மாறிமாறி அமைந்து கொண்டிருக்கின்றன. அயர்ந்து உறங்கும் பொழுது நாம் தமோகுணத்தில் இருக்கிறோம். அப்பொழுதும் ஆனந்தம் நமக்குச் சொந்தம். விழித்திருக்கும்பொழுது நாம் ரஜோ குணத்திலிருக்கிறோம். பற்பல செயல்களின் மூலம் அப் பொழுது ஆனந்தத்தை அனுபவிக்கிறோம். ஆனல் அந்த ஆனந்தத்தைத் திரிவுபடுத்தும் தன்மை ரஜோகுணத்துக்கு உண்டு. திரிவுபட்ட ஆனந்தத்தையே துக்கம் என்கிறோம். பகல் திரிவுபட்டுவிட்டால் அதை இரவு என்று சொல்லுவது போன்று சுகம் திரிவுபட்டுவிட்டால் அது துக்கமாக நம் மால் அனுபவிக்கப்படுகிறது. துக்கமும் ஒருவித ஆனந்தம் என்பது அறிஞர்களுக்கே விளங்குகிறது. துக்கப்படுகிற வேளையிலும் ஜீவர்கள் ஆனந்தத்தில்தான் திளைத்திருக்கிறார் கள். இனி, ஜீவர்களிடத்து குறிப்பிட்ட சிலவேளைகளில் ஒரு சிறிதளவு சத்துவகுணம் ஓங்குகிறது. அப்பொழுது அமைதியுடன் கூடிய சுகம் அல்லது ஆனந்தம் பொலிகிறது. முக்குணங்களுக்கு உட்பட்டிருக்கும் ஆனந்தம் நிஜசொரு

பத்தில் திகழும் ஆனந்தம் அல்ல. நிஜசொருபத்தினின்று கீழே இறங்கிவந்துள்ள நிலையில் திகழும் ஆனந்தமாம் அது. குணங்களின் மூலம் ஒளிரும் ஆனந்தம் விகாரப்படுகிறது. ஆனந்தம் வேறு; அதை அனுபவிப்பவன் வேறு என்கின்ற மயக்கமும் அதில் சேர்ந்திருக்கிறது. ஜீவன் ஒருவன் எப்பொழுது குண அதீதத்துக்குப் போகின்றானோ அப்பொழுது குணங்களின் மூலம் வருகின்ற சுகத்துக்கு அதீதத்தில் போகிறான். சுகத்துக்கு அதீதத்தில் இருக்கிற நிலையைக் காட்டுதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும் என்று அண்ணல் கேட்கிறார். எவ்வளவு காலத்துக்கு ஜீவன் முக்குணங்களில் கட்டுண்டவனாக இருக்கிறானோ அவ்வளவு காலத்துக்கு அவனுடைய சுகமும் வரையறைக்கு உட்பட்டதாகிறது. குணத்தின் அதீதத்துக்குப் போகும்பொழுது வரையறையோடு கூடிய சிறிய சுகத்துக்கு அதீதத்தில் போகும் வாய்ப்பு கிட்டுகிறது. அந்நிலைதான் பேரானந்தம் எனப்படுகிறது. அதை அடையப்பெற்ற ஜீவனுக்குப் பிறகு பழுது இல்லை. பரத்தில் அவன் இரண்டறக்கலந்தவன் ஆகிறான். ஆனால் குணங்களுக்கு உட்பட்டிருக்கிறபொழுது எவ்வளவு மேல் நிலைக்குப் போனாலும் ஜீவாத்மன் திரும்பவும் கீழ்மையில் வீழ்தற்கு ஏது உளது. பழுதுபட்டுப்போகாத பேரானந்தப் பெருநிலை விரைவில் தமக்கு வாய்க்கவேண்டும் என்று அண்ணல் விண்ணப்பிக்கிறார்.

ஜீவன் அடைகிற பேறுகளுள் முடிவானது சுகாதீதம். பிரபஞ்ச சம்பந்தமான சுகங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது என்பது அதன் பொருள். வேறு பல பதங்களைப் பிரயோகித்து இதே பெருநிலை விளக்கப் பெறுகிறது. குண + அதீதம் = குணாதீதம், மன + அதீதம் = மனாதீதம், நாத+அதீதம்=நாதாதீதம் அல்லது நாதாந்தம் ஆகிய இப்

பதங்களெல்லாம் அதே முடிவான நிலையைச் சுட்டிக் காட்டு கின்றன. நெடுந்தூரம் ஓடிவரும் நதி கடலில் கலக்கும் பொழுது அதில் தனிச்சிறப்பு ஒன்று இருக்கிறது. பொங்கு தலும் வடிதலும் மாறிமாறியமைவது ஒரு சிறப்பு. நதியே கடல்போன்று தென்படுவது மற்றொரு சிறப்பு. நதி தன் வியக்தியை இழந்து முற்றிலும் கடல் ஆய்விடுவது அதன் முடிவான செயல். அதேவிதத்தில் ஜீவாத்மன் தனது வியக்தியை இழந்து பரமாத்மாவில் கலப்பது வெவ்வேறு விதங்களில் விளக்கப்பட்டிருக்கிறது. சிவபெருமான் திரிபுர சம்மாரம் செய்வதின் மூலம் இப் பெரியபேறு விளக்கப்படு கிறது. முக்குணங்களுக்குப் புறச் சின்னமாயிருப்பது திரிபுரம். சிவபெருமானது ஊர்த்துவ தாண்டவம் மற்றொரு விதத்தில் இப்பெருநிலையை விளக்குகிறது. கிருஷ்ணன் குழல் ஓசையை உண்டுபண்ணி உயிர்களையெல்லாம் தன் னிடத்துவந்து லயித்திருக்கும்படி செய்தது இந்த உயர் நிலையை விளக்குதற்கான மற்றொரு சம்பவமாம். ஈண்டு தாயுமானவர் படலம் படலமாகக் கார்மேகம் கூடுவதையும், அதற்குக் காற்றடித்துத் துணைபுரிவதையும், மேகங்கள் மோதி மின்னலையும் இடியையும் உண்டுபண்ணுவதையும், மழை பெருமிதமாகப் பொழிவதையும் உபமானமாகக் காட்டி ஜீவாத்மன் சுகாதீதத்தில் பரமாத்மாவில் ஒன்றுபடுகிற அரியசெயலை விளக்குகிறார். கார்மேகம் கூடுதலில் தனி அழகு ஒன்று உண்டு. உள்ளம் உவகையடையும்படி அது செய்கிறது. மழை பெருமிதமாகப் பெய்யும்பொழுது நில வுலகம் கழுவிச் சுத்தப்படுத்தப்படுகிறது. புதிய பயிர் பச்சைகள் தோன்றுதற்கு மழைநீர் முகாமையாகிறது. மின்னுகிற மின்னலும் இடிக்கின்ற இடியும் மழைநீருக்கு மின்சக்தியை வழங்கி மரம் செடிகொடிகளிடத்துப் புத்

துயிர் ஊட்டும் திறமையைத் தருகிறது. இடியிடித்து வருகிற மழையை ஏற்க ஆயத்தமாயிருக்கும்படி மக்களுக்கு இயற்கை விளம்பரம் செய்கிறது. இச்செயல்களுக்கு ஒத்தவைகளாய் அருள் துறையிலே ஈசன் உயிர்களை ஆட்கொள்ளும் செயல்கள் அமைந்திருக்கின்றன. மேகம் கூடும்பொழுது புறவுலக நன்மையை முன்னிட்டு உள்ளம் குளிர்வதுபோன்று இறைவனுடைய அருள் பெருகி வரும்பொழுது ஆட்கொள்ளப்படுதற்கிருக்கும் ஆத்மசாதகனது உள்ளத்தில் பேருவகை பொங்குகிறது. சொரேலென்று மழை கொட்டும்பொழுது நிலவுலகுக்குப் புதிய உயிர் வருவது போன்று உள்ளத்தினுள் இறைவனுடைய அருள்மாரி கொட்டும்பொழுது ஆத்மசாதகன் தன் வியக்தியை மறந்து இறைவன் மயமாக மாறியமைகிறான். புறத்தில் மின்னல் மின்னுவதுபோன்று அகத்தில் ஆத்மஜோதி பளீர் பளீர் என்று மின்னுகிறது. புறத்தில் இடியிடித்து வருகிற மழையை விளம்பரம் பண்ணுவது போன்று அகத்தில் அனாகததொனி கிளம்பி சுரத்தற்கிருக்கும் இறைவனுடைய அருளை விளம்பரம் பண்ணுகிறது. இடியின் கர்ஜனையைக் கேட்டு மக்கள் எல்லோரும் பெய்தற்கிருக்கும் மழையைப் பயன்படுத்துதற்கு ஆயத்தப்படுத்துவது போன்று அனாகத தொனியின் மூலமாக, அல்லது ஊர்த்துவ தாண்டவமாடும் இறைவனது பாதச் சிலம்பொலி மூலமாக, அல்லது ஓயாது ஹிருதய கமலம் என்னும் பிருந்தாவனத்தில் கண்ணன் ஊதிக்கொண்டிருக்கிற குழலோசையின் மூலமாகப் பரிபக்குவமடைந்துள்ள உயிர்கள் இறைவனைச் சேரவேண்டும் என்று கூவியழைக்கப்படுகின்றனர். இக்கருத்துக்களனைத்தும் கார்ஆர எண் அரும் அனந்தகோடிகள் நின்று கால் ஊன்றி மழை பொழிதல்போல் கால்வீசி மின்னிப் படர்ந்து பரவெளியெலாம் கம்மி ஆனந்தவெள்ளம்

சோராது பொழியவே கருணையின் முழங்கியே தொண் டரைக் கூவும் முகிலே என்னும் சொல் தொடரில் அடங் கிக்கிடக்கின்றன. கார்முகில் முதலியன மழையாக வரு ஷிக்கும் மேகத்தைக் குறிக்கின்றன. கால் என்னும் சொல் லில் இரண்டு கருத்துக்கள் அடங்கிக்கிடக்கின்றன. கால் ஊன்றுதல் என்பது மழைக்காலாக வடிவெடுத்தல் எனப் பொருள்படுகிறது. கால்வீசி என்று சொல்லுமிடத்து காற்று அடித்து என்னும் பொருள் புதைந்திருக்கிறது. படர்ந்து என்னும் சொல் பரவியெனப் பொருள்படுகிறது. பரிபக்கு வம் அடைந்துள்ள ஜீவாத்மனது உள்ளத்தினுள்ளே பர வெளியெல்லாம் கம்முகிறது. அது ஆத்மசாதகனிடத்து உண்டாகிற ஒருவகை அனுபவமாகிறது. பேரொளி பிறப் பதற்கு முன்பு உள்ளத்தினுள் எங்கும் காரிருள் நிறைந் திருப்பது போன்று தென்படுகிறது. புறவெளியில் மேகங் கள் படலம் படலமாகக் குவிந்து இருள் கட்டுவதற்கு ஒத்த தாகிறது உள்ளத்தினுள் உண்டாகிற அனுபவம். கார் மேகத்தினின்று பெருமழை ஓயாது கொட்டுவது போன்று உள்ளத்தினுள்ளே தாற்காலிகமாகச் செறிந்து கிடக்கிற காரிருளுக்கிடையில் சத்துவகுணத்தோடு கூடிய பேரானந் தப் பெருவெள்ளம் சோராது பொழிகிறது. குண அதீதத் துக்குப் போவதற்கு முன்பு நிகழ்கிற நிகழ்ச்சி அதுவாம்.

இறைவனுக்கு வழங்கப் பெறுகிற பெயர்கள் யாவும் இப்பாடலிலே மிளிர்கின்ற சீரிய கருத்துக்களுக்கு ஒத்தன வாம். சுத்த வஸ்துவாயிருப்பவர் பரம்பொருள். ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் அமைந்திருக்குமிடத்து ஒரு பொருள் மற்றொரு பொருளை மலினப்படுத்துகிறது. பரம்பொருள் இரண்டற்ற ஏக வஸ்துவாயிருப்பதால் சுத்த வஸ்து என்று அவரைத்தான் விளக்கலாம். சுகாதீதம் அல்லது குண அதீதத்துக்குப் போகிற ஆத்மா நிர்க்குணப் பிரம்மத்தில்

லயமாகிருன். நிர்க்குணம் சகுணம் ஆகிய இரண்டையும் சீர்தூக்கி ஈண்டு ஆராய்வது அவசியமாகிறது. கட்புலனு காத நீராவி நிர்க்குணப் பிரம்மம் போன்றது. கட்புலனு கின்ற கார்மேகம், வெண்மேகம், செம்மேகம் ஆகிய மூன்றும் மூன்று குணங்களைக் குறிக்கக்கூடியவைகள். குணத்துடன் கூடியிருக்கும்பொழுதும் குணங்கள் அற்றிருக்கும் பொழு தும் பரப்பிரம்மம் யாண்டும் தன்மயமாயிருக்கிருர். ஆதலால் அவர் நிர்க்குண வஸ்துவென ஈண்டு விளக்கப்படுகிருர். பிரபஞ்சத்தில் ஊடுருவிப் பாய்ந்திருக்கிறபொழுது அவர் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மாவாகப் பொலிகிருர். பிரபஞ் சத்தைக் கடந்த நிலையில் அவர் பரதெய்வம் என்று பகரப் பெறுகிருர். பிரபஞ்சத்திலுள்ள ஜோதிகள் சூரியர்களா கவும் சந்திரர்களாகவும் நட்சத்திரங்களாகவும் மின்னலாக வும் அக்னியாகவும் பொலிகின்றன. இத்தகைய ஜோதி களுக்குத் தோற்றமும் மறைவும் உண்டு. ஆனல் பரமாத்ம னிடத்திலிருப்பது பரஞ்சோதி. அதன் பிரகாசத்தில் ஒரு பொழுதும் விகாரம் உண்டாவதில்லை. அது யாண்டும் தன்மயமாயிருக்கிறது. பிரபஞ்சத்தின் மூலம் ஜீவர்கள் பெறுகிற சுகங்கள் வரையறைக்கு உட்பட்டவைகள். ஒரு வேளையில் சுகமாகவும் மற்றொரு வேளையில் துக்கமாகவும் பிரபஞ்சத்தில் தோய்ந்துள்ள ஆனந்தம் வடிவெடுக்கிறது. ஆனல் இந்த சுகங்களுக்கு அதீதத்தில் இருப்பது பிரம்ம சுகம் அல்லது பிரம்மானந்தம். கடல் போன்று அது கரை காணதது. ஆதலால் சுகாதீதத்தில் உள்ள அந்த சுகத்தை சுகவாரி என்று அழைக்கலாம். இக்கருத்துக்களை யெல்லாம் விளக்குதற் பொருட்டு சுத்த நிர்க்குணமான பரதெய்வமே பரஞ்சோதியே சுகவாரியே என்று தாயுமானவர் அப்பர மனைப் போற்றுகின்ருர். இக்கருத்துக்கள் யாவும் இப் பாடலில் அடங்கியிருக்கின்றன.

---

## 9. சுகவாரி

பேதித்த சமயமோ ஒன்றுசொன படியொன்று
பேசாது துறவாகியே
பேசாத பெரியோர்கள் நிருவிகற் பத்தினல்
பேசார்கள் பரமகுருவாய்ப்
போதிக்கும் முக்கண்இறை நேர்மையாய்க் கைக்
போதிப்ப தாச்சறிவிலே [கொண்டு
போக்குவர வறஇன்ப நீக்கமற வசனமாப்
போதிப்ப தெவரையனே
சாதித்த சாதனமும் யோகியர்கள் நமதென்று
சங்கிப்ப ராதலாலே
தன்னிலே தானு யயர்ந்துவிடு வோமெனத்
தனியிருந் திடினங்ஙனே
சோதிக்க மனமாயை தனைஏவி ஞலடிமை
சுகமாவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

ஒன்றுக்கொன்று மாறுபட்டும் வேறுபட்டும் இருப்பதை சிருஷ்டி என்கிறேம். வேற்றுமை இல்லாவிட்டால் சிருஷ்டி அல்லது படைப்பு நிகழாது. ஜகத்திலுள்ள அனைத்தும் ஒரே தன்மையை, ஒரே நிலையை எய்திவிடுமாகில் அது பிரளயம் எனப்படும். பிரளயத்தில் வேற்றுமையில்லை. கோடானுகோடி மக்களுள் ஒருவனுடைய முகவெட்டுப் போன்றும் முகச்சாயல் போன்றும் மற்றொருவனுடைய முக அமைப்பு இருப்பதில்லை. ஒரேவிதமாகத் தென்படும் பொருள்கள் அனைத்திடத்தும் துருவியாராய்ந்து பார்த்

தால் வேற்றுமையிருப்பது வெளியாகும். வடிவு வேற்றுமை யிலும் மிக்கது கருத்து வேற்றுமை. எத்தனை மனிதர்களிருக் கிறார்களோ அத்தனை விதமான மனங்கள் உண்டு. ஒருவ னுடைய மனது போன்று இன்னொருவனுடைய மனது இருப்பதில்லை. இவ்வுண்மை சான்றோர்களுடைய மனதுக் கும் பொருந்தியதாகிறது. சான்றோர்களுக்கிடையிலேயே ஒருவருடைய மனது போன்று இன்னொருவருடைய மனது இருப்பதில்லை யென்றால் மற்றவர்களுக்கிடையில் மன ஒற்று மையைக் காண்பது எங்ஙனம்? வேற்றுமை இருக்கிறது என்று சொல்லுமிடத்து ஒற்றுமை சிறிதேனும் இல்லை யெனப் பொருள்படுத்தலாகாது. அடையாளத்தில் முகத் துக்கு முகம் வேறுபடுகிறது எனினும் இவையாவும் மானுட முகங்கள்; இவையாவும் குரங்கு முகங்கள்—இப்படி இன ஒற்றுமை ஒருபுறம் இருக்கிறது. மனவேற்றுமைக் கிடையில் ஒற்றுமைப் பகுதியும் ஒரு பக்கம் இருக்கிறது. மன ஒற்றுமை சிறிதேனும் இல்லாது போய்விட்டால் சமுதாய வாழ்வுக்கு இடமில்லாது போய்விடும். அடிப்படையாயுள்ள ஒற்றுமை களைப் பின்னணியில் வைத்துக்கொண்டு மேற்போக்காக இருக்கும் வேற்றுமைகளை ஆராய்ந்து பார்க்கப்பார்க்க சிருஷ்டியின் அற்புதம் நமக்கு நன்கு விளங்கும். வேறுபடு கிற கருத்துக்களில் இனிமையும் ஒன்று உளது. ஒருவர் கருத்தோடு இன்னொருவர் கருத்தை சீர்தூக்கிப் பார்ப்ப தற்கு கருத்து வேற்றுமையிருப்பது முற்றிலும் அவசியமா கிறது. ஒரு மனிதனுடைய கருத்தை அவனுடைய சமயம் எனலாம். அக்கோட்பாட்டின்படி மானுடர் எத்தனைபேர் இருக்கின்றார்களோ அத்தனைவித சமயங்கள் உலகில் உள என்று இயம்புவது முறை. அவையாவையும் வகைப்படுத்தி நம் வசதிக்காக ஹிந்து மதம் என்றும் இஸ்லாமிய மதம் என்

றும் கிறிஸ்துவ மதம் என்றும் பௌத்த மதம் என்றும்—இப்படியெல்லாம் பாகுபடுத்துகிறோம். அவைகளுள் உட்பிரிவுகள் பல இருக்கின்றன. மேலும் துருவியாராய்ந்தால் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு மதக்கொள்கையிருக்கிறது விளங்கும். இதுவே மக்களுடைய மன அமைப்பைப் பற்றிய உண்மை. இவ்வுண்மையை **பேதித்த சமயமோ ஒன்று சொனபடி ஒன்று பேசாது** எனத் தாயுமானவர் பகருகிறார். சமயம் ஒன்றோடொன்று வேறுபடுவதைப் பேதித்த சமயம் என அவர் பகருகிறார்.

மனது எவ்வளவுக் கெவ்வளவு மேல் நிலைக்குப் போகிறதோ, அவ்வளவுக் கவ்வளவு சமய பேதம் குறைந்து கொண்டே வரும். ஓர் அரிய உபமானக் கதையின் மூலம் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இதை நன்கு விளக்குகிறார். விருந்து சாப்பிட வந்துள்ள மக்கள் எல்லோரும் கூடியிருந்து கொண்டு என்னென்னவோ பேசுகிறார்கள். உணவு வழங்கப்படும்பொழுது பேச்சுப் பெரிதும் குறைகிறது. ஆனால் உணவின் சுவையைப்பற்றியும் பரிமாறுவதைப் பற்றியும் பல தரப்பட்ட பேச்சுகள் இருக்கின்றன. உணவு உண்டு வயிறு நிறைந்து வரும்பொழுது பேச்சுக்கள் பெரிதும் குறைந்துவிடுகின்றன. கடைசியாகத் தயிர் அருந்தும்பொழுது உஸ் உஸ் என்கிற சப்தம் மட்டும் கேட்கிறது. பின்பு அந்த சப்தமும் நின்றுவிடுகிறது. உண்ட பிறகு மக்கள் உறங்கப் போகிறார்கள். உறக்கத்தில் அவர்கள் பேச்சற்ற நிலையை எய்துகின்றனர். சமயங்களைப்பற்றிய விவாதங்களும் இப்படிப்பட்டவைகள். சமய அனுஷ்டானங்களில் மேலே போகப் போக வேற்றுமைகள் தாமாக அடிபட்டுப் போகின்றன. சமய அனுஷ்டானங்களில் தீவிரமான அனுஷ்டானம் எது என்னும் கேள்வி பிறக்கிறது. சமயங்கள் யாவும் துறவை சிலா

கித்துப் பேசியிருக்கின்றன. துறவு எது என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். கடவுள் பற்றின் பொருட்டு உலகப் பற்றைத் துறந்தாக வேண்டும். தெய்வப்பற்றும் உலகப் பற்றும் சேர்ந்திருக்கமாட்டா. அவைகளிடத்துள்ள முரண் பாட்டை ஓர் அரிய முறையில் பரமஹம்சர் பகர்ந்துள்ளார்: 'ராமன் உள்ள இடத்தில் காமன் இல்லை; காமன் உள்ள இடத்தில் ராமன் இல்லை.' உலகப்பற்று நீங்கும்பொழுதே தெய்வப்பற்று ஓங்குகிறது என்னும் கோட்பாடு சமயங்கள் அனைத்துக்கும் ஒத்ததாம். இனித் துறவு நிலையை ஒவ் வொரு சமயமும் ஒவ்வொரு விதத்தில் விளக்குகிறது. துற வறம் பூண்டுள்ள வாழ்வும் ஒவ்வொரு சமயத்துக்கும் ஒவ் வொரு விதமாய் அமைந்திருக்கிறது. ஆனல் ஐம்பொறிகள் வாயிலாக உலக இன்ப நுகர்ச்சியில் ஈடுபடுவது துறவு ஆகாது என்னும் கொள்கை சமயங்கள் அனைத்துக்கும் பொதுவானது. உலக ஆசைகளை அகற்ற வேண்டும் என் னும் கொள்கையும் எல்லா சமயங்களுக்கும் ஒப்ப முடிந்த தாம். இனித் தீவிரமான துறவில் அனுஷ்டிக்கப்படுவது எது என்னும் கேள்வி பிறக்கிறது. மனதை ஒடுக்குதல் என் னும் சாதனம் தீவிரமான துறவில் நிகழ்கிறது. மனதை ஒடுக்கி ஒழித்துவிடுவது முடிவான குறிக்கோள். மனதற்ற நிலையே நிர்விகற்ப சமாதி எனப்படுகிறது. அந்த நிர்வி கற்ப சமாதியை மனதுடன் கூடியுள்ள நாம் எப்படி அறிந்து கொள்ள முடியும்? ஓரளவு நம்மால் அதை அறிந்துகொள்ள முடியும். நிர்விகற்ப சமாதியோடு ஓரளவு ஒத்துள்ள நிலை யொன்று நம் அனைவரிடத்தும் உண்டு. அதை சுஷுப்தி அவஸ்தை அல்லது கனவற்ற உறக்கம் என்கிறோம். கன வற்ற உறக்கம் கிட்டத்தட்ட நிர்விகற்ப சமாதிக்கு ஒத்தது. விழித்திருந்து வியவகாரங்கள் பண்ணும்பொழுது மனித

னுக்கு மனிதன் மனவேற்றுமை படைத்தவனாக இருக்கிறான். ஒரு மனிதன் மனது செயல் புரிவது போன்று இன்னொரு மனிதனுடைய மனது செயல்புரிவதில்லை. ஒரு மனிதன் உலகைப் பொருள்படுத்துவது போன்று இன்னொரு மனிதன் அதைப் பொருள்படுத்துவதில்லை. இனி, கனவு காண்பதிலும் மனிதனுக்கு மனிதன் வேறுபடுகிறான். ஒரு மனிதன் கனவு காண்பது போன்று இன்னொரு மனிதன் கனவு காண்பதில்லை. கனவு நிலையிலும் வேற்றுமை மிக இருக்கிறது. ஆனால் கனவற்ற உறக்கமோ உயிர்கள் அனைத்துக்கும் பொதுவானது. விழிப்பு நிலையில் சைவ சமய வாழ்வு, வைஷ்ணவ சமய வாழ்வு, கிறிஸ்தவ சமய வாழ்வு, இஸ்லாமிய சமய வாழ்வு என்று பேதித்திருப்பதெல்லாம் சுஷுப்தி அவஸ்தையில் ஒரே அபேதநிலை. அந்த அபேத நிலை சமயங்கள் அனைத்துக்கும் பொதுவானது. ஆக, உயிர்கள் அனைத்தும் நாள்தோறும் சிறிது நேரத்துக்காவது சுஷுப்திநிலை என்னும் அபேத நிலைக்குப் போகின்றன. விழித்திருக்கும் வியவகார நிலையில் வேற்றுமைக் கிடமிருப்பது போன்று கசப்புக்கும் இடமிருக்கிறது. ஆனால் சுஷுப்தியிலோ யாருக்கும் எதனிடத்திலும் கசப்பு இல்லை. தன்னைப்பற்றிய உணர்வும் பெரிதும் மங்கிக் கிடக்கிறது. ஆனால் தன்னைப்பற்றிய உணர்வு அழிந்து பட்டுப்போகவில்லை. விழித்தெழுந்தான பிறகு தன்னிடத்திருந்த ஒன்றையும் உணராத நிலையை ஒவ்வொருவனும் பகருகிறான். ஆக, சுஷுப்தியிலும் அந்த மனிதன் அழிந்து பட்டுப்போகவில்லை என்பது வெளியாகிறது. சுஷுப்திநிலையில் பேதமொன்றுமில்லை யென்பது வெளியாகிறது. ஆங்குள்ள அபேத நிலை அத்தனை உயிர்களுக்கும் பொதுவானதாம்.

நிர்விகற்ப சமாதி யென்பது ஆத்மசாதனங்கள் அனைத்தும் பூர்த்தியான நிலையாம். நதிகள் அனைத்தும் கடலைப்

போய் சேருவதைக் குறிக்கோளாகக் கொண்டிருப்பது போன்று ஜீவர்கள் அனைவரும் நிர்விகற்ப சமாதியின்மூலம் பரம்பொருளில் ஒன்றிப்பதைக் குறியாகக் கொண்டிருக்கின் றன. சமயங்களுள் சில நிர்விகற்ப சமாதிக்கு வழிகாட்டு பவைகளாக இருக்கின்றன. வேறு சில சமயங்கள் சொர்க்க பதவிபோன்ற இடைநிலைகளைக் குறித்துக்காட்டுவதோடு நின்றுவிடுகின்றன. எந்த சமயம் எவ்வளவு தூரம் மேன்மை யுற்றிருக்கிறது என்பதற்கு ஜீவர்களின் முடிவான குறிக் கோள் யாது என்பதை அச்சமயம் விளக்குவதினின்று வெளியாகும். சாதாரண வாழ்க்கையில் சுஷுப்தி நிலையில் உயிர்கள் அனைத்தும் அபேத நிலையை அடைந்திருப்பது போன்று ஆத்ம சாதனப் பண்பாட்டின்மூலம் அவைகள் அடையும் அபேதநிலை நிர்விகற்ப சமாதி எனப்படுகிறது. விகற்பமற்றது நிர்விகற்பம். மனதில் உண்டாகின்ற விருத்தி கள் அனைத்தும் விகற்பங்களாகின்றன. அலையில்லாத தூய நீர்நிலையானது தனது அடிமட்டத்தையும் நன்கு விளக்கிக் காட்டவல்லதாக இருப்பதுபோன்று மனதிலுள்ள விகற்பங் களெல்லாம் ஒதுக்கப்படுமிடத்து ஆத்ம சொரூபம் உள்ள வாறு ஒளிர்கிறது. சுஷுப்தியில் மனம் அடங்கியிருக்கிறது; ஆனால் மனோநாசம் உண்டாவதில்லை. விழித்தெழுந்தான பிறகு பழையபடி வியவகார விருத்திகளை மனது விரித்துக் கொள்கிறது. நிர்விகற்ப சமாதியிலோ மனோநாசம் ஏற்பட்டு விடுகிறது. திரும்பவும் விழிப்பு நிலைக்கு அச்சமாதியினின்று வருகிறவனுடைய மனது பழைய மனதாய் இருப்பதில்லை. வெந்துபோன கயிறு வடிவத்தை உடைத்திருந்தாலும் கட்டு தற்கு அது உதவுவதில்லை. நிர்விகற்ப சமாதியில் தன் வேகத்தையிழந்த மனது விழிப்பு நிலையில் புதிய விருத்தி எதையும் எடுத்துக்கொள்ளாதிருக்கிறது. விழிப்பு நிலையிலும்

நிர்விகற்ப சமாதியடையப் பெற்ற பெரியோர்கள் பேச்சற்று சாந்த சொரூபமாக இருக்கின்றனர். சமயவாதிகள் அவரவர் கொள்கைகள் என்னும் மனோவிருத்திகளைக் குறித்துக் கூச்சலிடுவது போன்று அப்பெரியோர்கள் பேசுவதில்லை. அவர்கள் யாண்டும் பரமானந்தத்தில் திளைத்திருக்கின்றனர். பேச்சாளர்கள் பல்லாயிரக்கணக்கான பேர்களை விட அவர்கள் மேலோர் ஆகின்றனர். அவர்கள் பேச்சற்றிருப்பதே உலகுக்குப் பெரு நன்மையை விளைவிக்கிறது. இக்கருத்துக்களை யெல்லாம் துறவாகியே பேசாத பெரியோர்கள் நிருவிகற்பத்தினால் பேசார்கள் எனத் தாயுமானவர் கூறுகிறார்.

சிவபெருமானுக்கு சொரூபங்கள் பல இருக்கின்றன. ஒவ்வொரு சொரூபமும் சிவதத்துவத்தின் ஒவ்வொரு பகுதியை விளக்குகிறது. இப்பிரபஞ்ச சொரூபமாக இருப்பவர் அவர். அவர் வேறு, பிரபஞ்சம் வேறு அல்ல. இத்தகைய சொரூபத்தில் பேச்சுக்கும் இரைச்சலுக்கும் கூச்சலுக்கும் விவாதத்துக்கும் வேண்டியவாறு இடமுண்டு. பேதித்த சமயங்கள் அனைத்தும் இந்த சொரூபத்தில் இடம்பெற்றிருக்கின்றன. இதே சிவனார் தமது உயர்ந்த நிலையில் தக்ஷிணாமூர்த்தியாக இலங்குகின்றார். பிரபஞ்ச நிலையில் கோடானுகோடி உயிர்களைத் தன்னகத்து அடக்கிவைத்துள்ள அப்பெரிய பொருள் தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும்பொழுது அவர் முன்னிலையில் வெறும் நால்வர் மட்டும் இடம் பெற்றிருக்கின்றனர். முடிவான பாரமார்த்திகப் பெருநிலையை எட்டுபவர் மிகச்சிலரேயென்பதை அத்தகைய கோலம் காட்டித்தருகிறது. ஊனக் கண்ணும் ஞானக்கண்ணும் சேர்ந்து மூன்று கண்களையுடைய அப்பரமன் தனது நிஜசொரூபத்தில் பேச்சற்று மௌனமுற்று

இருக்கிறார். பரிபக்குவம் அடைந்துள்ள நான்கு சிஷ்யர் களுக்கு அப் பாரமார்த்திகப் பெருநிலை தெளிவுற விளங்கி விடுகிறது. ஆதலால் தாங்களும் சலிக்கின்ற மனதை ஒதுக் கித் தள்ளிவிட்டு நிர்விகற்ப சமாதியில் அப்பரமனோடு ஒன்று பட்டு இருந்துவிடுகின்றனர். ஜீவர்கள் அடைய வேண்டிய முடிவானநிலை இதுவே என்பதை இப்படி சிவபெருமானே பரமகுருவாயிருந்து மௌனோபதேசத்தின் மூலம் புகட்டி யருளுகிறார். இக்கருத்தை பரம குருவாய் போதிக்கும் முக்கண் இறை நேர்மையாய்க் கைக்கொண்டு போதிப் பது ஆச்சு என்று அண்ணல் இயம்புகிறார். இத்தகைய பெருநிலையிலும் அப்பரம்பொருள் சதா இருந்துவருகிறார். கடலின் மேற்பரப்பில் அலைவீசி ஆரவாரம் நிகழ்கிறது. அதே கடலின் ஆழமான அடிமட்டம் அசைவற்று அமைதி யுற்றிருக்கிறது. பரமசிவனார் சொரூபத்தில் பேதித்த சம யங்கள் பேரிரைச்சல் செய்வதற்கு இடமிருப்பது போன்று, பேச்சற்று நிர்விகற்ப சமாதியில் மௌனமுற்று இருப்பதற் கும் அதில் இடமுண்டு.

தயிரில் நீரைக் கலந்து கடைந்தால்தான் வெண்ணெய் உண்டாகிறது. அப்படி சமய ஆராய்ச்சிகள் வேண்டிய வாறு செய்வதன் மூலமாகவே சமயத்தின் அதீதத்திற்குப் போக ஆத்ம சாதகர்களுக்குச் சாத்தியமாகிறது. சமய அதீதத்துக்குப் போகிறவர்கள் சாதிக்கவேண்டிய சாதனங் களைப் பற்றியும் விவாதங்கள் ஏராளமாக நிகழ்வதுண்டு. மனிதன் தானே அறிவு சொரூபம் என்றும் அறிவை நாடி அவன் இங்குமங்கும் தேடியலைய வேண்டியதில்லை யென்றும் பேசப்படுகிறது. மனிதன் ஆனந்த சொரூபம் என்றும், ஆனந்தத்தை நாடி அவன் இங்குமங்கும் தேடித்திரிய வேண் டியதில்லை யென்றும் புகட்டப்படுகிறது. இப்படிப் புகட்டு

கின்றவர்களுடைய கூட்டம் மிகப் பெரியதாய் இருக்கிறது. இப்படிப் புகட்டுவதை ஊக்கத்துடன் கேட்பவர்கள் கூட்டமும் மிகப் பெரியதாய் இருக்கிறது. மக்களில் யாரோ ஒரு சிலர் தன்னில் தானாய், அறிவு சொரூபமாய் அடங்கியிருக்கின்றனர்; ஆனந்த சொரூபமாய்த் திளைத்திருக்கின்றனர். பேச்சாளர்கள் ஆயிரக்கணக்கான பேர் புகட்டுவதைவிட அரிய சமயத்தொண்டு செய்பவனாக, தன்னில் தானாய் அறிவு சொரூபமாகவோ ஆனந்த சொரூபமாகவோ இருப்பவன் அதிகம் புகட்டுகிறான். சமயத்தைப்பற்றிப் பேசுகிறவன் சமயத்தை நன்கு புகட்டுபவன் அல்லன். சமயத்தை அனுஷ்டிக்கிறவனே தனது அனுஷ்டானத்தின் மூலம் அதை மற்றவர்களுக்கு நன்கு எடுத்துப் புகட்டுகிறான். சர்க்கரை தித்திக்கிறது என்று எத்தனை தடவை சொன்னாலும் அதில் தித்திப்பு வருவதில்லை. சர்க்கரையைக் கொஞ்சம் வாயிலெடுத்துப் போட்டுக்கொண்டால் தித்திப்பு அக்கணமே நுகரப்படுகின்றது. மனிதன் அறிவு சொரூபம் என்றும் ஆனந்த சொரூபம் என்றும் சமயங்கள் அனைத்தும் சாட்டுகின்றன. ஆத்ம சாதகர்களுள் யார் ஒருவன் தானே அறிவு சொரூபமாய், இன்ப சொரூபமாய் பேச்சற்று இருக்கின்றானோ அவனுடைய நிலையே உலகுக்கு நன்கு உதவுவதாகிறது. பாலில் கலந்த ஒரு துளி தயிர் அமைதியாகப் பால் முழுதையும் தயிர்மயமாக மாற்றுவது போன்று, சமயத்தைச் சரியாக அனுஷ்டிக்கின்றவனே மற்ற மனிதர்களுக்கும் அனுஷ்டான முறையை எடுத்து வழங்குபவன் ஆகின்றான். **இக்கருத்துக்களை அறிவிலே போக்குவரவு அற இன்பம் நீக்கமற வசனமாய் போதிப்பது எவர் ஐயனே? என** அண்ணல் வெளியிடுகிறார்.

எத்துறையிலாவது ஏதேனும் ஒரு விதத்தில் மனிதன் முன்னேற்றம் அடைந்துவந்தால் அதில் தனிச்சிறப்பு என்ன

இருக்கிறது, என்று அதைச் சிறுமைப்படுத்தும் இயல்பு உலகத்தவர்களிடத்து இருந்துவருகிறது. ஒருவன் செல்வம் படைத்தவன் ஆவானுகில் செல்வமில்லாதவன் ஒருவன் புதிய பணக்காரனை ஒரு விதத்தில் ஏளனம் பண்ணுவான். தான் ஏழை எனினும் தனது பாட்டனுர் படைத்திருந்த செல்வத்தோடும், செல்வாக்கோடும் சீர்தூக்கிப் பார்க்கு மிடத்து இப்புதிய பணக்காரன் எம்மாத்திரம் என்பான் அவன். பௌதிக விக்ஞானிகள் முயற்சியால் இன்றைக்கு விமானங்கள் வானத்தில் பறந்து வெவ்வேறு நாடுகளுக்குப் போகின்றன. இச்செயலில் புதுமை ஒன்றும் இல்லை; அந் நாளில் இராவணன் புஷ்பகவிமானம் வைத்திருந்தான் என்று சிலர் பகர்வதைக் கேட்கலாம். குறித்த இலக்கை நோக்கிச் செல்லும் பயங்கரமான நாசகாரிகளை இன்றைக்குச் சில வல்லரசுகள் பௌதிக விக்ஞானத்தின் துணைகொண்டு அமைத்து வைத்திருக்கின்றன. நமது முன்னோர்கள் அஸ்திர சஸ்திரங்களைப் படைத்திருந்தார்கள். அத்தகைய அலாதி சக்தி வாய்ந்த ஆயுதங்கள் குறித்த எதிரியை நோக்கிச் சென்று அவனைத் தேடிக் கண்டுபிடித்து ஒழித்து நாசம் செய்து விட்டுத் திரும்பிவரும் என்று நம்மவர்களில் சிலர் நம்மைக் குறித்துத் தற்பெருமை பேசிக்கொள்கின்றனர். இந்த இயல்பு உலக நடைமுறையில் மட்டும் இருப்பதல்ல. சமயத்துறையிலும் இது வேண்டியவாறு புகுந்திருக்கிறது. ஒரு சமயத்தைச் சேர்ந்தவர்கள் நல்ல அனுஷ்டான முறை கள் சிலவற்றைக் கையாண்டால் அம்முறைகளெல்லாம் அலாதியாகத் தங்களுக்கு உரியவைகள் என்றும், மற்றவர் கள் அவைகளைத் தங்களிடமிருந்து பார்த்துக் கற்றுக் கொண்டனர் என்றும், தங்கள் சொந்த மதத்துக்கு அவர்கள் சிறப்புக் கொடுப்பர். விவேகானந்த சுவாமிகள் ஹிந்து

மதத்தைப் புதுப்பிப்பதற்கான திட்டங்களை நிர்மாணித்த பொழுது அத்திட்டங்களெல்லாம் கிறிஸ்தவ மதத்திலிருந்து பெயர்த்தெடுத்து அமைக்கப்பட்டவைகள் என அம்மதத் தைச் சார்ந்தவர்கள் சிலர் சொல்லலாயினர். ஆனால் கிறிஸ்து நாதர் பிறப்பதற்கு முன்பே புத்த மதத்தில் அவையாவும் அமைந்திருந்தன வென்று சரித்திர பூர்வமாக விவேகானந்த சுவாமிகள் நிருபித்துக் காட்டினர். இனி, புத்த மதத்தில் அமைந்திருந்த அங்கங்களெல்லாம் வைதிக மதத்தில் மிகப் பண்டைக் காலத்தில் இருந்து வந்தன என்று நிருபிக்கலாம். கிருஷ்ணபகவான் தாம் கீதையில் புகட்டியவைகளெல்லாம் புதியவைகளல்ல; பண்டே அக்கோட்பாடுகள் யாவும் இத் தொல்லுலகில் அமைந்திருந்தன எனப் பகர்ந்திருக்கிறர். இப்படி அனைவர்க்கும் பொதுவாயுள்ள சமயக் கோட்பாடு களை எமக்குரியவைகள், உமக்குரியவைகள் என்று பொருள் சேராத உரிமை பாராட்டுவது சமயவாதிகளின் போக்கு. இக்கருத்தை சாதித்த சாதனமும் யோகியர்கள் நம தென்று சங்கிப்பர் என்கிறர் தாயுமானவர்.

ஆத்ம சாதனங்களைச் சரியாக அனுஷ்டிக்கின்றவர்கள் அந்த சாதனங்களைக் குறித்தோ, தாங்கள் ஒழுகுகிற சமயத் தைக் குறித்தோ, தனி யுரிமை பாராட்டுவதில்லை. அமைதி யாக அவர்கள் சாதனத்தில் ஈடுபட்டுக்கொண்டிருப்பது மிக உத்தமம். தாங்கள் இருக்குமிடம் இன்னதென்று மற்றவர் களுக்கு விளம்பரப்படுத்தாது வைத்திருப்பது அதிலும் உத்தமம். ஆனால் அப்படி மறைந்திருக்கவும் மனதை அடக்கிவைக்கவும் எல்லார்க்கும் இயலுவதில்லை. முன்னணி யில் வந்து தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளவே சாதகர் களிற் பெரும்பாலர் முந்துகின்றனர். சமய விளக்கத்திலே கருத்து வேற்றுமைகள் உண்டாகும்பொழுது அவ்வேற்று

மைகளைக் குறித்துப்பேசவும், பத்திரிகைகளில் எழுதவும் அன்னவர் செய்கின்றனர். ஒருவர் கூற்றை மற்றொருவர் மறுக்கின்றனர். அத்தகைய மறுப்புக்கு இன்னொருவர் தடைவிடுக்கின்றனர். தடைக்கு வேறொருவரிடமிருந்து விடையொன்று வருகிறது. இப்படியெல்லாம் வியவகாரங்களை விரித்துக்கொண்டு போவது அடங்காத மனதின் துஷ்டச் செயலாம். மனமடங்கியிருப்பவர் உலகில் தென்படுகிற குறைபாடுகளுக்கெல்லாம் நிவர்த்தி தேடுவதுமில்லை; கூறுவதுமில்லை. குறைபாடுகளைக் குறைபாடுகளாகக் கருதுகிற ஒருவன் அக்குறைபாட்டை உலகில் மேலும் வளர்க்கிறான். உலகில் சூதும் வாதும் இருக்கின்றன. அத்தகைய சூதுகளையும் வாதுகளையும் தன் மனதில் வாங்குகிற ஒருவன் தனக்குள்ளேயே அவைகளை மீண்டும் சிருஷ்டித்துக் கொண்டான் என்பது அவனுக்கு விளங்குவதில்லை. உலக வியவகாரங்களை மனதில் வாங்காது மனதை நிர்மலமாக வைத்திருப்பவர்களே மேலோர். தங்கள் மனதை அமைதியுற்றிருக்கச் செய்கின்றவர்களே தங்களையறியாது உலகுக்குப் பெருநன்மையை வழங்கிவருகின்றனர். அப்படியல்லாது மனம் போகின்ற போக்கிலெல்லாம் அதை விட்டுவிடுகின்றவர்கள் தங்களுக்கும் கேடு சூழ்கின்றனர், உலகுக்கும் கேடு சூழ்கின்றனர். மனதின் விகாரமே உலக வியவகாரமாகக் காட்சிகொடுக்கிறது. மனது என்னும் கண்ணாடியைப் போட்டுக்கொண்டு மனிதன் உலகைப் பார்க்கின்றான். மனக் கண்ணாடியின் நிறத்துக்கு ஏற்ப உலகின் நிறம் மாறித் தோன்றுகிறது. மனதை ஒதுக்கிவைக்கத் தெரிகின்றவனுக்கு உலகம் எனப்படுவது பரம்பொருளாகக் காட்சி கொடுக்கிறது. பரம்பொருளை மாயாகாரியமாகிய பிரபஞ்சமாக மாற்றியமைக்கவல்லது மனது. ஆதலால் மனதையே

மாயை என்று மொழிவது முற்றிலும் பொருத்தம். மன தையே மேலோர்கள் அரக்கன் என்றும் ராவணன் என்றும் அழைத்திருக்கின்றனர். மனது என்னும் அரக்கனை அழிப் பது செயற்கரிய செயல். மனது என்னும் ராவணனை சம் ஹாரம் பண்ண ஆத்ம சாதகன் ஒவ்வொருவனும் கடமைப் பட்டிருக்கிறான். அப்படிச் செய்யும்பொழுதே ராமா யணத்தை அவன் தன் வாழ்வின் மூலம் எழுதிப் பூர்த்தி பண்ணுகிறவன் ஆகிறான். மனதைத் துறப்பதே வாழ்வின் முடிந்த நோக்கமாகும். மனதைத் துறத்தல் என்னும் துற வறத்தில் ஈடுபட ஒவ்வொரு சாதகனும் கடமைப்பட்டிருக் கிறான். அப்படியல்லாது மனம் தன்போக்கில் கூத்தாடு தற்கு இடங்கொடுக்கின்றவளவு ஆத்ம சாதகன் தனது பெருநெறியினின்று வழுவியவன் ஆகிறான். இக்கோட் பாட்டை ஆதலாலே தன்னிலே தானாய் அயர்ந்துவிடு வோம் என தனியிருந்திடின் அங்ஙனே சோதிக்க மன மாயைதனை ஏவினால் அடிமை சுகமாவது எப்படி சொலாய் எனத் தாயுமானவர் வெளியிடுகின்றார். இக்கருத் துக்கள் யாவும் அடங்கியுள்ள பாடல் இது.

## 10. சுகவாரி

அண்டமுடி தன்னிலோ பகிரண்ட மதனிலோ
அலரிமண் டலநடுவிலோ
அனல்நடுவி லோஅமிர்த மதிநடுவி லோஅன்பர்
அகமுருகி மலர்கள்தூவித்
தெண்டமிட வருமூர்த்தி நிலையிலோ திக்குத்
திகந்தத்தி லோவெளியிலோ
திகழ்விந்து நாதநிலை தன்னிலோ வேதாந்த
சித்தாந்த நிலைதன்னிலோ
கண்டபல பொருளிலோ காணுத நிலையெனக்
கண்டசூ னியமதனிலோ
காலமொரு மூன்றிலோ பிறவிநிலை தன்னிலோ
கருவிகர ணங்களோய்ந்த
தொண்டர்க ளிடத்திலோ நீவீற் றிருப்பது
தொழும்பனேற் குளவுபுகலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

உலகில் வாழ்ந்திருக்கிற மனிதன் உலகிலே தனக்குப் பயன்படுகின்ற யாவையும் தன்னிஷ்டம்போல் பயன்படுத்த முயலுகிறுன். ஆனுல் ஒவ்வொரு படித்தரத்திலும் அவனுக்கு முட்டுக்கட்டைகள் பல குறுக்கிடுகின்றன. எவ்வளவு தான் முயன்ருலும் ஓரளவுக்கு மேல் இயற்கையைத் தான் வசப்படுத்த முடியாது என்பதை அவன் நாளடைவில் உணருகிருன். பின்பு தன்னிலும் மிக்கதோர் சக்தி இயற்கை முழுதிலும் ஊடுருவிப் பாய்ந்திருப்பதை அவன் அறிய வருகிருன். அந்த சக்தியில் ஒழுங்குப்பாடும்,

உயிர்களைப் பண்படுத்தும் திறமையும் இயற்கையின் நடை முறையைப் பிசகாது கொண்டுசெலுத்தும் ஆற்றலும் இருப் பதைக் காண்கிருன். அச்சக்தியே தெய்வம் என மனிதனல் போற்றப்படுகிறது. சமயங்கள் யாவும் அதை வணங்கு தற்கென்றே அமைந்துள்ளன. அருவாயுள்ள அந்த சக்தி உரு எடுத்திருக்கிறது என்றும் மனிதன் யூகிக்கிருன். தான் எடுத்துள்ள வடிவத்திலேயே தெய்வமும் இலங்கி வருவ தாக எண்ணுகிருன். ஆனல் தன் வடிவத்திலுள்ள குறை பாடுகளெல்லாம் தெய்வத்திடத்து இல்லையென்றும் தனது சூழ்நிலையில் உள்ள வரையறைகளும், இடைஞ்சல்களும் தெய்வம் வசித்துவருகிற இடத்தில் இருக்கமுடியாது என் றும் அவன் முடிவுகட்டுகிருன். தனக்கு அவசியம் ஏற்படும் போதெல்லாம் தெய்வத்திடத்து அவன் பரிந்து வீண்ணப் பிக்கிருன். அப்படி அவன் வணங்கி வேண்டும்பொழுது தான் போற்றும் தெய்வம் மேல் உலகில் எங்கேயோ இருப்ப தாகத் தன் கருத்தை மேல் நோக்கிச் செலுத்துகிருன். கடவுள் எங்கேயிருக்கிருர் என்னும் கேள்வியைக் கிளப்பும் பொழுது அவர் சுவர்க்கத்திலோ, வைகுண்டத்திலோ, கைலாசத்திலோ இருப்பதாக விடை வருகிறது. அந்தப் பரமபதம் மிக உயரத்தில் மேல் உலகமாக இருக்கிறது என்பதே மனிதனுடைய கற்பனையாகும். தெய்வத்தை வணங்கி வேண்டும் பொழுதெல்லாம் மனிதனுடைய பார்வை விண்ணுலகை நோக்கி மேலே போகிறது. தெய்வம் வீற்றி ருக்கும் லோகம் எவ்வளவு உயரத்தில் இருக்கிறது என்னும் கேள்வி எழும்பொழுது அண்டமுடிதன்னிலோ என்பது முதலில் கிளம்பும் கேள்வியாகிறது. அனைத்துக்கும் மேலா கிய உச்சநிலை முடி எனப்படுகிறது. கண்கூடாக விண் ணிலே தென்படும் அண்டத்தின் முகடே பரமபதமாகிறது என்பது மனிதனது முதற் கொள்கையாகிறது.

எத்தனையெத்தனையோ சூரிய மண்டலங்களாகவும் நட்சத்திர மண்டலங்களாகவும் தென்படுகின்ற யாவும் கட்புலனுகின்ற அண்டமாகிறது. இதற்கப்பால் கட்புலனுகாத அண்டம் இருக்கக்கூடும் என்று மனிதன் யூகிக்கிருன். அப்படி அவனுடைய அறிவுக்கும் இந்திரியங்களுக்கும் எட்டாத நெடுந்தொலைவில் இருக்கும் அண்டத்தை பகிரண்டம் என அவன் அழைக்கிருன். நம் நாட்டினின்று சற்று எட்ட இருக்கும் நாட்டைப் புறநாடு என்கிறோம். அப்படி அதைப் புறநாடு என்று அழைத்தாலும் பூமியிலேயே அது தொலைவில் இருக்கிறது. நாம் காணும் நாடுகள் பூமிக்கு அப்பாலிருப்பவைகள் அல்ல. அதே விதத்தில் பகிரண்டம் என்று சொல்லப்படுவது அகண்டத்தில் விரிந்தோடும் ஆகாசத்துக்கு அப்பாற்பட்டதல்ல. எல்லை காணுத ஆகாசத்தில் உள்ள நட்சத்திர மண்டலங்கள் யாவையும் தொகுத்தெடுத்து அதை அண்டமென்றும் அதற்கெல்லாம் அப்பாலிருக்கிற பகுதிகளை பகிரண்டம் என்றும் மனிதன் கற்பனை பண்ணிவைத்தான். மனிதனிடத்து மற்றோர் இயல்பு உண்டு. தனக்குப் பக்கத்தில் இருக்கும் எதற்கும் அவன் பெரிய மதிப்புக் கொடுப்பதில்லை. உள்ளூரிலிருக்கிற அறிவாளியைப் போற்றுவதைவிட அதிகமாக வெளியூர்களிலிருக்கும் அறிவாளிகளைப் போற்றுவது மனிதனுடைய இயல்பு. தனது சொந்த நாட்டிலுள்ள பெருமக்களைப் பாராட்டுவதைவிட அதிகமாக அந்நிய நாடுகளிலிருக்கும் பெருமக்களைப் பாராட்டுவதும் மனிதனுடைய இயல்பு. அருகிலிருக்கிற எதற்கும் மதிப்பு அதிகம் இல்லை; மிக எட்ட இருக்குமளவு பொருளுக்கும், மக்களுக்கும் அதிக மதிப்புத் தருவது மனிதனுடைய இயல்பு. கடவுள் எங்கேயோ எட்டாத வெகுதூரத்தில் இருக்கிருர் என்று எண்ணியே

அவருக்கு அவன் பெருமதிப்புத் தருகிறான். அளப்பரிய நெடுந் தூரத்திலிருக்கும் அவரைப் போற்ற ஆரம்பிக்கிறபொழுது அவர் எழுந்தருளியிருக்குமிடம் பகிரண்டமதனிலோ என இயம்பப்படுகிறது.

கடவுளை நாடித் தொலைவில் மனதைச் செலுத்திச் செலுத்தி மனிதன் ஓய்ந்து போனான். மிகத் தொலைவிலிருக் கும் தெய்வம் பக்கத்தில் ஏன் வரக்கூடாது என்று அவன் மேலும் விசாரித்துப் பார்த்தான். தெய்வம் வீற்றிருக்கிற இடமெல்லாம் மகிமை மிக வாய்க்கப்பெற்ற இடம் ஆக இருந்தாக வேண்டும் என்று மனிதன் மேலும் யூகித்தான். தனக்குக் கட்புலனாகின்ற இடங்களிலெல்லாம் பெருமை மிக வாய்க்கப்பெற்றது பருதி. அது உயிர்களுக்கு உயிராய் இருந்து வருகிறது. சூரியனிடத்திருந்து வருகிற வெப்ப மும் வெளிச்சமும் சேர்ந்து இவ்வுலக வாழ்வுக்கு ஆதரவு அளிக்கின்றன. சூரியனைப் புறக்கணித்துவிட்டு மண்ணுலக வாழ்வைக் கொண்டு செலுத்த முடியாது. அத்தகைய சூரிய மண்டலத்தில் கடவுள் எழுந்தருளியிருக்கிறார் என்று மனிதன் கருதலானான். எட்டாத பகிரண்டத்தில் இருப்ப வர் கட்புலனாகிற சூரிய மண்டலத்துக்கு வரவழைக்கப்பட் டார். சூரிய நாராயணனாக அவர் போற்றப்பட்டார். ஒப்பு உயர்வு அற்றவராக அவர் வான வெளியில் ஆட்சி புரிந்து வருகிறார் என்றும் கருதப்பட்டார். சூரியனைக் குறித்து எத்தனையெத்தனையோ விதங்களில் புகழ்ந்து பாராட்டிப் பண்டைக்காலத்துப் பெருமக்கள் வணங்கியிருக்கின்றனர். ஆதலால் தெய்வத்துக்கு இருப்பிடம் எது என்னும் கேள் விக்கு அலரி மண்டல நடுவிலோ என்னும் கேள்வி அடுத்த படியாக வந்தது. அலரி, பருதி என்பதெல்லாம் சூரியனுக் குரிய மற்ற பெயர்களாம்.

சூரியமண்டலத்தில் தெய்வத்தை வைத்து வணங்கு தலில் குறைபாடுகள் சிலவற்றை மனிதன் உணரலானன். சூரியன் மிகத் தொலேவில் இருக்கிருன். பூமியிலிருந்து கொண்டு அவனுக்கு நமஸ்காரம் செய்வதைத் தவிர வேறு ஒன்றையும் மனிதன் செய்ய முடியாது. நாம் போற்றுகிற தெய்வம் எட்ட இருப்பதைவிட கிட்ட இருந்தால் திருப்தி மிக உண்டாகிறது. ஆராதிக்கின்ற முறைகளேயும் அதிகப் படுத்தலாம். அண்மையில் வைத்து உறவாடுவதில் நெருங் கிய நட்பு வளர்கிறது. அதன் பொருட்டு சூரியனுடைய அம்சமாக இருக்கின்ற அக்கினியின் மூலம் தெய்வத்தை வணங்க மனிதன் ஆரம்பித்தான். இரவு வேளேயில் சூரியன் நம் காட்சியில் இல்லே. மேகங்கள் மூடிக்கொண்டிருக்கிற பொழுதும் சூரியனேக் காணமுடியாது. ஆனல் அக்கினி யையோ வேண்டிய வேளேயில் வேண்டிய இடத்தில் பிர சன்னமாகச் செய்யலாம். சூரியனுடைய சுடரும் வெப்பமும் சிறிய அளவில் அக்னியிடத்து இருக்கிறது. அதன் வடிவை மனிதனுடைய தேவைக்கேற்றபடி அமைத்து வைத்துக் கொள்ளலாம். எனவே அக்னியைத் தெய்வமாகக் கருதி வழுத்துவது விரிவடைந்து வந்தது. பலவிதமான யாகங் கள் அக்னி சேவையினின்று வடிவெடுக்கலாயின. கட்புல ஞகாது எட்ட இருக்கும் தெய்வங்களுக்குப் படைக்கிற நைவேத்தியங்களே யெல்லாம் அக்னியின் மூலமாகவே மனிதன் படைக்கலானன். அப்படிப் படைத்த நைவேத் தியத்தின் உருவத்தை மாற்றி சூட்சும வடிவத்தில் மற்ற தெய்வங்களுக்கு அக்னி தெய்வம் எடுத்து வழங்கியது என்றும் மனிதன் கருதலானன். அக்னியினுள்ளேயே தெய்வம் பிரத்தியட்சமாக எழுந்தருளியிருக்கிருர் என மனிதன் உணர்ந்தான். அதை முன்னிட்டு அனல்நடுவிலோ என்னும் கேள்வி பிறப்பதாயிற்று.

சூரிய வெப்பமும் அக்னியின் வெப்பமும் அதிகரித்துப் போய்விட்டால் மனிதனுல் அவ்வெப்பத்தைச் சகிக்க முடிவதில்லே. உயிர் வாழ்க்கைக்கு வெப்பம் அவசியம் எனினும் அது மிகைபட்டுப் போகுமிடத்துத் துன்பத்தை விளேவிக்கிறது. துன்பம் கலவாத இன்பத்தை விளேவிப்பவன் சந்திரன். இனிய வெளிச்சத்தை சந்திரன் வேண்டியவாறு வழங்குகிருன்; ஆனுல் கொடிய வெப்பத்தை அவன் கொடுப்பதில்லே. வெப்பத்தின் கொடுமையை அவன் பெரிதும் தணிக்கிருன். உயிர்வகைகளுக்கு சந்திரன் தன் போக்கில் அழிவற்ற நிலேயை நல்குகிருன். அழிவற்ற நிலேயே அமிர்தம் என்று இயம்பப்படுகிறது. மண்ணுலகிலுள்ள ஸ்தாவர ஜங்கமங்கள் அனைத்துக்கும் சந்திரன் அமிர்தத்தை வாரி வழங்கிக் கொண்டிருக்கிருன். தேகத்தைத் துடைத்தவர்கள் எல்லோரும் சந்திரலோகத்துக்குச் சென்று இன்புற்று வாழ்ந்திருக்கிருர்கள் எனவும் கருதப்பட்டது. எனவே இனிமைக்கும் மரணமிலாப் பெருநிலேக்கும் இருப்பிடமாகச் சந்திரன் கருதப்பட்டான். இத்தகைய மேன்மைகள் தெய்வத்தின் மகிமை. ஆதலால் சந்திரலோகமே தெய்வசான்னித்தியமாக உணரப்பட்டது. அந்த உணர்வை அடிப்படையாக வைத்துக் கொண்டு அமிர்தமதி நடுவிலோ என அடுத்த கேள்வி எழுந்தது. மதி என்னும் சொல் சந்திரனேக் குறிக்கிறது.

எட்ட இருப்பதனுல் வழிபாட்டுக்கு சூரியன் எப்படி வேண்டியவாறு வசதியை நல்கவில்லேயோ அப்படியே சந்திரனும் விண்ணுலகில் எட்ட இருப்பதனுல் வசதியை நல்கவில்லே. கைவசமுள்ள அக்னியிலே தெய்வத்தை மனிதன் வணங்க ஆரம்பித்தது போன்று தெய்வத்துக்கு வடிவம் கொடுத்து, அந்த வடிவத்தை ஒரு விக்ரகத்தில் சமைத்து,

அதில் தான் வழிபடு தெய்வத்தை எழுந்தருளப்பண்ணி, அதன் மூலம் மனிதன் தேவாராதனை பண்ண ஆரம்பித்தான். ஆலயங்கள் கட்டுவிப்பதும் அதைத் தொடர்ந்து வந்தது. மக்கள் ஒருவரை ஒருவர் பற்பல விதங்களில் உபசரிப்பது போன்று விக்ரகத்திலே எழுந்தருளப் பெற்றுள்ள தெய்வமும் உபசரிக்கப்பட்டார். எத்தனையோ உபசாரங்களுடன் தேவாலயங்களில் விக்ரகங்களிலே எழுந்தருளப்பண்ணியுள்ள தெய்வம் உபசரிக்கப்படுகிறார். அதன் பொருட்டு வேண்டியவாறு பொருள் செலவழிக்கப்படுகிறது. திரவியங்களெல்லாம் ஆலயங்களில் குவிக்கப்படுகின்றன. கலைகளெல்லாம் ஆலயங்களில் இடம் பெறுகின்றன. வாத்தியங்களெல்லாம் வழிபாட்டில் இடம் பெறுகின்றன. இத்தனைவிதமான உபசாரங்களுக்கிடையில் தெய்வபக்தியை வளர்ப்பதே வழிபாட்டின் நோக்கமாயிற்று. மக்களில் பலபேருக்கு இத்தகைய வழிபாடு உகந்ததாயிருந்து வருகிறது. அன்பையும் இது வேண்டியவாறு வளர்த்து வருகிறது. இங்ஙனம் கடவுள் வழிபாடு தேவாலயங்களில் நிகழ்வதின் மூலம் பக்தர்கள் பலபேர் பக்தி நெறியிலே விரைந்து மேல் நோக்கிச் செல்லலாயினர். அதை முன்னிட்டு அன்பர் அகம் உருகி மலர்கள் தூவி தெண்டனிடவரும் மூர்த்தி நிலையிலோ என்னும் கேள்வி எழுந்தது. எட்ட எங்கேயோ இருக்கிற தெய்வத்தைக் கற்பனை பண்ணி வீழ்ந்து வணங்குவதைவிட ஆலயத்திலே எழுந்தருளப் பண்ணியிருக்கும் தெய்வ சந்நிதியில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குதலில் மனிதன் பெருமகிழ்வெய்துகிறான். நல்ல மனதுக்குப் புறச்சின்னமாயிருப்பது மலர். அன்று அலர்ந்த மலர்போன்று மனிதனுடைய மனது யாண்டும் புதுமையும் எழிலும் நிறைந்ததாக இருக்கவேண்டும். தெய்வத்திடம் மலர்தூவி வணங்கு

வதில் பரமானந்தம் பக்தனுக்கு வருகிறது. ஆலயத்திலே தெய்வத்தைப் புகழ்ந்து போற்றுகிற பொழுதும் தெய்வ சாந்நித்தியத்தை பக்தன் அங்கு நன்கு உணர்கிறுன். பக்தர் களால் ஆராதிக்கப்பட்ட விக்கிரகங்களே சாந்நித்தியம் நிறைந்த மூர்த்திகளாக நிரந்தரமாக ஆயிருக்கின்றன வென் பது ஆன்ருேர்களுடைய அனுபவம். ஆக, தேவ ஆராதனைக் குக் கோயிலிலே எழுந்தருளப்பண்ணியிருக்கும் மூர்த்திக்கு நிகரானது வேறென்றுமில்லை.

கோயிலிலே தெய்வ சந்நிதியிலே வீழ்ந்து வணங்குகிற பக்தன் பிறகு நின்றபடி வட்டமிட்டுத் திக்கனைத்திலும் தெய்வத்துக்கு வந்தனை செலுத்துகிறுன். அதன் கருத்து ஆலயத்திலே எழுந்தருளிய தெய்வம் அந்த ஆலயத்தினுள் ளேயே அடைபட்டிருப்பவர் அல்லர். எல்லாத் திக்குகளிலும் அவரே பரவியிருக்கிறுர்; திக்குகளுக்கெல்லாம் அப்பாலும் அவரே இருக்கிறுர். திக்குகளை யெல்லாம் அவர் தன்னகத்து அடக்கி வைத்திருப்பதால் திகம்பரன், (திக்+அம்பரன்) எனவும் அவர் அழைக்கப்படுகிறுர். ஆகவே தெய்வம் எங்கே யிருக்கிறுர் என்னும் கேள்வி திக்குத்திகந்தத்திலோ என வடிவெடுக்கலாயிற்று. எட்டுத் திக்குகளிலுமா, அல்லது இந்த எட்டுத்திக்குகளின் முடிவிலா கடவுள் இருக்கிறுர், என்பது இக்கேள்வியின் கருத்து ஆகும்.

எண்ணிறந்த வடிவங்களை எடுத்துள்ள தெய்வம் வடி வங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவராகவும் இருக்கிறுர். பிரபஞ்சம் முழுதும் ஐம்பூதங்களால் ஆனது. ஐம்பூதங் களுள் வடிவமே சிறிதேனும் இல்லாதது ஆகாசம். ஆகா சத்தை வெளி என்கிருேம். வெளியானது எல்லை மருவாது எங்கும் வியாபகமாய் இருக்கிறது. வெளியின் இயல்பைக் கிரகிக்கிறவன் பரம்பொருளின் இயல்பையும் ஓரளவு கிரகிக்

கிருன். ஆகாசம் போன்றதே பரம்பொருள். ஆனல் பிர பஞ்சத்திலுள்ள ஆகாசம் ஜட ஆகாசம்; தெய்வமோ சித் ஆகாசம். ஆதலால் தெய்வத்துக்கு சித் அம்பரம் என்னும் பெயர் வந்தது. திக் அம்பரனுயிருப்பவர் சித் அம்பரனுக வும் இருக்கிருர். ஆகாசம் அல்லது வானவெளியைச் சரி யாக ஓர்வது தெய்வத்தை ஓர்வதற்கு நிகர். எனவே கட வுள் எங்கே யிருக்கிருர் என்னும் கேள்வி வெளியிலோ என்னும் கேள்வியாக வடிவெடுத்திருக்கிறது.

வித்து இன்றி மரம் இல்லே. மரத்துக்குக் காரணமா யிருப்பது வித்து. இனி வித்துக்கும் மரத்துக்கும் இடை யில் வித்தியாசம் ஒன்று உண்டு. அடங்கி ஒடுங்கித் தோன் ருத நிலேயில் இருப்பது வித்து. விரிந்து வடிவெடுத்துத் தோற்றத்துக்கு வந்திருப்பது மரம். அதே முறையில் தோற்றத்துக்கு வந்துள்ள பிரபஞ்சத்துக்கு வித்து எது என்னும் கேள்வி பிறந்தது. நாதம் அல்லது ஓசைதான் வித்து என்பதும், அந்த ஓசையினின்றே உலகனைத்தும் உருவெடுக்கலாயிற்று என்பதும் ஆன்ருேர்கள் கண்டுள்ள மெய்ப்பொருள் தரிசனமாம். மரத்தை உண்டுபண்ண விரும்புகிறவர்களுக்கு அதற்குக் காரணமாயிருக்கிற விதை கிடைத்தால் போதுமானது. அந்த விதையைச் சரியாகப் பயன்படுத்தி மரத்தை உண்டுபண்ணிக்கொள்ளலாம். தெய் வத்தை அறிந்துகொள்ளவிரும்புகிறவர்கள் அவர் எத்தகைய ஓசை வடிவினரா யிருக்கிருர் என்பதை அறிந்துகொண் டால் தெய்வத்தை அறிவது பிறகு எளிதாகிறது. உலகி லுள்ள பொருள்கள் அனைத்தும் நாதவடிவம். இந்த நாதங் கள் அனைத்துக்கும் மூலகாரணமாயிருக்கும் நாதம் கடவு ளின் சொரூபம். எனவே அவர் நாதப்பிரம்மம் என அழைக் கப்படுகிருர். நாதவிந்து என்று அவரை அழைக்கும்

பொழுது நாதம் என்னும் விந்து அல்லது வித்தாக அவர் இருக்கிறார் என்பது அதன் கருத்து. அந்த நாதமே இத் தனையுமாயிருக்கிறது என்பது பொருள். தெய்வத்தை அடைய விரும்புகிறவர்களுக்கு நாதம் பெருந்துணையாகிறது. எந்த நாதத்தை மனிதன் ஓயாது உச்சரித்தால் மூலப் பொருளை எட்டிவிடுகிறான் என்னும் ஆராய்ச்சி பிறந்தது. அதன் விளைவாய்த் தீர்க்கதரிசிகள் மூலப்பொருளைக் கண் டறியலாயினர். ஓம் என்னும் பிரணவமே நாதவிந்துவாக இருக்கிறது. அதன் பல்வேறு அம்சங்களாக சிவமந்த்ரம், நாராயணமந்த்ரம் முதலியன வடிவெடுத்திருக்கின்றன. இறைவனுடைய நாமத்தை பக்தி விசுவாசத்துடன் ஓயாது ஓதி வருகின்றவர்கள் நாளடைவில் தாங்களே அந்த நாத சொருபமாக மாறுகின்றனர். ஞான ஒளியும் அந்த ஒலியி னின்று உருவெடுக்கிறது. எனவே மனிதன் தன்னைத் தெய்வ சொருபமாக மாற்றியமைப்பதற்கு இறைவனுடைய மந்த்ரத்தையே இடையறாது உச்சரிப்பது நல்ல ஆத்மசாதன மாகிறது. இந்த சாதனத்துக்குத் தகுதிவாய்ந்தவன் யார் என்னும் கேள்வி பிறப்பதற்கு இடமில்லை. தாயை சேயா னது வேண்டியவாறு கூவி அழைப்பது போன்று தெய் வத்தை அவருடைய நாம உச்சாரணையின் மூலமாகப் பரிந்து கூவி அழைக்கின்ற சாதகனுக்கு தெய்வம் அனுக்கிரகம் செய்து தமது திவ்யக் காட்சியையும் கொடுத்தருளுகிறார். எனவே தெய்வம் எங்கேயிருக்கிறார் என்கிற கேள்வியானது திகழ் விந்துநாதநிலை தன்னிலோ என்னும் வினவாக வடி வெடுத்திருக்கிறது.

நாதத்திலிருந்து வேதம் வந்தது. வேதம் என்னும் சொல்லுக்கு வித்தை அல்லது அறிந்து கொள்ளுதல் என்பது பொருள். கருத்துக்களையெல்லாம் சொல்லின் மூலம் வெளி

யிடுகிறோம்; சொல்லின் மூலம் பிறரிடமிருந்து வாங்கிக் கொள்கிறோம். சொற்கள் எல்லாம் சப்தசொருபம். வேதமே சப்தசொருபம். இயற்கையைப்பற்றிய கருத்துக் களை யெல்லாம் சப்தசொருபமாக இருக்கிற வேதம் விளக்கு கிறது. இயற்கையைப்பற்றிய விளக்கம் முழுதுக்கும் வேதம் என்பது பொதுப் பெயர். அது எந்த மொழியில் வேண்டு மானாலும் அமைந்திருக்கலாம். இயற்கையை உள்ளவாறு விளக்குவது அதன் செயல். எண்ணிறந்த கலைஞானங் களெல்லாம் வேதத்தின் அம்சங்களாம். மனிதன் இயற் கையை எவ்வளவுக்கெவ்வளவு அறிந்திருக்கிறானோ, அறிந் திருப்பதை எவ்வளவுக் கெவ்வளவு தெளிவாகப் பிறர்க் கெடுத்து விளக்குகிறானோ அவ்வளவுக் கவ்வளவு அவன் வேதவித் என அழைக்கப்படுகிறான். வேதத்தை அறிந்த வன் என்பது அதன் பொருள். கடவுளே வேதவித் என அழைக்கப்படுகிறார். மனிதனும் ஓரளவுக்கு வேதவித்தாக இருக்கிறான். இனி இந்த வேதத்தின் அந்தம் அல்லது முடிவு வேதாந்தம் எனப்படுகிறது. இயற்கையை விளக்கு வது வேதம் என்றால், இயற்கையின் முடிவாகவும் இயற் கைக்கப்பாலும் இருக்கிற பரம்பொருளை விளக்குவது எதோ அது வேதாந்தம்; வேத+அந்தம். எனவே, வேதாந்தி யாவதும் பரம்பொருளை அறிவதும் ஒன்றேயாம். இந்த வேதாந்தத்தில் ஒரு சிறப்பு உண்டு. பரம்பொருளை அடை தற்கு என்னென்ன மார்க்கங்களிருக்கின்றனவோ அந்த மார்க்கங்களை யெல்லாம் தெளிவுற வேதாந்தம் எடுத்து விளக்குகிறது. அத்தனைவித மார்க்கங்களில் மனிதன் தனக் குகந்த ஏதேனும் ஒரு மார்க்கத்தை எடுத்துக்கொண்டால் போதுமானது. தனக்குகந்த மார்க்கம் இன்னதென்று மனிதன் தனக்குத்தானே தீர்மானிக்கும் செயல் சித்தாந்த

எனப் பொருள்படுகிறது. தனக்குத்தானே அவன் சித்தாங் தப்படுத்திக்கொண்டது; அல்லது தீர்மானிக்கப்பட்டது; அல்லது முடிந்த முடிவாக எடுத்துக்கொள்ளப்பட்டது, என இச்சொல் பொருள்படுகிறது. வேதாந்தம் கற்கிற ஒவ் வொரு நல்லறிவாளனும் ஏதேனும் ஒருவித சித்தாந்தி யாகின்ருன். பொதுவாக அத்தகைய சித்தாந்திகளை சைவ சித்தாந்திகள் என்றும், வைஷ்ணவ சித்தாந்திகள் என்றும், சாக்த சித்தாந்திகள் என்றும்—இப்படியெல்லாம் பெயரிட்டு அழைக்கின்ருேம். கடவுள் தத்துவத்தை அறிந்துகொள்ளு தற்கு மேலான சாஸ்திரங்கள் தக்கபடி துணைபுரிவதால் கடவுள் எங்கே இருக்கிருர் என்னும் கேள்வியானது வேதாந்த சித்தாந்த நிலை தன்னிலோ என வடிவெடுக் கிறது.

பிரபஞ்சம் முழுதும் ஐம்பூதங்களால் ஆனது. இவ் ஐந் தினுள் ஆகாசம் செயலற்றிருக்கிறது. ஏனைய நான்கு பூதங்களும் செயலில் ஈடுபட்டிருப்பவைகளாகவும் கட்புலனு கக் கூடியவைகளாகவும் அமைந்திருக்கின்றன. ஆகவே எங்குத் திரும்பி எப்பொருளைப் பார்த்தாலும் அதெல்லாம் பூதங்களின் விகாரமேயாம். சர்க்கரையைக்கொண்டு தின் பண்டங்கள் பலவற்றை உண்டு பண்ணலாம். ஆனல் அவை யனைத்திடத்தும் தித்திப்பு என்னும் சுவை பல வடிவெடுத் திருக்கிறது. அதே விதத்தில் காணப்படுபொருள்களெல் லாம் மூலப்பிரகிருதியின் தோற்றங்களாம். மூலப்பிரகிரு தியோ பரம்பொருளுக்கு அபின்னமாய் இருக்கிறது. பரம் பொருள்தான் பிரபஞ்சப் பொருள்களாக வந்துள்ளார். ஐம்பூதங்களில் அவர் ஊடுருவியிருப்பதால் அவைகள் வடிவ மாக லிங்கங்கள் அமைந்திருக்கின்றன. காஞ்சியில் பிருதிவி லிங்கமும், திருவானைக்கோவிலில் அப்புலிங்கமும், திரு

வண்ணமலையில் அக்னி லிங்கமும், காளஹஸ்தியில் வாயு லிங்கமும், சிதம்பரத்தில் ஆகாசலிங்கமும் அமைந்திருப்பது ஐம்பூதங்களாய் இறைவனே இலங்குகின்ருர் என்பதை விளக்குதற் பொருட்டாம். ஆக கடவுள் எங்கே யிருக்கிருர் என்னும் கேள்வி கண்ட பல பொருளிலோ என வடிவெடுக் கிறது. பொருள்கள் யாவும் பூதங்களின் விகாரங்களே யாம்.

காட்சிக்கு வந்துள்ள பொருளே சூட்சும நிலேக்குப் போகும் பொழுது காட்சிக்கு எட்டாததாய் மறைகிறது. ஆகாசம் சூட்சுமமாயிருப்பதால் காட்சிக்கு எட்டுவதில்லே. காற்ருே புகைபோன்ற நிறமெடுக்கிறபொழுது கட்புலனு கிறது. மோதும்பொழுது மேனி அதை உணர்கிறது. சுவாசிக்கும்பொழுது காற்றின் இருப்பும் அதனிடத்துள்ள குணதோஷங்களும் அறியப்படுகின்றன. ஆயினும் அது சூட்சுமமாயிருப்பதால் இருக்குமிடம் தெரியாதவாறு அமைந்திருக்கிறது. நீர் கொதித்து ஆவியாகிற பொழுது நீராவி வெள்ளே நிறமாயிருக்கிறது. பிறகு நிறத்தை யிழந்து இருக்குமிடம் தெரியாது அது மறைந்து நிற் கிறது. ஸதூலமாயுள்ள நிலம் அக்னியோடு சேர்ந்து குழம்பாகி, பிறகு ஆவியாக மாறவல்லது. இப்படி சூட்சும நிலேக்குப் போகும்பொழுது, தென்படுகிற பொருள் களே தென்படாதவைகள் ஆய்விடுகின்றன. ஐம்பூதங்களும் அவைகளின் காரண நிலேக்குப் போகும்பொழுது காட்சியி வில்லாது மறைந்து போய்விடுகின்றன. ஆயினும் அவைகள் சூனியமாய்ப் போவதில்லே. உண்மையில் சூனியம் என்பது ஒன்றுமில்லே. தோன்ருத நிலேயை சூனியம் என்கின்ருேம். சூனியமென்று சொல்லுவது வெறும் உபசாரச் சொல்லாம். இப்பொழுது கடவுள் எங்கே யிருக்கிருர் என்னும் கேள்வி

யானது காணாத நிலையெனக் கண்ட சூனியமதனிலோ என வடிவெடுக்கிறது.

கடவுளை அறிதற்குக் காலம் பெருந்துணையாகிறது. காலத்தையே கடவுள் எனலாம். ஆனால் அந்தக் காலத்தை யும் அவர் எடுத்து விழுங்குவதால் அவர் காலகாலன் எனப் படுகிறார். காலத்துக்கே அவர் காலனாயிருக்கிறார் என்பது அதன் பொருள். இனி, காலம் என்றால் என்ன என்று ஆராய்ந்து பார்ப்போம். இரண்டு நிகழ்ச்சிகளுக்கு இடை யில் உள்ள இடையீடு காலமெனப்படுகிறது. விரலால் நொடிக்கிறோம்; மறுபடியும் நொடிக்கிறோம். இந்த இரு நிகழ்ச்சிகளுக் கிடையிலுள்ளது காலம். கண்ணை இமைக் கிறோம்; மறுபடியும் இமைக்கிறோம். அத்தகைய இரண்டு நிகழ்ச்சிகளுக்கிடையிலுள்ளது காலம். சூரியோதயம் ஒரு நிகழ்ச்சி. சூரிய அஸ்தமனம் மற்றொரு நிகழ்ச்சி. இவ் விரண்டுக்கும் இடையிலிருப்பது காலம். இம்முறையிலே கால தத்துவமானது அளக்கப்படுகிறது. இயற்கை முழு திலும் கால தத்துவம் ஊடுருவிப் பாய்ந்திருக்கிறது. கிரகங் கள் சுழல்வது, பருவங்கள் மாறியமைவது ஆகியவைகள் காலத்தின் கூறுபாடுகளாம். காலத்தில் ஒழுங்குப்பாடு நிறைந்திருக்கிறது என்பதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்ளலாம். நீலகிரி மலையில் நீலப்பூ பூக்கும் செடி யொன்று இருக்கிறது. அது பன்னிரண்டு வருஷத்துக் கொருதடவை தோன்றிப் பூத்து மறைந்து போய்விடுகிறது. மறைந்துபோன பிறகு அதன் அறிகுறியை எவ்விதத்திலும் காணமுடியாது. காணாத சூனிய நிலையில் அது இருக்கிறது எனலாம். ஆனால் பன்னிரண்டு ஆண்டுகள் பூர்த்தியானதும் திரும்பவும் அவைகள் ஏராளமாக முளைத்து வந்து விடுகின் றன. காலம் முறைபிறழாது சுழன்று வருவதையும் காலகதி

யில் இயற்கை அடங்கியிருப்பதையும் அந்நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது. அண்டங்களுக்கு சிருஷ்டியும் பிரளயமும் வருவது காலத்தின் ஒழுங்குப்பாட்டை முன்னிட்டேயாம். இக்காலமானது சென்றது, இருப்பது, வருவது என மூன்று நிலைகளில் இருந்து நமக்கு விளங்கி வருகிறது. இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என அம்மூன்றை யும் அழைக்கிறோம். இறந்தகாலம் மறைந்து பட்டுப்போகி றது. அதன் ஞாபகம் ஏதோ சிறிது எஞ்சியிருந்து பிறகு அதுவும் மறைந்துபட்டுப் போகிறது. எதிர்காலம் ஒரு பொழுதும் நமக்கு விளங்குவதில்லை. ஆக, காலமானது ஏதோ கொஞ்சம் விளங்கியும் விளங்காமலும் இருந்து வரு கிறது. இந்தக் காலத்தைச் சரியாக ஆராய்ந்து அறிந்து கொள்ளுதலே கடவுளை அறிந்து கொள்ளுதற்கு நிகராம். ஆகவே கடவுள் எப்படியிருக்கிறார் என்னும் கேள்வியானது காலமொரு மூன்றிலோ என வடிவெடுக்கிறது.

இன்றைக்கு மரமாயிருப்பது பல ஆண்டுகளுக்கு முன்பு விதையாயிருந்தது. எனவே மரத்துக்குப் பிறவிநிலை வித்து. அதே விதத்தில் அண்டங்களனைத்தும் எதனிடத்திருந்து வந்துள்ளன என்னும் கேள்வி பிறக்கிறது. இருக்கிற பொருள் இல்லாத சூனியத்திலிருந்து வரமுடியாது. தோன்றி யுள்ளது தோன்றாநிலையினின்றே வருகிறது எனலாம். இத் தோன்றா நிலையைப் பிறவி நிலை எனலாம். இது ஒரு போக்கில் நம்மிடத்திலேயே அமைந்திருக்கிறது. விழிப்பு அல்லது ஜாக்கிரதா நிலையில் நாம் இப்பொழுது இருக் கிறோம். பிறகு சுஷுப்தி அல்லது உறக்க நிலைக்குப் போகி றோம். அதில் ஒரு பகுதியாக கனவு அல்லது சுஷுப்தி நிலை இருக்கிறது. ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளும் மாறி மாறி நம்மிடத்துப் பிறந்து

கொண்டே யிருக்கின்றன. ஜாக்ரதா அவஸ்தை எதில் பிறந்தது? அயர்ந்த உறக்கம் எதில் பிறந்தது? கனவு எதில் பிறந்தது? இப்படி இந்த மூன்று அவஸ்தைக்கும் பிறவிநிலை எது? மூன்றுக்கும் மூன்று தனித்தனிப் பிறவிநிலை இருக்கின்றனவா? அல்லது பொதுவாக ஒரே பிறவிநிலை இருக்கின்றதா, என்பது பெரியதோர் ஆராய்ச்சியாகும். இந்த ஆராய்ச்சியைச் சரியாகக் கொண்டுசெலுத்தினல் கடவுளின் சந்நிதியையே நாம் எட்டி விடுவோம். எனவே கடவுள் எங்கேயிருக்கிருர் என்னும் கேள்வியானது பிறவி நிலை தன்னிலோ என வடிவெடுக்கிறது.

வாரத்தில் ஒருநாள் சந்தைக்கடை கூடுவதை நாம் காண்கிறோம். எங்கெங்கேயோவிருந்து யார் யாரோ வந்து சேருகின்றனர். பலப்பல பொருள்களை அவர்கள் கொண்டு வருகின்றனர். ஒருவர் கொண்டுவந்த பொருள் இன்னெருவர் கைக்கு மாறுகிறது. சந்தை கூடியிருக்கும்பொழுது பேச்சுவார்த்தைகளுக்கு ஒரு முடிவில்லை. உலக வியவகாரங்கள் அத்தனையும் அங்கு நிகழுகின்றன. அந்த வியவகாரங்களில் நலமும் பொலமும் கலந்தே யிருக்கின்றன. சந்தையில் எழுகின்ற ஓலம் நெடுந் தூரத்துக்குக் கேட்கிறது. அஸ்தமன வேளையில் சந்தை கலைந்துவிடுகிறது. எல்லோரும் வெவ்வேறு இடங்களுக்குப் பிரிந்து ஓடிவிடுகின்றனர். எங்கிருந்து வந்தார்கள், பிறகு எங்கே போய் மறைந்தார்கள், என்பதெல்லாம் விளங்குவதில்லை. அந்த சந்தைக்கு நிகரானது நமது உடல் வாழ்க்கை. ஐம்பொறிகளும்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களும் நம்மிடத்து அமைந்திருக்கின்றன. இவைகள் பண்ணுகிற வியவகாரங்களுக்கு முடிவே கிடையாது. சுட்டுவிரல்களைக் காதில் வைத்து இறுக அடைத்துக் கொண்டால் சந்தையில்

கேட்கிற ஓலம் முழுதையும் நமது உடலினுள்ளேயே கேட்க லாம். எனவே நமது உடல் வாழ்க்கையானது சந்தைக் கடை வியவகாரத்துக்கு எந்த விதத்திலும் குறைந்ததல்ல. இரவில் தூங்கும்பொழுது சுஷுப்தி அவஸ்தையில் சிறிது நேரத்துக்கு வியவகாரம் ஒன்றுமில்லாது ஓய்ந்திருக்கிறது. பிறகு கனவிலும் வியவகாரம் வந்துவிடுகிறது. இப்படி முடிவில்லாத ஒரு சந்தைக்கடை வியாபாரமாக நமது வாழ்வு அமைந்திருக்கிறது.

மக்களுள் மேலோர் யார் என்னும் கேள்வி யெழுகிறது. எவ்வளவுக்கெவ்வளவு தங்களுடைய மனதை மக்கள் ஒடுக் கிப் பழகுகின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் மேலோர் ஆகின்றனர். மனம் என்பது அந்தக்கரணங்கள் அனைத்துக்கும் அமைந்துள்ள பொதுப் பெயராக இங்கு வைத்துக்கொள்ளலாம். மனம் அடங்குகிற அளவு ஐம் பொறிகளும் தாமாக அடங்குகின்றன. மனம் அடங்குகின்ற அளவு வாழ்க்கையிலுள்ள் வியவகாரங்களும் தாமாகக் குறைகின்றன. மனம் நல்லதாகத் திருந்தியமைகின்ற பொழுது ஐம்பொறிகளும் நல்லமுறையில் பணியாற்றுகின் றன. வியவகாரங்களும் பாராட்டுதற்குரிய நல்ல வியவகா ரங்களாகின்றன. மனதின் மாறுதலுக்கு ஏற்ப உலகக் காட்சியும் மாறியமைகிறது. கெட்ட மனதுக்கு உலகெலாம் கேடு நிறைந்தது. நல்ல மனதுக்கு உலகெலாம் நலம் நிறைந்தது. மனமற்ற நிலையில் உலகமும் மறைந்துபட் டுப்போகிறது. இந்த அதிசயம் சான்றோர்க்கே விளங்கு கிறது. மனதை அறவே அடக்கிவிட்டால் எஞ்சியிருப்பது என்ன என்பதைக் காண அவர்கள் பெருமுயற்சி எடுத்துக் கொண்டனர். முயற்சிகளிலெல்லாம் மேலான தெய்வீக முயற்சியாக அது இருப்பதால் அம்முயற்சியாளர்கள்

தொண்டர்கள் என அழைக்கப்படுகின்றனர். மனது ஒடுங்கிய இடத்தில் சாட்சியாக பெரிய பொருள் ஒன்று போக்கு வரவற்றதாய் இருப்பதை அப்பெரியோர்கள் சுவானுபூதியில் கண்டறிந்தனர்.

மெய்ப்பொருளைத் தேடியறிதல் என்னும் முயற்சி எங்கெங்கேயோ துவக்கி, என்னென்னவோ வடிவெடுத்து, எப்படி யெப்படியோ போனது. மனிதன் அதைத் தொலைவில் தேடினான்; தொலைவுக்கு அப்பாலுள்ள பெருந் தொலைவில் தேடினான்; கட்புலனாகின்ற கோளங்களில் தேடினான்; தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களிலெல்லாம் தேடினான்; தான் பெற்று வருகின்ற பல அனுபவங்களுள் தேடினான்; பிறகு அவன் தனக்குள்ளேயே தேடிப்பார்த்தான். தான் தேடிய பொருள் யாண்டும் தன்னிடத்திலேயே திகழ்ந்திருக்கிறது என்றும், தனது கருவி கரணங்கள்தான் அதை மறைத்து வைத்திருந்தனவென்றும் இறுதியாக அறிந்துகொள்கிறான். தான் தேடியபொருள் தன்னிடத்திலேயே இருக்கிறது என்பதை சுவானுபூதியில் அறிந்தான பிறகு அதே பெரிய பொருள்தான் பாகிய பிரபஞ்சத்திலும் இத்தனையுமாகத் துலங்குகிறது; இவை யாவுக்கும் அப்பாற்பட்டதாகவும் இருக்கிறது; எண்ணிறந்த தோற்றங்கள் எடுத்திருப்பதெல்லாம் அந்த ஒருபொருளேயன்றி அதற்கு அன்னியமாக ஒன்றுமில்லை என்னும் முடிவுக்கு மனிதன் வருகிறான். எனவே கடவுள் எங்கேயிருக்கிறார் என்னும் கேள்வியும் அதற்கு முடிவாகக் கிடைக்கின்ற விடையும் கருவிகரணங்கள் ஓய்ந்த தொண்டர்களிடத்திலோ நீ வீற்றிருப்பது என வடிவெடுத்திருக்கிறது.

கருவி கரணங்கள் ஓயாது சலித்துக் கொண்டிருக்கின்றன. ஆதலால் அவைகளுக்கு ஓய்வில்லை. அவைகள் சலித்துக் கொண்டிருப்பதற்குக் காரணம் அவைகளில் படிந்

துள்ள மாசு. பலதரப்பட்ட ஆசைகளே மாசு என மொழி யப்படுகின்றன. ஆசைகள் ஓயுமளவு கருவி கரணங்களும் ஓய ஆரம்பித்துவிடுகின்றன. தடாகத்தில் உள்ள நீர் சேறு படிந்திருக்கிறது. அதன்மீது காற்றடிக்கிறது. ஆதலால் அலைகள் உண்டாகின்றன. அப்படி அலைகள் வீசிக்கொண் டிருக்கும்பொழுது தடாகத்தின் அடிமட்டம் கட்புலனுகாது. காற்று வீசுவதற்கு நிகர் ஆசைகள். சேறு படிந்திருப் பதற்கு நிகர் பொருந்தாத ஆசைகளினின்று தோன்றியுள்ள பொருந்தாத உணர்வுகள். தடாகத்திலுள்ள நீர் தெளிந்து சேறு அற்றதாக மாறவேண்டும்; அதன் மீது காற்று அடியா திருக்கவேண்டும். அப்பொழுது தடாகத்தின் அடிமட்டம் காட்சிக்கு எட்டுகிறது. கருவிகரணங்களிலுள்ள அசைவுக ளெல்லாம் அற்றுப் போய்விடவேண்டும்; காமக்குரோ தாதிகளாகிய மலங்கள் அழிந்துபட்டுப்போகவேண்டும். அந்தநிலையிலுள்ள அந்தக்கரணம் நிர்மல சொரூபம்; அசல சொரூபம். அதனுள் யாண்டும் வீற்றிருந்து வருகிற இறை வனுடைய சாந்நித்தியம் தெளிவுறக் காட்சிக்கு வருகிறது. மனதைத் தூயதாக்குகின்றவர்கள் தெய்வத்தைத் தங்கள் உள்ளத்தின் உள்ளேயே கண்டுகொள்கின்றனர்.

கடவுள் உள்ளத்தின் உள்ளே யிருக்கிருர் என்று எவ் வளவு எடுத்துச் சொன்னலும் பக்குவமடையாதவர்கள் அதைக் கேட்டுக்கொள்ளமாட்டார்கள். புறத்தில்தான் அவர் கள் முதலில் தேடியலைவர். பிறகு படிப்படியாக அவர்களு டைய நாட்டம் தங்களுக்குள்ளேயே அந்தர்முகமாகப் போகிறது. அத்துடன் சேர்த்து இறைவனுடைய அருளை யும் பரிந்து வேண்டிக்கொள்ளவேண்டும். அப்பொழுது தெய் வக் காட்சி உள்ளத்தின் உள்ளேயே தென்படுகிறது. இக் கருத்தை தமியனேற்கு உளவு புகலாய் எனத் தாயுமான வர் தெய்வத்திடம் தெரிவித்துக் கொள்கிருர். இக்கருத்துக் கள் யாவும் அடங்கிய பாடல் இது.

## 11. சுகவாரி

எந்நாள் கருணைக் குரித்தாகு நாளெனவும்
என்னிதயம் எண்ணிவாட்டுதே
ஏதென்று சொல்லுவேன் முன்னெடுபின் மலை
இற்றைவரை யாதுபெற்றேன் [வறவும்
பந்தமா னதிலிட்ட மெழுகாகி உள்ளம்
பதைத்துப் பதைத்துருகவோ
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
பலகாலு மூர்ச்சிப்பதோ
சிந்தையா னதுமறிவை என்னறிவி லறிவான
தெய்வம்நீ யன்றியுளதோ
தேகநிலை யல்லவே உடைகப்பல் கப்பலாய்த்
திரையாழி யூடுசெலுமோ
சொந்தமா யாண்டநீ அறியார்கள் போலவே
துன்பத்தி லாழ்த்தல்முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

காலம் தன்னளவில் முறை பிறழாது தொடர்ந்து நிகழ்ந்து வருகிறது. ஒருவிதத்தில் கடவுளே கால சொருப மாக இருக்கிறார் எனப் பகரப்படுகிறது. பிரபஞ்சத்தைத் தோற்றத்துக்குக் கொண்டு வருவதும், ஒடுங்கிய நிலையில் வைத்திருப்பதும் காலத்தின் செயலாம். பகலையும் இரவை யும் காலமானது சரியாகப் பங்கிட்டு வைத்திருக்கிறது. அதில் சற்று ஏற்றமும் தாழ்வும் நிகழ்வது பூமிக்கும் சூரிய னுக்கும் இடையில் உள்ள தொடர்வின் மாறுபாட்டை முன் விட்டோம். ஆயினும் பொதுவாகப் பகல் பன்னிரண்டு

மணிநேரம் எனவும் இரவு பன்னிரண்டு மணிநேரம் எனவும் சரியாகப் பிரித்துவைத்திருப்பது காலத்தின் ஒழுங்குப் பாட்டை முன்னிட்டேயாம். இரவு பகல் சரியாகப் பிரித்து வைக்கப்பட்டிருப்பது போன்று சிருஷ்டியும் பிரளயமும் சரி சமனாகவே பிரித்து வைக்கப்பட்டிருப்பது காலத்தின் ஒழுங் குப்பாட்டை விளக்கிக் காட்டுகிறது. இப்படிக் காலமானது தன்னளவில் நீடிக்காமலும் குறைவு படாமலும் இருந்து வருகிறது எனினும், மக்களது மனநிலைக்கு ஏற்பக் குறுகிய காலம் நெடுங்காலமாகத் தோன்றுவதும், நீண்டகாலம் குறு கிய காலமாகத் தோன்றுவதும் அவரவர் மனநிலையை யொட்டியேயாம். பொதுவாகத் துன்பம் துய்த்துக் கொண் டிருப்பவர்களுக்குக் குறுகிய காலம் நீண்டகாலமாகத்தோன் றும். நோயாளி ஒருவனுக்கு இரவெல்லாம் உறக்கம் பிடிப் பதில்லை. உடலின் பிணி பகலில் விட இரவில் அதிகரிக் கிறது. அத்தகைய நோயாளிக்கு ஓர் இரவைக் கழிப்பது ஒரு யுகத்தைக் கழிப்பதற்கு நிகராகத் தென்படுகிறது. காலம் புரண்டோடமாட்டேன் என்று அத்தகைய நோயா ளிக்கு ஒரு பெரிய தலைச்சுமைபோன்று அது நின்றுகொண் டிருக்கிறது. துன்புறுவோர் அனைவர்க்கும் இது பொதுவா யமைந்துள்ள நியதியாம். இனி, இன்புற்றிருப்போரது அனுபவம் இதற்கு நேர் மாறானது. இன்பம் துய்ப்போ ருக்கு நீண்டகாலமானது மிகக் குறுகியகாலம் போன்று ஆய்விடுகிறது. பல வருஷங்கள் தொடர்ந்து இன்புற்று இருக்கின்றவர்களுக்கு அவைகள் பல மாதங்கள் போன்றோ அல்லது நாட்கள் போன்றோ குறுகிவிடுகின்றன. இங்ஙனம் காலத்தை அளக்கின்ற மனது தனது நிலைக்கு ஏற்பக் காலத்தை நீட்டவோ குறுக்கவோ செய்கிறது. மனதுக்கும் காலத்துக்கும் இடையிலுள்ள தொடர்வு இத்தகையதாம்.

மனிதன் படுகிற துயரங்களிலெல்லாம் கடவுளுடைய அருளுக்குப் பாத்திரமாகவேண்டும் என்று அருள் தாகமாக வடிவெடுக்கிற துயரமே மிகக்கொடியது எனலாம். கடவுளுடைய அருள் எப்பொழுது கிட்டுமோ என்னும் ஏக்கம் ஆத்ம சாதகனுக்கு வருகிறது. அப்படி அவன் ஏக்கம் பிடித்திருக்கிறபொழுது ஒரு கணப்பொழுது கல்பகாலம் போன்று அவனுக்குத் தோன்றும். தான் படுகிற துன்பத்துக்கு முடிவே இல்லையென அவன் உணருகிறுன். அவன் படும் வேதனை பரிதாபத்துக்குரியதாகிறது. அதற்கொரு முடிவே இல்லையென அவன் உணருகிறுன். ஈசனது சிருஷ்டியில் தனக்குற்றதிலும் கொடிய தெளர்ப்பாக்கியம் வேறு எவ்வுயிருக்கும் இல்லையென அவன் உணருகிறுன். இத்தகைய உணர்வு ஆத்ம சாதகன் ஒவ்வொருவனுக்கும் வருகிறது. பல யுகங்களாகத் தான் படாத துன்பங்களுக்கு ஆளாயிருப்பதாக அவன் உணருகிறுன். அப்படி அவன் உள்ளத்தில் எழுகின்ற உணர்வை எந்தநாள் கருணைக்குரித்தாகுநாள் எனவும் என் இதயம் எனை வாட்டுதே என்று தாயுமானவர் படம்பிடித்துக் காட்டுகிறுர்.

உலக வாழ்க்கையில் சீரும் சிறப்பும் அமையவில்லையே என்று துயருறுவோர் பெரும்பான்மையோர். கடவுளுடைய அருளுக்குப் பாத்திரமாகவில்லையே என்று துயருறுவோர் மிகச் சிலர். ஆனல் இருதரத்தாருக்கும் துயருறுதல் பொதுவாயிருக்கிறது. இனி அருள் பித்தம் பிடித்துத் துயருறுவோர் அடைகிற நிலை வேறு; உலக போகப் பித்துப் பிடித்துத் துயருறுவோர் நிலை வேறு. முந்தையது மனிதனைப் படிப்படியாக மேல் நிலைக்கு எடுத்துச் செல்லுகிறது; பிந்தையது மனிதனைப் படிப்படியாக அஞ்ஞான இருளில் ஆழ்த்துகிறது. இப்படி இருவிதத் துயரங்

களுக்கு இரண்டுவிதப் பயன்கள் வாய்க்கின்றன என்பது துயரத்தில் மூழ்கிக் கிடக்கின்றபொழுது புலனுவதில்லை. அவரவர் படுகிற துயரத்துக்குத் தக்க காரணம் இருப்பதாக அவரவர் மனக்கோட்டை கட்டிக்கொள்கின்றனர். அவரவர் கொள்கிற யுக்திக்கு ஒத்ததாகவும் துயருறுதல் தென்படு கிறது. துயருறுவோர் உலகில் எத்தனைபேர் இருக்கின் றனரோ அத்தனைவிதமான காரணங்களும் அத்துன்பங் களுக்கு அடிப்படையா யிருப்பவைகள் போன்று தென்படும். கடவுளை நொந்துகொள்ளுதலிலேயே ஒவ்வொருவரும் ஒவ் வொருவிதக் காரணத்தை எடுத்துக்காட்டுவர். அவரவர் காட்டுகிற காரணம் உண்மைக்கு முற்றிலும் ஒத்தது என்று தோன்றுகிறது. துயரப்படுவோரிடத்து அனுதாபங் காட்டி அவர்களுடைய துயரங்களை விளக்கும்படி ஏவினுல் எத்தனை எத்தனை விதக் காரணங்களும் யுக்தி வகைகளும் வெளியாகின்றன வென்பது வியப்புக்குரிய விஷயமாகும். இப்படி மனே விகாரங்கள் பலதரப்படுவதைக் குறித்து ஏதென்று சொல்லுவேன் எனத் தாயுமானவர் முறையிடு கின்ருர்.

பிறப்பெடுத்துள்ள உடல் அதற்குரிய மாறுபாடுகளை ஓயாது பெற்றுவருகிறது. சிறியவுடல் பெரிய உடலாக வளர்கிறது; வளர்ச்சியில் அது உச்சநிலை யெட்டுகிறது. பிறகு அது சிறிது சிறிதாகத் தேய்கிறது. இறுதியில் அது மறைந்துபட்டுப்போகிறது. எனவே உடலின்கண் உண்டா கிற மாறுதல்களில் மலைவு அல்லது முரண்பாடு இல்லை. ஆனுல் மனேவிகாரத்தை முன்னிட்டு மனதில் வருகிற உணர்வு களோ எண்ணிறந்தவைகள். ஒரு வேளையிலிருக்கின்ற உணர்வு மற்ருெரு வேளையில் இருப்பதில்லை. துன்புறுத்துதற் குக் காரணமாயிருப்பது வேளைக்கு வேளை மாறியமைகிறது.

ஒருவேளையில் துன்புறுத்துகிற ஓர் உணர்வு மற்றொரு வேளை யில் சமாதானம் கூறுவது போன்றும், ஏதோ சிறிதளவு இன்பம் தருவது போன்றும் தென்படுகிறது. ஆதலால் துய ருறுவோர்களுடைய மனோவிகாரத்தில் எந்தவிதமான ஒழுங் குப்பாட்டையும் காணமுடியாது. ஒருவேளையிலிருக்கிற மனநிலை மற்றொரு வேளையிலிருக்கிற மனநிலைக்கு முரண்பட் டது போன்று தென்படும். மன வேதனையை சரியாகக் கணக்கெடுத்துச் சொல்லுவதுதான் அரிதிலும் அரிது. தொடர்ந்து உணவை உண்டு உடல் வளர்ந்து வருவது போன்று உணர்ச்சியின் விளைவாக மனது செப்பனிடப்படு கிறது என்றோ, சீர்கேடு அடைந்து வருகிறது என்றோ யாருமே அறுதியிட்டுக் கூறமுடியாது. இக்கருத்தை **முன் னொடு பின் மலைவு அறவும் இற்றைவரை யாது பெற் றேன்,** என்கிறார் தாயுமானவர். நான் ஏதாவது நலனைப் பெற்றிருக்கின்றேனா அல்லது கேடுற்றவன் ஆய்விட்டேனா என்று உறுதி கூறமுடியாதபடி என்னுடைய மனநிலையில் விரோதபாவங்கள் தோன்றியுள்ளன என்பது அதன் கருத்து.

எரிந்து கொண்டிருக்கிற பந்தத்தில் மெழுகை வைத் தால் அது உருகுகிறது. உருகிய பகுதி எண்ணெய் போன்று இளகி பந்தத்தைக் கொழுந்துவிட்டு எரியச் செய் கிறது. மெழுகோ தனது வண்ணத்தையும் வடிவத்தையும் விரைவில் இழந்து வருகிறது. தான் நாடுகிற குறியை மனிதன் அடையப்பெறாவிட்டால் அவனுடைய உள்ளம் மெழுகு போன்று உருகுகிறது. அதற்கேற்றவாறு உடல் வாட்டம் அவனுக்கு உண்டாகிறது; ஆற்றல் தேய்கிறது; நற்காரியம் எதற்கும் அவன் உதவாதவன் ஆகிறான். மனத் துயரத்துக்கு ஒப்பான சத்துரு மனிதனுக்கு இல்லை. படிப் படியாக அது அவனை ஒடுக்கி விடுகிறது. இக்கருத்தை

பந்தமானதில் இட்ட மெழுகு ஆகி உள்ளம் பதைத்துப் பதைத்து உருகவோ என்கின்ருர் தாயுமானவர்.

சாதாரண வாழ்க்கையில் நியதி ஒன்று உண்டு. அதாவது துன்பத்தைத் துய்க்காது மனிதனுக்கு இன்பம் வாய்ப்பதில்லே. இம்மண்ணுலக வாழ்வில் துன்பம் என்னும் விலே கொடுத்தாலன்றி இன்பத்தைப் பெறமுடியாது. ஒருவேளே அந்த நியதிக்கு உட்பட்டுத்தானே தமக்கு வாழ்வெல்லாம் பெரும் துயரமாய் வடிவெடுத்திருக்கிறது என அவர் வியப்புறுகிருர். இனி அதன் விளேவாக பரம சுகமாவது சாத்தியப்படுமா, என்கின்ற ஐயம் அவர் உள்ளத்தில் எழுகிறது. மற்ருெரு சந்தேகமும் அவர் மனதில் வருகிறது. துயரம் ஓரளவுக்கு மேலே போய்விட்டால் அதைப் பொறுக்க முடியாமல் மனிதன் மூர்ச்சைபோய் விடுவதுண்டு. தாங்க முடியாத காய்ச்சலோ, வயிற்றுவலியோ வந்துவிட்டால் மனிதன் மூர்ச்சை போட்டு விடுகிருன். கொஞ்ச நேரத்துக்குப் பிரக்ஞையற்றுக் கிடக்கின்ருன். அப்படிப் பிரக்ஞையற்றுக் கிடப்பதே அவனுக்கு ஒருவித ஆறுதல் போன்றது ஆகிறது. தூங்கும் பொழுது உலகத் துன்பங்களே யெல்லாம் மனிதன் மறந்திருப்பதுபோன்று பிரக்ஞையற்றுக் கிடக்கின்ற பொழுதும் அவன் துன்பங்களேயெல்லாம் மறந்திருக்கின்ருன். பரம சுகமாவதற்கு பொறுப்பரிய துயரமாய்ப் பலகாலும் மூர்ச்சிப்பதோ ? என்று அண்ணல் வினவுகிருர்.

பல தடவைகளில் மனிதன் தனது சொந்த மனப்பான்மையைச் சரியாகத் தெரிந்துகொள்வதில்லே. தான் நாடுவது ஒன்று இருக்க, வேறு ஒன்றை நாடுபவன் போன்று மனிதன் நடந்துகொள்ளுகின்ருன். அத்தகைய முரண்பாடு மனதினில் புகுந்துவிடுமாகில் அவன் எவ்வளவுதான் முயற்சியெடுத்துக் கொண்டாலும் தான் நாடுகிற நாட்டம்

நிறைவேருதுபோய்விடும்.உண்மையில் மனிதனுக்கு உள்ளத்தினுள் உலகப்பற்று ஆழ்ந்து பிடித்துக்கொண்டிருக்கிற பொழுது தெய்வப்பற்று தனக்கு வந்திருப்பதாக அவன் பாசாங்கு செய்யலாம். அத்தகைய பாசாங்கை உச்சநிலைக்குக் கொண்டு போய் அவன் அழவும், வாடியிருக்கவும், மூர்ச்சைபோகவும் இவைபோன்ற இன்னும் பல மன வேதனைகளுக்கும் ஆளாகலாம். அப்படித் துன்புறுவதன் மூலம் முரண்பட்ட நோக்கம் வாழ்வில் ஒருபொழுதும் நிறை வேருது. தமது மனதிலே அத்தகைய கோணல் வந்து விட்டதோ என்பதைத் தமக்குத்தாமே தெளிவுபடுத்திக் கொள்ளுதற்பொருட்டு சிந்தையானதும் அறிவை என்று தெய்வத்திடத்து அவர் விண்ணப்பிக்கிருர். என் மனதில் இருப்பது யாது என்பதை நான் அறிந்திருப்பதை விட இறைவா, நீ நன்கு அறிகிருய் என்பது இதன் கருத்து.

அறிவு படைத்தவனுயிருப்பது மனிதனது சிறப்பு இயல்பு ஆகும். மற்ற உயிர்களுக்கெல்லாம் அவன் மிக்கானுக இலங்குதற்குக் காரணம் அவனிடத்துள்ள அறிவே யாம். அறிவைப் பயன்படுத்தி நல்லது எது, கெட்டது எது என்று மனிதன் தீர்மானிக்கிருன். அவனுடைய அறிவுக்கு நல்லதென்று தென்படுவது பல தடவைகளில் நல்லது அல்லாததாய் விடுவதுண்டு. கொலை, களவு முதலியன செய்வதில் கேடு ஒன்றுமில்லை. நலமே வாய்க்கும் என்று சிலருடைய அறிவுக்கு எட்டுகின்றது. அதற்கேற்ற யுக்திகளையும் காரண காரியங்களையும் அன்னவர்களுடைய அறிவானது எடுத்து விளக்கவல்லதாகிறது. ஆனல் மானுட அறிவுக்கு அறிவாய் அதிலும் மிக்கதொரு அறிவு மானுட உள்ளத்தினுள்ளேயே அடிப்படையாக இலங்கிக்கொண்டிருக்கிறது. தோன்ருத நிலையிலிருக்கிற மின்சக்தியின் துணைகொண்டு

மின்விளக்கு மிளிர்வது போன்று அடிப்படையிலிருக்கும் பேரறிவின் துணைகொண்டே மானுடனது சிற்றறிவு மிளிர் கிறது. நலம் கேடுகளைப் பாகுபடுத்துதலில் மானுடச் சிற்றறிவு முறைதவறிப் போய் விடலாம். ஆனால் மானுட அறிவுக்கும் அறிவாய் இருக்கிற அடிப்படை அறிவோ ஒரு பொழுதும் தவறிப்போய் விடுவது கிடையாது. அந்த அடிப் படை அறிவே பரம்பொருள் எனப்படுகிறது. மானுட அறி வுக்குத் தோற்றம், வளர்ச்சி, தேய்வு, மறைவு முதலியன உண்டு. அடிப்படை அறிவுக்கோ தோற்றமும், வளர்ச்சியும், தேய்வும், மறைவும் இல்லை. அது யாண்டும் இருந்தபடி இருக்கிறது. மனசாட்சி என்று சொல்லப்படுவதும் அதுவே. அப்பேரறிவுடன் மனிதன் தன்னை இணைத்துக் கொள்ளத் தெரிந்து கொள்வானாகில் அவன் யோகத்தில் நிலைபெற்ற வனாகிறான்; நல்வாழ்வில் உறுதி பெற்றவனுமாகிறான்; முயற்சிகளையெல்லாம் சரியாகக்கொண்டு செலுத்துபவனும் ஆகிறான். அப்பேரறிவினிடத்து என் அறிவில் அறிவான தெய்வம் நீ யன்றி உளதோ? என்று தாயுமானவர் விண் ணப்பிக்கின்றார். அப்பேரறிவிடத்திருந்து வரும் ஆதேசமே அருள் என இயம்பப்படுகிறது. அதனோடு இணக்கம் வைக் கத் தெரிந்துகொண்டவன் நடுநிலையை எட்டியவனாகின்றான்; தெய்வத்தோடு இணக்கம் வைத்தவனாகிறான்; தெய்வத்திட மிருந்து நல்லுத்தரவைப் பெற்றவனுமாகிறான். ஆனால் அவ் விணக்கத்தில் உறுதி பெற்றிருப்பது மனபரிபாகம் அடையப் பெறாதவர்களுக்குச் சாத்தியமல்ல. மின்னல் போன்று இடையிடையே அப்பேரிணக்கம் அல்லது யோகம் கைகூடு கிறது; பிறகு கைநழுவிப் போய்விடுகிறது.

யோகத்தை உறுதிப்படுத்துவதற்கு மற்றோர் உபாயம் இருக்கிறது. அநித்தியத்தைக்கொண்டே மனிதன்

நித்தியத்தைப் பெறுகிறான். நல்லறிவு வாழ்வு முழுதுக்கும் பொருந்துகிற நித்திய வஸ்து எனலாம். பள்ளிக்கூட வாழ்வோ அநித்தியமானது. ஆனால் அநித்தியமாயுள்ள பள்ளிக்கூட வாழ்வின் துணைகொண்டே நித்தியமாயுள்ள நல்லறிவைப் பெறுகிறோம். மானுட சரீரம் அநித்தியமானவைகளுள் மிகமிக அநித்தியமானது. நீர்க்குமிழி போன்று எப்பொழுது வேண்டுமானாலும் அது அழிந்துபட்டுப் போகலாம். இருக்கும்பொழுதும் அது ஓயாது தகனமாய்க்கொண்டிருக்கிறது. அக்காரணத்தை முன்னிட்டே தேகம் என்னும் பெயர் அதற்கு வந்துள்ளது. தேகத்தை வைத்துக்கொண்டே தேகி ஆகிய ஆத்மனை அடைந்தாகவேண்டும். தேகம் நிலையற்றது என்பதை மனிதன் எவ்வளவுக்கெவ்வளவு தனக்குத்தானே ஞாபகம் ஊட்டிக்கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அந்த தேகத்தால் ஆகவேண்டிய காரியங்களை அப்போதைக்கப்போதே அவன் செய்து முடிக்கிறான். காற்றுள்ளபொழுதே தூற்றிக்கொள்வதுபோன்று நிலையற்ற உடல் இருக்கும்பொழுதே நிலையாய தெய்வத்தை மனிதன் அடைந்தாகவேண்டும். இக் கோட்பாட்டை தேகம் நிலையல்லவே என்கின்றார் தாயுமானவர்.

புதியதாக அமைக்கப்பெற்றிருக்கிற உறுதியான கப்பல் ஒன்றைக் கொந்தளிப்பான கடலில் துணிந்து செலுத்தலாம். ஆனால் பெரிதும் பழுதுபட்டுப்போன கப்பலோ நெடுந்தூரம் கடலுக்குள் செலுத்துதற்கு உதவாது. இனி, கடலில் புயலும் கொந்தளிப்பும் திடீரென்று கிளம்பிவிட்டால் பழைய கப்பல் உடைந்துபட்டுப் போவது திண்ணம். அதே விதத்தில் மானுட சரீரம் இளமையும் திட்பமும் வாய்க்கப்பெற்றிருக்கிறபொழுது போகத்துக்கும் நன்கு பயன்படுகிறது, யோகத்துக்கும் நன்கு பயன்படுகிறது.

ஆத்ம சாதனங்கள் செய்து வாழ்வை மேலானதாகத் திருத்தியமைக்க விரும்புகிறவர்கள் உடல் இளமையும், உறுதியும் உடைத்திருக்கும்பொழுதே அத்தகைய செயற்கரிய செயல்களையெல்லாம் செய்து சாதித்தல் வேண்டும். விருத்தாப்பிய தசையில் கடினமான ஆத்மசாதனங்களுக்கு உடல் இடந்தராது. இக்கருத்தை உடை கப்பல் கப்பலாய் திரையாழியூடு செலுமோ? எனத் தாயுமானவர் வினவுகிறார். அதேவிதத்தில் தளர்வுற்றிருக்கும் மேனி அரிய ஆத்ம சாதனத்துக்கு உதவாது.

தந்தைக்கும் மைந்தனுக்கும் உள்ள தொடர்வை எக்காரணத்தைக்கொண்டாவது பிளவுபடுத்த முடியாது. புதியதாகச் சந்தித்து நெருங்கிய நண்பர்களாக இருவர் உறவாடலாம்; திரும்பவும் அவர்கள் பிரிந்து ஒருவரை ஒருவர் புறக்கணித்துவிடலாம்; அல்லது மறந்துவிடலாம். ஆனால் தந்தைக்கும் மைந்தனுக்கும் உள்ள தொடர்வை அப்படிப் பிரிக்கவும் முடியாது; மறக்கவும் முடியாது. தந்தையின் சொரூபமே மைந்தன் சொரூபமாக வடிவெடுத்து வந்திருக்கிறது. நதி ஒன்று உற்பத்தி ஸ்தானத்தை எப்படி மறுக்கவோ, மறைக்கவோ முடியாதோ அப்படி மைந்தனைத் தனக்கு வேற்றான் என்று தந்தை சொல்ல முடியாது; தந்தையைத் தனக்கு வேற்றான் என்று மகன் சொல்லமுடியாது. யாது காரணத்தாலோ தந்தையும் மகனும் நெடுநாள் பிரிந்திருக்கவேண்டிய நெருக்கடி நேர்ந்துவிட்டது. அப்படிப் பிரிந்து வாழ்ந்து வருகிற மகன் ஓரிடத்தில் வேற்றான் கையில் அகப்பட்டுக்கொண்டு பல துன்பங்களுக்கு ஆளாய்க்கொண்டிருந்தான். அவ்வேளையில் அகஸ்மாத்தாகத் தந்தை அவ்விடத்துக்கு வந்துசேர்ந்தான். மகன் தந்தையை அடையாளம் தெரிந்துகொண்டான். தனது பரிதாபகரமான நிலையைத் தந்தையிடம்

அழுது தெரிவித்தான். அப்பொழுது தந்தை மகனை அடையாளம் தெரிந்துகொள்ளவில்லை யென்று துணிந்து சொல்ல மனம் வருமா? மகனைக் காப்பாற்றுதற்குப் பொருள் தன்னிடத்து இல்லையென்று பகர்தற்கு வாய் வருமா? மகன் எப்படியோ ஒழிந்துபட்டுப்போகட்டும் என்று புறக்கணித்து விட்டுத் தன்போக்கில் போவதற்குத் துணிவு தந்தைக்கு வருமா? எந்த விதத்திலாவது மகனுக்குத் துணைபுரிந்தே யாகவேண்டும் என்னும் எண்ணமும் இரக்கமும் தகப்ப னுக்கு வந்துவிடும். இது உலக இயல்பு. இனி, ஜீவாத்ம னுக்கும் பரமாத்மனுக்கும் உள்ள இணக்கம் இதிலும் நெருங் கியது. தந்தைக்கும் மகனுக்கும் உள்ள தொடர்வு ஒரு ஜன் மத்துக்குரியது. ஜீவாத்மனுக்கும் பரமாத்மனுக்கும் உள்ள தொடர்வு என்றென்றைக்கும் உள்ளது. அலை யாண்டும் கடலைச் சார்ந்திருப்பதுபோன்று ஜீவாத்மன் பரமாத்மனைச் சார்ந்திருக்கிறான். பரமாத்மனே கருணைக் கடல். அத்த கையவர் ஜீவாத்மனைப் பரிந்து உய்விக்கக் கடமைப்பட்டி ருக்கிறார். இக்கருத்தை சொந்தமாய் ஆண்ட நீ அறி யார்கள் போலவே துன்பத்தில் ஆழ்த்தல் முறையோ? எனத் தாயுமானவர் வெளியிடுகிறார். இக்கருத்துக்கள் யாவும் அடங்கிய பாடல் இது.

## 12. சுகவாரி

எந்நாளும் உடலிலே உயிராம் உனைப்போல்
இருக்கவிலை யோமனதெனும்
யானுமென் நட்பாம் பிராணனும் எமைச்சடம
தென்றுனைச் சித்தென்றுமே
அந்நாளி லெவனே பிரித்தான் அதைக்கேட்ட
அன்றுமுதல் இன்றுவரையும்
அநியாய மாயெமை யடக்கிக் குறுக்கே
அடர்ந்தரசு பண்ணிஎங்கள்
முன்னாக நீஎன்ன கோட்டை கொண்டாயென்று
மூடமன மிகவும்ஏச
மூண்டெரியும் அனலிட்ட மெழுகா யுளங்கருகல்
முறைமையோ பதினுயிரஞ்
சொன்னாலும் நின்னரு ளிரங்கவிலை யேஇனிச்
சுகம்வருவ தெப்படிசொலாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே.

மொழியமைப்புக்கும் மானுட சொருப அமைப்புக்கும் இடையில் நெருங்கிய தொடர்வு இருக்கிறது. மொழி எப்படி யமைந்திருக்கிறதோ அப்படி மனிதனிடத்துள்ள தத்துவங்கள் அமைந்திருக்கின்றன. மொழியில் உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் இருக்கின்றன. மெய் என்னும் சொல் உடல் எனவும் பொருள்படுகிறது. உடலைக் கருவியாக வைத்துக்கொண்டு உயிர் அதில் ஒளிர்கிறது. மொழியமைப்பிலே உயிரெழுத்துக்கள் மெய்யெழுத்துக்களின் மேலேறி உயிர் மெய்யெழுத்துக்கள் ஆகின்றன. உயிரெழுத்துக்களும்

மெய்யெழுத்துக்களும் எண்ணிக்கையில் அதிகரிக்குமளவு ஒலிகளை வேண்டியவாறு விரித்துக்கொண்டே போகலாம். ஒலிகள் பலதரப்பட்டவைகளாக விரிந்திருக்கும் மொழிக ளெல்லாம் முன்னேற்றமடைந்துள்ள மொழிகளாம். ஒலி களின் வடிவங்கள் குறையுமளவு மொழியும் குறுகியதாய் விடுகிறது. மலைப்பிரதேசங்களில் வசிக்கும் பூர்வீக மக்களுக் கிடையில் வழங்கி வருகிற மொழிகளில் ஒலிகள் மிகக் குறைந்திருக்கின்றன. ஆதலால் அம்மொழிகளிலே சொற் கள் மிகக் குறைவு. சொற்கள் குறைந்திருக்குமளவு கருத் துக்களும் குறைந்து போய்விடுகின்றன. கருத்துக்கள் குறைந்த சமுதாயங்கள் முன்னேற்றமடையாதவைகள் எனக் கருதப்படுகின்றன. உயிரும் மெய்யும் சேர்ந்து மொழிகள் ஆவது போன்று, உயிரும் மெய்யும் சேர்ந்து ஜீவகோடிகள் ஆகின்றன. பிரபஞ்சத்தில் எண்ணிறந்த ஜீவகோடிகள் இருக்கின்றன. அவைகள் பொதுவாக நடப்பன, பறப் பன, நீர்வாழ்வன எனப் பிரிக்கப்பட்டிருக்கின்றன வெனி னும் எண்ணிக்கையில் அடங்காத உடல் வகைகள் அவைகளுக்கு இருக்கின்றன. அத்தனைவித உடல்களுள் மானுட உடலும் ஒன்று. உடலில் உயிர் ஒளிர்ந்து கொண் டிருக்கிறது. உடலை விட்டு உயிர் விலகிவிடுமாகில் உடல் பிணமாகிவிடுகிறது. உடலுக்குச் சுய உணர்வு இல்லை; சுய இயக்கமும் அதற்கு இல்லை. உயிரால் உடல் இயக்கப் படுகிறது. சமயதரிசனங்களில் உயிர் என்பது ஆத்மா என அழைக்கப்படுகிறது. உடலோ பஞ்சபூதங்களாலாகிய ஜடப் பொருளாகக் கருதப்படுகிறது. ஆத்மா சேதனப்பொருள்; சரீரம் ஜடப்பொருள். ஆத்மாவுக்கு உணர்வு உண்டு; சரீரத் துக்கு உணர்வு இல்லை. ஆத்மாவுக்கும் தேகத்துக்கும் இடை யில் மனம் பிராணன் என்னும் இரண்டு தத்துவங்கள்

இருக்கின்றன. இடைநிலையிலிருப்பதால் மனதும் பிராண னும் சிலவேளைகளில் ஜட உடலின் இயல்பை எடுத்துக் கொள்கின்றன. வேறு சில வேளைகளில் ஆத்மாவின் சேத னத்தை எடுத்துக்கொள்கின்றன. ஆயினும் மனதும் பிரா ணனும் ஜடப்பொருள்களாகவே ஐதிகமாகக் கருதப்பட்டு வருகின்றன.

மனதை உடையவன் மனிதன். அப்பெயரே காரணப் பெயராக அவனுக்கு அமைந்திருக்கிறது. மனதை உடைத் திருக்கும் ஆத்மன் ஜீவாத்மன் எனக் கருதப்படுகிறுன். பர மாத்மன் யாண்டும் சுத்த சித் சொருபம் என்றும் ஜீவாத்மன் பரமாத்மாவிடத்திருந்து வாங்கிக்கொண்ட பிரகாசத்தால் ஒளிர்வதால் சித் ஆபாசன் என்றும் இயம்பப்படுகிறுன். சூரியன் போன்றவன் பரமாத்மன்; சந்திரன் போன்றவன் ஜீவாத்மன். சூரியனிடத்திருந்து வாங்கிக் கொண்ட வெளிச் சத்தால் சந்திரன் ஒளிர்கிறுன். ஆனல் சந்திரனுக்கு சுயப் பிரகாசம் இல்லை. அதே விதத்தில் மனதுடன் கூடியிருக்கிற ஜீவாத்மனுக்கு சுய சைதன்யம் இல்லை எனக் கருதப்படு கிறது. இதையெல்லாம் முன்னிட்டு பரமாத்மனிடம் முறை யிடுவது போன்று ஜீவ அமைப்பைக் குறித்து எந்நாளும் உடலிலே உயிராம் உனைப்போல் இருக்கவில்லையோ என்று தாயுமானவர் இயம்புகிறுர். பரமாத்மனுகிய நீ எப்படியிருக் கின்றுயோ அப்படியே ஜீவாத்மனுகிய நானும் இருந்து வருகிறேன் அல்லவா? என்பது இதன் கருத்து.

ஆனல் ஐதிகமாக ஜீவாத்மன் வேறு, பரமாத்மன் வேறு என்று பிரித்து வைக்கப்பட்டிருக்கிறது. முற்றிலும் சுத்த சைதன்யமாயிருப்பது, அல்லது சித்சொருபமாயிருப்பது பரமாத்மன். மனதிலே அந்த சித்சொருபம் பிரதிபிம்பிக்கிற பொழுது பிரதிபிம்பம் சித்+ஆபாசம்=சிதாபாசம் எனப்

படுகிறது. சித்சொரூபத்தினுடைய வெறும் தோற்றம் என்பது அதன் பொருள். சூரியன் இருக்கிறது. சூரியனுடைய பிம்பம் நிலைக்கண்ணுடியில் இருக்கிறது. இந்த பிம்பமானது மூலசூரியனுக்கு நிகராக ஒளிர்கிறது. தோற்றத்தளவில் இது சூரியனேயொழிய சூரியன் என்னும் மூல வஸ்து அல்ல. கண்ணுடியில் தென்படுகிற சூரியனுக்கு நிகர் ஜீவாத்மன். அசல் சூரியனுக்கு நிகர் பரமாத்மன். பரமாத்மனுடைய சைதன்யம் ஜடவஸ்துவாகிய மனதில் பிரதிபிம்பிக்கிறது. அந்த மனதுக்கு அடுத்தபடியாக பிராணன் என்னும் தத்துவம் இருந்து உயிர் வாழ்க்கை என்பதை இயக்குகின்றது. ஆக, ஜீவாத்மன் எனப்படுவது உடல், அந்த உடலினுள் சூட்சுமமாக இருக்கிற உள்ளம் அல்லது மனது, வாழ்வை இயக்குகின்ற பிராணன், இம்மூன்றின் சேர்க்கையாக அமைந்த வடிவத்தில் பிரதிபிம்பிக்கிற சைதன்யம், ஆகிய இத்தனையும் சேர்ந்த கூட்டுப்பொருள் ஆகிறது. ஜீவாத்மனுடைய ஜீவவியக்திக்கு ஏதுவாயிருப்பவைகள் மனமும் பிராணனும். இக்கருத்துக்களை **மனது எனும் யானும் என் நட்பாம் பிராணனும் எமைச் சடமது என்றும்** — இப்படித் தாயுமானவர் இயம்புகின்ருர். இனி, பரமாத்மனை, **உனைச் சித்தென்றுமே** எனவும் அவர் கூறுகிருர்.

இப்படி ஜீவாத்மனையும் பரமாத்மனையும் பாகுபடுத்துவது நியாயமா என்னும் கேள்வி பிறக்கிறது. இந்தப் பாகுபாட்டைச் சரியாக அறிந்துகொள்ளுதற்கு உலக மக்களுக்கிடையிலிருக்கும் லெளகிகப் பழக்க வழக்கம் ஒன்றை சான்ருக எடுத்துக்கொள்ளலாம். மக்களுக்கிடையில் உயர் குலத்தில் பிறந்தவர் என்பார் இருக்கின்றனர்; இழிகுலத்தில் பிறந்தார் என்பாரும் உளர். இந்த லெளகிகப் பழக்க

வழக்கம் ஒன்றையும் அறியாத வெளிநாட்டான் ஒருவன் வந்து இம்மக்கள் கூட்டத்தைப் பார்க்கிறபொழுது அவனுக்கு உயர் குலம் இழி குலம் ஒன்றும் புலனுகாது. மக்கள் கூட்டம் என்பதுதான் அவனுக்கு விளங்கும். ஆங்கிலேயர்கள் இந்தியாவைப்பிடித்து ஆள ஆரம்பித்தபொழுது பார்ப்பனர், பறையர் ஆகிய இருதரத்தாரையும் தங்கள் காரியத்துக்குப் பயன்படுத்திக் கொண்டனர். சமைப்பதற்கும், குற்றேவல் புரிதற்கும் பறையர்களைப் பயன்படுத்தினர்; குமாஸ்தா வேலைக்கு பார்ப்பனரைப் பயன்படுத்தினர். ஆனுல் மக்கள் என்னும் கருத்துக்கு ஒப்ப இருதரத்தாரையும் ஆங்கிலேயர்கள் கண்ணியமாகவே நடத்தினுர்கள். கண்ணியமாக நடத்தினதன் விளைவாகப் பறையர்கள் எனப்படுபவர் பண்பிலும் படிப்பிலும் ஆற்றலிலும் படிப்படியாக மேலே வந்துவிட்டனர். இதிலிருந்து உண்மையொன்று விளங்குகிறது. ஆதியில் இனவேற்றுமை மனப் பண்பாட்டை முன்னிட்டு அமைந்தது. தங்களை ஆத்மசொருபமாக, சித்சொருபமாக, பிரம்ம சொருபமாகக் கருதுகிறவர்கள் பிராம்மணர். தங்களைப் புலாலால் அமைந்துள்ள உடல் சொருபமாகக் கருதுகிறவர்கள் புலையர்கள், அல்லது பறையர்கள். இந்த இரண்டு கோடிகளுக்கும் இடையிலே அவரவர் மனபரிபாகத்துக்கு ஏற்ப பலப்பல ஜாதியினர் அமைவாராயினர். வசதிக்காக வென்று அமைந்துள்ள இந்தப் பாகுபாடு மனிதனது முன்னேற்றத்துக்கே தடையாக மாறிவிட்டது. பயிரைப் பாதுகாப்பதற்கு வேலி கட்டுகிறேம். பயிரைப் பெரியதாக வளரவிடாது வேலி தடுக்குமாகில் அவ்வேலியை உடைத்தெறிய வேண்டும். நம் நாட்டில் அமைந்திருந்த பொருளற்றதும், கட்டுப்பாடானதுமாகிய ஜாதிவேற்றுமைகளை அகற்றுதற்கு ஆங்கிலேய ஆட்சி பெரிதும் பயன்பட்டது. தத்து

வத்தின்படி உடல் வாழ்க்கையிலேயே ஊன்றி நின்றுவிடுகிற வர்கள் புலையர்கள். ஆத்ம சைதன்யத்தை நாடுமளவு அப்படி நாடுபவர் தெய்வப்பெற்றி வாய்ந்தவர் ஆகின்றனர். மக்களைக் கீழோர் என அடக்கி அமுக்கி வைத்தலில் நலன் ஒன்றும் விளையவில்லை. ஜீவாத்மனை ஜடம் அதாவது உணர்ச்சியற்றது என்று ஓயாது கருத்தில் வாங்கிக்கொண்டிருப்பதில் நலம் ஒன்றும் விளைவதில்லை. ஆகையினல்தான் தாயுமானவர் எம்மை ஜடம் என்றும் உன்னை சித்து என்றும் அந்நாளில் எவனே பிரித்தான் என்கிறர்.

மனிதனுடைய சிற்றியல்பை அவனுக்கு ஞாபகமூட்டுமளவு அவனுடைய வாழ்வு சிறுமையடைந்துவிடுகிறது. அவனுடைய பேரியல்பை அவனுக்கு ஞாபகமூட்டுமளவு அவன் பெருமகன் ஆகிறன். உலகவாழ்வில் நாம் காணும் உண்மை இது. இவ்வுண்மை பாரமார்த்திக வாழ்வுக்கும் பொருந்தியதாகிறது. தன்னைக் கட்டுண்டு கிடக்கும் ஜீவாத்மன் எனக் கருதுகிறவன் கட்டுண்டவனகவே யிருக்கிறன். ஆட்டுமந்தையிலே புலி ஒன்று குட்டிபோட்டுவிட்டு மடிந்து போயிற்று. புலிக்குட்டியை ஆட்டுக்குட்டிகளோடு சேர்த்து இடையன் வளர்த்து வந்தான். சகவாசத்தை முன்னிட்டு புலிக்குட்டி தன்னை ஆட்டுக்குட்டி என்று எண்ணிக் கொண்டது. தனது சொந்த இயல்பை அது மறந்துவிட்டது. ஆடு போன்று அது புல் தின்றது; ஆடுபோன்று அது கத்தியும் பழகியிருந்தது ; ஆடுபோன்று அச்சம் நிறைந்த வாழ்வையும் அது வாழ்ந்து வந்தது. அங்ஙனம் ஜீவாத்மன் ஜடநிலை என்னும் புன்மையிலேயே உழன்று கிடக்கும்படி போதிக்கப் பட்டிருக்கிறன். கட்டுண்டு கிடக்கின்ற பத்தாத்மா என்று அவன் தன்னைக் கருதிக்கொள்கிறன். துன்பங்கள் பலவற் றிற்குத் தான் ஆளாயிருப்பதாகவும் அவன் எண்ணிக்கொள்

கிருன் ; பிறவிப் பிணியில் தான் பிணைக்கப்பட்டிருப்பதாக வும் எண்ணிக்கொள்கிருன். புலிக்குட்டி தன்னை ஆட்டுக் குட்டியென போதிக்கப்பட்டிருப்பது போன்று ஜீவாத்மன் ஜடமயம் என்று போதிக்கப்பட்டிருக்கிருன். அதனுல் விளைந்த கேடுகளையெல்லாம் தொகுத்து அதைக் கேட்ட அன்றுமுதல் இன்றுவரையும் அநியாயமாய் எமை அடக் கிக் குறுக்கே அடர்ந்து அரசுபண்ணி என் கண்முன்ளுக நீ என்ன கோட்டை கொண்டாய் என்று மூடமனம் மிகவும் ஏச என்று தாயுமானவர் இயம்புகிருர்.

உலக வாழ்க்கையில் பொதுமக்களுடைய உழைப்பை முறைதவறி மிகைபடப் பயன்படுத்திச் சொத்து சுதந் தரத்தை ஏராளமாகத் தேடிக்கொள்பவர்கள் உண்டு. ஆனல் பிறர்க்கு இன்னுதனை விளைவித்துச் சேகரிக்கிற செல்வத்தை யாரும் வைத்து அனுபவிக்க முடியாது. அடிமை வாழ்வு வாழ்ந்து அலுத்துப் போயிருக்கிறவர் களுக்கு ஒருகாலம் இல்லாவிட்டால் ஒருகாலத்தில் உள்ளத் தில் உணர்ச்சி உண்டாகிறது. அப்படி அடிமைப்பட்டிருக் கிறவர்கள் கிளர்ச்சியைக் கிளப்புவது முறையே. தன்னையும் தன்னுடைய நண்பனுகிய பிராணனையும் அடிமைப்படுத்த லாகாது என்று மனதானது முறையிடுகின்றது. தத்துவ அமைப்பில் மனதை மனைவியாக வைத்துக்கொண்டால் ஜீவாத்மனை அதன் கணவனுகக் கருதலாம். ஓர் எஜமான னிடம் கணவனும் மனைவியும் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக் கின்றனர். மனைவி தனக்கு இட்டிருக்கிற மிகைபட்ட பணி விடைகளை யெல்லாம் எஜமானனிடம் எடுத்துரைத்துப் புலம்புகிறபொழுது அதைக் கேட்டுக்கொண்டிருக்கிற கண வனுக்கும் உள்ளத்தில் சீற்றம் பொங்கியெழுகிறது. ஆனல் அவனையும் அடக்கியாளுகிற தலைவனுக்கு அஞ்சி தன்

உள்ளக்கொதிப்பையெல்லாம் உள்ளத்தினுள்ளேயே அவன் வைத்திருக்கின்றான். அப்படி ஜீவாத்மனுக்கு வருகிற மனக் கிலேசத்தை மூண்டெரியும் அனலிட்ட மெழுகாய் உளம் கருகல் முறைமையோ என்று தாயுமானவர் கூறுகிறார். தீயில் போட்ட மெழுகுபோன்று ஜீவாத்மன் உருகுகிறான்; வாடி வதங்குகிறான். இப்படி அவனுக்கு ஏற்பட்டுள்ள துயரத்தையும் அடக்க முடியாது வெளியில் எடுத்துரைத்து விடுகின்றான்.

சமுதாயத்தில் சுதந்தரத்துக்காகவும் கண்ணியமான நல்வாழ்வுக்காகவும் கிளர்ச்சிகள் பண்ணுகிறவர்கள் வலிவற்றுக்கிடந்தால் அவர்களுடைய முறையீட்டுக்கு மேல்நிலையிலிருப்பவர்கள் செவி சாய்ப்பதில்லை. துயரப்படுபவர் துயரத்துக்கிடையில் தங்கள் காரியத்தை நிறைவேற்றுதலிலேயே மேன்மக்கள் கண்ணுங் கருத்துமாயிருப்பார்கள். கிட்டத்தட்ட அந்த நிலையில் பரமாத்மா இருப்பதாக வைத்துக்கொண்டு பதினாயிரம் சொன்னாலும் நின் அருள் இரங்கவில்லையே என்கிறார் தாயுமானவர். வாழ்க்கைத் தத்துவம் முழுதும் ஈண்டு விரித்து விளக்கப்படுகிறது. அல்லல்களை அகற்றியாகவேண்டும். துன்பத்தைத் துடைத்தாக வேண்டும் என்னும் கருத்துப்பட இனி சுகம் வருவது எப்படி? சொலாய் என்று அண்ணல் வினவுகிறார். இப்படி இடர்ப்படுகிற முறையீட்டிலும், செய்கிற விண்ணப்பத்திலும், வெளியாக்குகிற துன்பத்திலும் விமோசனத்துக்கு வழியும் அடங்கியிருக்கிறது. மனிதன் படுகிற துன்பத்துக்கு அடிப்படைக் காரணம் அக்ஞானம். உலகில் உயிர்கள் அனைத்தும் படுகிற துன்பத்துக்குக் காரணம் அக்ஞானம். இருட்டறையில் இருந்துகொண்டு இருள் சூழ்ந்திருக்கிறதே, இருள் சூழ்ந்திருக்கிறதே! இதற்கு விமோசனம் இல்லையா?

வெளிச்சம் வராதா? என்று எவ்வளவு காலம் வேண்டுமானு லும் அழுதுகொண்டிருக்கலாம். அழுகையை முன்னிட்டு வெளிச்சம் வராது. வெளிச்சத்தை அங்குக் கொண்டு வருவதற்கான உபாயம் எது என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு அப்படித் தெரிந்துகொண்டதை செயல்படுத்தி வெளிச்சத்தைத் தேடிக்கொள்ளவேண்டும். அப்படியல்லாது ஓயாது அழுதுகொண்டிருப்பதில் பயன் ஒன்றும் இல்லை.

அகர முதல எழுத்தெல்லாம் என்பது ஒலியைப்பற்றிய உண்மை. ஒலி என்று இயம்புமிடத்து அது உயிரெழுத்தை மட்டும் குறிப்பதல்ல; மெய்யெழுத்தும் அதில் அடங்கியிருக் கிறது. ஏனென்றுல் மெய்யெழுத்துக்கு முதற்காரணம் வேறென்று இருப்பதாக எங்கும் இயம்பப்படவில்லை. அ என்னும் ஒலியானது மூல ஓசையாக இருந்துகொண்டு மொழிக்குரிய ஏனைய எல்லாவிதமான ஓசைகளாகப் பரிண மிக்கிறது. ஓசை சொருபமாக பரம்பொருள் இருக்கிறது என்பது கோட்பாடு. பரம்பொருளை சப்த பிரம்மம் என் கிறோம். அந்த சப்தமே பிரணவம் அல்லது ஓங்காரம். ஓங்காரத்தில் அகர உகர மகரமாகிய மூன்று அக்ஷரங்கள் இருக்கின்றன. அவைகளுள் மகரம் மெய்யெழுத்தாகிறது. உயிரற்றது போன்று இருக்கிற மெய்யெழுத்தும் உயிரெழுத் திடத்திருந்தே பரிணமிக்கிறது. ஆக மெய்யெழுத்தில்லாது ஓசை பூர்த்தியாவதில்லை. உயிரெழுத்துக்குக் கொடுக்கிற மதிப்பு மெய்யெழுத்துக்கும் கொடுத்தாகவேண்டும். மானுட அமைப்பில் உயிருக்குக் கொடுக்கிற மதிப்பு உடலுக்கும் கொடுத்தாகவேண்டும். உயிரும் உடலும் சேர்ந்தே மானுட சொருபம் ஆகிறது. இனி, 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்று இயம்புமிடத்து ஆதிபகவன் பரப்பிரம்மத்தைக்

குறிக்கிறது. அது சுத்த சைதன்யம். அத்தகைய சைதன்யமே உலகமாகப் பரிணமித்திருக்கிறது. உலகில் சித் ஆபாசமா யிருக்கிற உயிர் வகைகளும், ஜடமாயிருக்கிற பூதவகைகளும் அடங்கியிருக்கின்றன. ஜடப் பொருள்களாகத் தென்படுப வைகளும் உண்மையில் சேதனத்திலிருந்து வந்தவைகளாம். எது தீப்பற்றி எரிகிறதோ அது தானே தீ மயம். எது சேத னத்துக்கு இலக்கு ஆகிறதோ அது தானே சேதனம். ஜடமா யிருக்கின்ற அனைத்தும் சேதனத்துக்கு இலக்கு ஆகின்றன. எனவே ஜடம்எனக்கருதப்படுவதும் உண்மையில் சேதனமே. சூரியனிடத்துக் கறுப்புப் புள்ளிகள் இருக்கின்றன என் கிறது வானசாஸ்திரம். கறுப்புப் புள்ளிகளில் வெப்பம் குறைந்திருக்கிறது. எனினும் வெப்பம் குறைந்திருக்கிற கறுப்புப் புள்ளிகளும் சூரிய சொருபத்தில் அடங்கியிருக்கின் றன. அதே விதத்தில் ஜடப் பொருள்கள் எனப் பகரப் பெறுபவைகளெல்லாம் உண்மையில் சேதனப் பொருள் களேயாம். தோற்றத்தளவில் அவைகள் ஜடமாகக் காட்சி கொடுக்கின்றன. எந்த நிலைமையிலும் மூலப்பொருள் தன் சொருபத்தை இழந்துவிடுவதில்லை. ஜகத் முழுதுக்கும் மூலப் பொருள் பிரம்ம சைதன்னியம். அதன் சொருபம் அழிந்து பட்டுப்போகாதிருப்பதால் ஜடம் எனப்படுவது உண்மையில் ஜடமல்ல. ஆகாச மனம், பிராணன் என்பவைகளெல்லாம் சித் சொருபத்தின் பலப்பல விகாரங்களாம். புலிக்குட்டி தன்னை ஆட்டுக்குட்டி என்று கருதிக்கொண்டது அறியாமையினால். தான் புலி என்னும் தனது நிஜசொருபத்தைப் பற்றிய ஞானம் வந்ததும் தன் எதார்த்த நிலைக்கு அது திரும்பிவிடு கிறது. தன்னை அடிமை என்றும், கீழ்மகன் என்றும் மயங்கியிருப்பவன் தன்னைப்பற்றிய உண்மையை அறிந்ததும் கீழ்மையை அகற்றிவிட்டுத் தனது யதார்த்த சொருபத்துக்

குத் திரும்பிவிடுகிருன். மனது தன்னை ஜடமென்று கருத வேண்டியதில்லை. பிராணன் தன்னை ஜடமென்று கருத வேண்டியதில்லை. ஐம்பூதங்களும் ஜடமல்ல. ஐம்பூதங்களால் ஆகியிருக்கிற ஆக்கையும் ஜடமல்ல. ஜடமல்லாதது ஒன்று தன்னை ஜடமென்று சொல்லியழுது கொண்டிருப்பதில் விமோசனமில்லை. அந்த மயக்கத்தை உதறித்தள்ளிவிட்டுத் தனது நிஜ சொரூபமாகிய சேதனத்துக்குத் திரும்பவேண்டும். அப்பொழுது வாழ்க்கைப் பிரச்னைகள் அத்தனையும் அகன்று போய்விடுகின்றன. ஆத்ம போதத்தில் விழித்தெழுந்திருப்பதில் சர்வ துக்க நிவர்த்தி உண்டாகிறது.

ஒரு பொருள் முற்றிலும் தன்மயமாயிருக்கிறபொழுது அதை சுத்த வஸ்து என்கின்ருேம். சுத்தம் என்பது தனக்கு அன்னியமாக வேறு எதும் அதில் வந்து சேரவில்லை என்பதாம். சுத்த ஜலம் என்கிருேம். சேற்று நீர், கடல் நீர் முதலியன சுத்த ஜலம் ஆகா. ஏனென்ருல் ஜலத்துக்கு அந்நியமான வஸ்துக்கள் அதில் கலந்திருக்கின்றன. சுத்த ஜலத்தில் வேறு ஒன்றும் கலப்பதில்லை. கறந்தபாலை சுத்தப் பால் என்கிருேம். சுத்த ஜலத்தை சுத்தப்பாலோடு சேர்த்தால் இரண்டும் சேர்ந்து சுத்தப்பாலும் அல்ல, சுத்த ஜலமும் அல்ல. எது முற்றிலும் தன்மயமாயிருக்கிறதோ அது சுத்த வஸ்து. பரப்பிரம்மம் முற்றிலும் தன்மயமாயிருக்கிறது. பிரபஞ்சமாகத் தோன்றுவதெல்லாம் வெறும் பிராந்தி. கயிறு பாம்பாகத் தோன்றுகிறபொழுதும் அது உண்மையில் கயிருகவே இருக்கிறது. பிரம்மம் பிரபஞ்சமாகத் தோன்றுகிறபொழுதும் பிரம்மமே. ஆகையால் அது சுத்த வஸ்து.

பிரம்மத்தை நிர்க்குணப் பிரம்மம் என்றும் சகுணப் பிரம்மம் என்றும் இரண்டாகப் பிரிக்கிருேம். அதனுல் வஸ்துக்கள் இரண்டு ஆகவில்லை. ஒரு வஸ்துவுக்கு இரண்டு

விதத் தோற்றங்கள் உண்டு. சூரிய வெளிச்சத்தை முப்பட்டைக் கண்ணுடியில் செலுத்தினல் ஏழு நிறங்களாக அது தன்னைப் பிரித்துக் காட்டுகிறது. அந்த ஏழு நிறங்களையும் மற்றொரு முப்பட்டைக் கண்ணுடியின் மூலம் குவியச் செய்தால் அது பழையபடி நிறமற்ற வெளிச்சமாய் விடுகிறது. நிறங்களாகப் பிரிகிறபொழுது அது சகுணப் பிரம்மம். நிறங்களெல்லாம் குவிந்து நிறமற்ற மூலநிலையெய்தும் பொழுது அது நிர்க்குணப் பிரம்மம். பிரபஞ்சக் காட்சியை யெல்லாம் ஒடுக்கிய நிலையில் அது நிர்க்குணப் பிரம்மம் எனப்படுகிறது.

அப்பொருள் பரவஸ்து என்றும் பரதெய்வம் என்றும் பகரப்படுகிறது. ஐம்பொறிகளுக்கும் அந்தக்கரணத்துக்கும் புலனுகின்ற அனைத்தும் இகம் என இயம்பப்படுகிறது. எது ஐம்பொறிகளுக்கும் அந்தக்கரணங்களுக்கும் எட்டுவதில்லையோ அதுபரம் எனப் பகரப்படுகிறது. ஆக, பரதெய்வம் என்பது பொறிகளைப் பயன்படுத்துகிற வஸ்துவே; ஆனல் பொறிகள் மூலமாக அதை நுகர முடியாது. ஆத்மா கண்ணைப் பயன்படுத்துகிறது. ஆனல் கண்கொண்டு ஆத்மாவைப் பார்க்க முடியாது. ஐம்பொறிகளையும் பயன்படுத்துகிற ஆத்மா ஐம்பொறிகளில் தட்டுப்படாதிருக்கிறது. எனவே அது பரவஸ்து. தான் இருப்பதற்குத் தானே அத்தாட்சி. இந்திரியங்களுக்கும் அந்தக்கரணங்களுக்கும் ஆங்கு வேலையில்லை. அத்தகையது பரதெய்வம்.

அப்பரதெய்வமே பரஞ்ஜோதி எனப்படுகிறது. சுயஞ்ஜோதி என்றும் அது பொருள்படுகிறது. ஆத்ம சொருபத்தைக் காண்பதற்கு சூரிய வெளிச்சம் பயன்படாது; சந்திர வெளிச்சம் உதவாது; நட்சத்திர வெளிச்சமும் அப்படியே; மின்னல் அதைச் சுட்டிக் காட்டாது; அதை விளக்க அக்னிக்கும் இயலாது. ஆனல் அந்த ஆத்மப் பிரகாசத்தை முகாமை

யாக வைத்துக்கொண்டு இந்தப் பிரபஞ்சப் பிரகாசங்கள் ஒளிர்கின்றன. இவைகளின் ஒளிகளெல்லாம் மாறும் தன்மை யுடைய இகத்தின் ஜோதிகள் ஆகின்றன. மாருத நிலையி லிருக்கிற ஆத்மப் பிரகாசமே பரஞ்ஜோதி எனப்படுகிறது.

தன்னை யாரோ நெஞ்சில் வாளால் ஓங்கிக் குத்திவிட்ட தாக சொப்பனங் கண்ட ஒருவன் பயந்து திடுக்கிட்டு எழுந் திருந்தான். நெஞ்சைத் தொட்டுப் பார்த்தான். கத்தி ஒன் றும் அங்கில்லை; நெஞ்சில் காயமும் ஆகவில்லை. மங்கிய தீப வெளிச்சத்தில் அறையை இங்குமங்கும் திரும்பிப் பார்த் தான். அறைக்குள் ஆள் யாரும் இல்லை. தான் குத்தப்பட வில்லை; சாகவில்லை என்று அவன் உணர்ந்தான். அந்த உணர்ச்சி சுகசொருபம். உண்மையில் ஆத்மா கரைகாணுத கடல் போன்று இந்த சுக சொருபத்திலேயே இருக்கிறது. ஆதலால் அது சுகவாரி எனப்படுகிறது. ஆனந்தக் கடல் என்பது அதன் பொருள். இவையாவும் சேர்ந்து சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்ஜோதியே சுகவாரியே என்னும் சொல்லடுக்கு ஆகின்றன. இக்கருத்துக்கள் யாவும் அடங்கிய பாடல் இது.

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்

1952 ஜனவரி முதல் வெளிவந்துகொண்டுள்ளது

| *ஆண்டு சந்தா* | | *தனி இதழ்* |
|---|---|---|
| உள்நாடு | ரூ. *10-00* | ரூ. *1-00* |
| வெளிநாடு | ரூ. *15-00* | ரூ. *1-50* |

ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் நூறு டிபாசிட்செய்துவிட்டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த முழுத்தொகையாகிய ரூபாய் நூறையும் திரும்பப்பெற்றுக்கொள்ளலாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
***திருப்பராய்த்துறை-639 115***
***திருச்சி ஜில்லா***